கல்கி

KALKI 26.7.98
ரூ. 4.50



அனுராதா ஸ்ரீராம்:

# குங்குமம், திருநீறு, கொஞ்சம் டான்ஸ்...

## அஸ்திவாரம் எங்களுக்கு ஸ்பெஷல்.

உங்கள் வீடு உங்களுக்கு ஸ்பெஷல், தான்.

# அஸ்திவாரத்திற்கான ஸ்பெஷல் சிமெண்டை டால்மியா அறிமுகப்படுத்துகிறது.

**SUPER FOUNDATION™**

CEMENT BY **Dalmia**

உங்கள் வீட்டின் அஸ்திவாரம், நிலத்தடியில் உள்ள இரசாயனப் பொருட்களாலும், உப்புநீர் போன்ற வற்றாலும் மிகுந்த பாதிப்பிற்கு உள்ளாகிறது. இதனால் காலப்போக்கில் வீட்டை தாங்கி நிற்கும் அமைப்புகள் பலவீனமடைகின்றன. இம் மாதிரியான அழிவுகள் நிலத்தடியிலேயே நிகழ்வதால் காலம் கடந்த பின்னரே உங்களுக்கு தெரியவரும். இவ்வழிவு சக்திக ளிடமிருந்து உங்கள் அஸ்திவாரத்திற்கு அதிக பாதுகாப்பு தேவை.

அறிமுகம். **டால்மியா சூப்பர் ஃபவுண்டேஷன்™ சிமெண்ட்.** $C_3A$ குறைவாகவும் டைகால்சியம் சிலிக்கேட் உகந்த அளவும் உள்ள, விஷேசமாக உருவாக்கப்பட்ட சிமெண்ட். இது உங்கள் அஸ்திவாரத்திற்கு ஆயுள் பாது காப்பளிக்கின்றது. இந்த சிமெண்ட், ஒன்றும் உட்புக இயலாத அமைப்பைக் கொண்டுள்ளதால் அஸ்திவாரத்தில் தண்ணீர் புகாமல் பாதுகாக்கிறது.

காலத்தால் மாறாத பாதுகாப்பை பெற்றிடுங்கள். **டால்மியா சூப்பர் ஃபவுண்டேஷன்™** சிமெண்டை வாங்குங்கள்.

**சிறப்பு அம்சங்கள்:**

* மண்ணுக்கு அடியில் உள்ள இரசாயனப் பொருட்களிலிருந்து அதிக பாதுகாப்புக்கு மிகக் குறைவான $C_3A$
* 53 MPa வலிமை

**Dalmia Cement**
Special Cements for Special Applications
டால்மியாபுரம் - 621 651. போன்: 04329-35328

**சூ·ஃபிற்கான ஸ்பெஷல் சிமெண்டும் கிடைக்கும்.**

R.K.SWAMY/BBDO 2541 TAM 2

கல்கி இன்டர்நெட் முகவரி:
www.kalkiweekly.com
ஈ மெயில்: kalki@md2.vsnl.net.in



# சென்னையில் செட்டிலாகிறார்

# சேஷன்

தலைமைத் தேர்தல் கமிஷனராக இருந்து, ஓய்வு பெற்ற பின்னரும் டெல்லியிலேயே வசித்து வந்த டி.என். சேஷன், சென்னையில் செட்டிலாகிறார். ஆழ்வார்பேட்டையில், செயின்ட் மேரீஸ் சாலையில் உள்ள அவரது வீடு ரெடியாகிக் கொண்டிருக்கிறது. சென்னையில் அவர் வழக்கமாய்த் தங்கும் அவரது உறவினர் வீட்டில், சேஷனைச் சந்தித்தபோது, சகஜமாக, தமக்கேயுரிய கணீர்க் குரலில் பேசினார். பேட்டியிலிருந்து :

**கல்கி :** நீங்கள் ஆரம்பித்த தேச பக்தி டிரஸ்ட் மூலம் உருப்படியாக என்ன சாதித்திருக்கிறீர்கள்?

**டி.என். சேஷன் :** ஒரே வரியில் சொல்ல வேண்டும் என்றால், பெரிய அளவில் சாதித்து விடவில்லை. அதே சமயம் பூஜ்ஜியமும் இல்லை. இத்தனை பெரிய, பலவித பிரச்னைகள் கொண்ட தேசத்தில், ஒரு வருடத்தில் என்ன பெரிசாய் சாதித்து விட முடியும்? நாடெங்கும் இயங்கி வரும் சுமார் நூறு சொசைட்டிகள், சிறப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. நாங்கள், தேசியப் பிரச்னைகளை எடுத்துக் கொள்ளுவதில்லை. உள்ளூர்ப் பிரச்னைகளை மட்டுமே டீல் பண்ணுகிறோம். உதாரணமாய், ஒரு ஊரில் (பெயர் சொல்ல விரும்பவில்லை) ஒரு கோர்ட்டாவது, நேரத்துக்கு வேலை செய்வதில்லை. தேசபக்தி சொசைட்டி, இதை எடுத்துக் கொண்டு போராடியது. தங்கள் இஷ்டம் போல, கோர்ட்டுக்கு வந்து கொண்டிருந்த நீதிபதிகள் இப்போது நேரத்துக்கு வர, கோர்ட்கள் இப்போது பத்து மணிக்கு ஆரம்பித்து

விடுகின்றன. அதே போல, இன்னோர் ஊரில், போராடி, நேரடியாய் முதலமைச்சரே தலையிட்டு, ஒரு கோடி ரூபாய் மதிப்புக்கு, சாலைகள் போடப்பட்டன. இதுபோல இன்னும் சிலவற்றையும் சொல்ல முடியும்.

பல இடங்களில் லஞ்சம் வாங்கும் அதிகாரிகள், கடுமையாக எச்சரிக்கப்பட்டதால், லஞ்சம் மட்டுப்பட்டுள்ளது. ஆனால் இதற்கெல்லாம் நான் கிரெடிட் எடுத்துக் கொள்ள மாட்டேன். அந்தந்த தேசபக்தி சொசைட்டிகளின் சாதனை இது.

**கல்கி :** இப்போதைய தேர்தல் கமிஷனின் செயல்பாடு பற்றி உங்களுடைய கருத்து என்ன?

**சேஷன் :** அதை நான் சொல்வது சரியாக இருக்காது. நீங்கள்தான் அதை எடைபோட வேண்டும்.

**கல்கி :** சென்ற தேர்தலில், போட்டியிடும் எண்ணம் உங்களுக்கு இருந்தாலும், நீங்கள் கடைசியில் போட்டியிடவில்லை; நல்ல காலம்; தேர்தலில் நிற்கவில்லை என இப்போது உங்களுக்குத் தோன்றுகிறதா?

**சேஷன் :** பி.ஜே.பி., காங்கிரஸ், சிவசேனா... இன்னும் சில கட்சிகள் கூட எனக்குத் தேர்தலில் சீட் கொடுக்க முன்வந்தன. ஆனால் அப்போதும் சரி, இப்போதும் சரி, எனக்கு ஒரு விஷயம் குழப்பமாகவே இருக்கிறது. நான் தேர்தலில் நின்று, ஜெயித்து, எம்.பி. ஆனால், சந்தேகமே இல்லை, சேஷன் என்ற தனிநபருக்கு நிறைய சலுகைகள், பலன்கள் கிடைக்கும். ஆனால், சமுதாயத்துக்கு உருப்படியாய் என்ன செய்துவிட முடியும்? பாராளுமன்றத்தில், மக்கள் மீது அக்கறை கொண்டு, அவர்களுடைய பிரச்னைகள், தீர்வுகள் பற்றிக் கவலைப்பட்டு, யாரும் பேசுவதில்லை. அப்படி இருக்கிறபோது நான் தனி ஆளாய் அங்கே போய பெரிசாய் என்ன செய்துவிட முடியும்? இதற்குக் காரணம் ஆளும் கட்சியா, எதிர்க்கட்சியா என்று நான் அலச விரும்பவில்லை.

அதுவுமில்லாமல், தேர்தலில் நிற்க சீட் கொடுப்பதாய்ச் சொன்ன சிவசேனா, முதலில் மும்பை நகரில் நிற்கச் சொன்னது; பின்னர், கிராமப்புறத் தொகுதியில் நிற்கச் சொன்னது. இதே போலத்தான் மற்ற கட்சிகளும். வெற்றி வாய்ப்புள்ள தொகுதியைத் தர முன்வரவில்லை. கடைசியில், எனக்குத் தருவதாய்ச் சொன்ன தொகுதியில் சிவசேனா தோற்றுப் போனது. அதே போல, பி.ஜே.பி. எனக்குத் தருவதாய்ச் சொன்ன திருவனந்தபுரம் தொகுதியில், பி.ஜே.பி. வேட்பாளர் தோற்றுப் போனார். காங்கிரசும் அப்படித்தான். ஆக... சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும் என்ற எண்ணத்தில் நான் சொல்லவில்லை; மனதில் இருப்பதை வெளிப்படையாய்ச் சொல்லுகிறேன். தேர்தலில் போட்டியிடவில்லையே என்ற வருத்தம் எனக்குக் கிடையாது. இப்பக் கூட, கண்ணை மூடிக் கொண்டு, உட்கார்ந்து, 'நான் எம்.பி. ஆகியிருந்தால்' என்று யோசித்துப் பார்த்தால், ஒண்ணு... இப்போ பார்த்தீர்களே டீவியில்... (நாம் பேட்டிக்குப் போன சமயம், டீவியில், மகளிர் இட ஒதுக்கீட்டு மசோதா தாக்கல் செய்வது பற்றிய பாராளுமன்ற அமளிகள் ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தன. அதை அணைத்து விட்டு, நம்மிடம் பேசினார் சேஷன்.) அதுபோல, சத்தம் போட்டு, கலாட்டா பண்ணிக் கொண்டிருக்க வேண்டும். இல்லையெனில்... இப்படி மக்கள் பணத்தை வீணடிச்சுக்கிட்டு இருக்கிறார்களே- அமளிகள் மூலமாக என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

**நம்மூர் பங்களாக்கள் முன்னால் 'நாய்கள் ஜாக்கிரதை' என்று போர்டுகள் தொங்க விடப்படுவது போல் இத்தாலிய நகரங்களில் – 'புலி ஜாக்கிரதை', 'சிறுத்தை ஜாக்கிரதை', 'சிங்கம் ஜாக்கிரதை' என்று அறிவிப்புப் பலகைகள் தொங்க ஆரம்பித்துள்ளன. ஒவ்வொரு பணக்காரக் குடும்பத்தினரும் தங்களது வீட்டில் வன விலங்குகளை வளர்ப்பதுதான் அங்கு தற்போதைய ஃபாஷன்!**

**– ஆர்.ஆர்.பூபதி**

**கல்கி :** அரசியல் கட்சிகள், உங்களை ராஜ்யசபை உறுப்பினராக்கி, பாராளுமன்றத்துக்கு அனுப்பியிருக்கலாமே?

**சேஷன் :** இரண்டு வழியில் ராஜ்யசபைக்குப் போகலாம். ஒன்று நியமனம் மூலமாக. மத்திய அரசிடம் பன்னிரண்டு சீட்கள் உள்ளன. நான் தலைமைத் தேர்தல் கமிஷனராய் இருந்தபோது, ஒரு தடவை நரசிம்மராவ், என்னை ராஜ்யசபை உறுப்பினராய் நியமிக்கிறேன் என்றார். ஆனால், பண்ணவில்லை. என் பணிக் காலம் முடியும் தருவாயில் தேவகௌடாவும் அப்படிச் சொன்னார். அவரும் செய்யவில்லை. அடுத்தது, மாநில சட்டசபை உறுப்பினர்கள் மூலம் ராஜ்யசபைக்குத் தேர்ந்தெடுக்கப்படுவது. சட்டப்படி, நீங்கள் எந்த மாநிலத்திலிருந்து ராஜ்யசபைக்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறீர்களோ, அந்த மாநில வாக்காளர் பட்டியலில் உங்கள் பெயர் இருக்க வேண்டும். மன்மோகன் சிங் உட்பட ஒருசிலர், இதைக்

கடைப்பிடிக்காமல், ராஜ்யசபை எம்.பி.களானதை, தலைமைத் தேர்தல் கமிஷனர் என்கிற முறையில், பல தடவை தவறு என்று சுட்டிக் காட்டியிருக்கிறேன். எனவே, ஏதாவது ஒரு மாநிலத்திலிருந்து, ராஜ்யசபை உறுப்பினராவது என்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். எனது சொந்த மாநிலம் கேரளா, பணிபுரிந்த தமிழ்நாடு, என் மனைவியின் சொந்த மாநிலமான கர்நாடகா (பெங்களூரில்தான் என் மனைவிக்கு வீடு உள்ளது; என் வருமான வரிக் கணக்கு உள்ளது) கடைசியாய்ப் பணிபுரிந்த டெல்லி ஆகியவற்றைச் சேர்ந்த சட்டசபையிலிருந்து, என்னை யாரும் தேர்ந்தெடுக்கத் தயாராக இல்லாதபோது, மகாராஷ்டிரா (சிவசேனா), உ.பி. (பா.ஜ.க.)யிலிருந்து ராஜ்யசபைக்குச் செல்ல வாய்ப்புகள் வந்தபோது நான் மறுத்து விட்டேன்.

**கல்கி** : நீங்கள் த.தே. ஆணையராக இருந்த



போது, ஒரு தடவை சென்னைக்கு விஜயம் செய்த சமயத்தில், நீங்கள் தங்கியிருந்த நட்சத்திர ஹோட்டலில், அப்போதைய ஆளும் கட்சியினரான அ.தி.மு.க.வினரால் தாக்குதல் நடத்தப்பட்டதாய்ப் போடப்பட்ட கேஸ் என்னவாயிற்று?

**சேஷன்** : எனக்கு என்ன தெரியும்? எனக்கு அங்கே தங்க ஏற்பாடு செய்தது அப்போதைய அரசாங்கம்தான். அங்கே தாக்குதல் நடத்தியதும் அவர்களின் கட்சி என்றுதான் சொன்னார்கள். அது அப்புறம் என்ன ஆச்சு என்று எனக்கு ஒன்றும் தெரியவில்லை. மாநில போலீஸிடம் கேட்டால், பதில் கிடைக்குமோ என்னவோ!

**கல்கி** : உங்களது வாழ்க்கை வரலாற்று நூலில் அண்ணாதுரையைப் பற்றி எழுதியது, பெரிய சர்ச்சைக்குள்ளாகி, அனைத்து திராவிடக் கட்சிகளும் கேஸ் போட்டார்களே! அவை எல்லாம் என்ன ஆயிற்று?

**சேஷன்** : புத்தகத்தை எழுதிய ஆசிரியரான கோவிந்தன் குட்டி, பிரசுரகர்த்தர் இருவரது வேண்டுகோளின்படி, கேஸ், ஹைதராபாத் ஹை கோர்ட்டுக்கு மாற்றப்பட்டது. அங்கே ஹியரிங்கிற்கு வந்தபோது, ஆட்சேபணைக்குரிய அந்தப் பகுதியைப் புத்தகத்திலிருந்து நீக்குவதற்குத் தங்களுக்கு எந்தவித ஆட்சேபணையும் இல்லை என்று அவர்கள் தெரிவித்துவிட, கேஸ் முடிந்து விட்டது.

**கல்கி** : அடுத்த பதிப்பில் அந்தப் பகுதி நீக்கப்பட்டதா?

**சேஷன்** : எனக்குத் தெரியாது. அவர்கள் என்னிடம் இதுகுறித்து கருத்துக் கேட்கவும் இல்லை; பின்னரும் எனக்கு எதுவும் தெரிவிக்கவும் இல்லை. இன்னொரு விஷயம் சொல்லட்டுமா? இத்தனை சர்ச்சை கிளப்பிய அந்தப் புத்தகத்தின் மூலமாய் எனக்கு வருமானமில்லை! எல்லாம் அதை எழுதிய ஆசிரியருக்குத்தான்.

**கல்கி** : இந்திய அரசியலில், ஒரு கட்சி ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தாகிவிட்டது என்று கூறுகிறார்கள் சிலர். நீங்கள் அப்படி நினைக்கிறீர்களா?

**சேஷன்** : இல்லை. சொந்தக் காலில் நின்று ஆட்சியமைக்கும் நிலையில் உள்ள இந்தியக் கட்சிகள் என்று சொல்லக்கூடிய காங்கிரஸ், பி.ஜே.பி. இரண்டும் அப்படிச் சொல்லவில்லை. மற்றவர்களுக்கு அப்படிச் சொல்ல நம்பிக்கை கிடையாது. மாநில அளவில் உள்ள அல்லது செல்வாக்கு இல்லாத பொடிக் கட்சிகள், 'கூட்டணி ஆட்சிதான் இனி' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

**கல்கி** : இந்தியா அணுகுண்டு சோதனை நடத்தியது பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

**சேஷன்** : இரும்புத் துண்டு வலுவானதுதான். ஆனால் அதை ஒருவன் எடுத்து விழுங்கி விட்டான் என்றால், அவன் பலசாலி ஆகி விட்டதாகக் கூறி விடலாமா? அணுகுண்டு சோதனையும் அப்படித்தான் என்பது என் கருத்து. சீக்கிரமே, மற்ற நாடுகளது பொருளாதாரத் தடைகளால் ஒரு பாதிப்பும் இல்லை என்ற நிலை வந்துவிடும். ஆனால், இந்த சோதனையால், நாட்டின் பொருளாதாரம் எப்படி முன்னேறும்? பார்த்தாயா என்னை என்று நாம் பெருமையுடன் சொல்லிக் கொண்டபோதே, பாகிஸ்தானும் குண்டு வெடித்து விட்டது. என்ன, தேசத்துக்கு தன்னம்பிக்கையை இந்த சோதனை கொடுத்துள்ளதைப் பற்றி பெருமையாய்ச் சொல்லலாம். தட்ஸ் ஆல்! ●

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

**படுசோகத்தில் இருக்கிறார் இலங்கை கிரிக்கெட் அணியின் கேப்டன் அர்ஜுன ரணதுங்க. தமது நாட்டில் நடைபெற்ற மும்முனைப் போட்டியில், சுதந்தர தினக் கோப்பையை இந்தியாவிடம் மயிரிழையில் தவற விட்டது காரணம். இப்போது இங்கிலாந்து சுற்றுப் பயணத்துக்குக் கிளம்புகிறது இலங்கை அணி. முன்னதாக புட்டபர்த்தி சத்யசாய்பாபாவிடம் ஆசி பெறுவதற்காக ஓர் அவசர விஸிட்டாகக் கடந்த வாரம் இந்தியா வந்த ரணதுங்காவை பெங்களூரில் சந்தித்தோம்.**



**"சுதந்தர தினக் கோப்பையைக் கோட்டை விட்டு விட்டீர்களே அர்ஜுன்?"**

"மயிரிழையில் தவறி விட்டது. ஒரு நாள் போட்டியில் 300 ரன்கள் முதலில் அடித்து விடலாம். ஆனால் அந்த இலக்கை இரண்டாவதாக ஆடி, துரத்திப் பிடிப்பது ரொம்பக் கஷ்டம். அதைச் செய்துகாட்ட விரும்பி, கடுமையாகவே உழைத்தோம். ஆனாலும் நூலிழையில் தவறிவிட்டோம். என்ன செய்வது?"

**"என்ன ஆயிற்று உங்கள் அணிக்கு? தென்னாப்பிரிக்காவில் தோல்வி, நியூஸிலாந்துக்கெதிரான டெஸ்டிலும் தோல்வி, ஒரு நாள் ஆட்டத்தில் தோல்வியே அறியாத உங்களுக்கு அதிலும் தோல்வி... ஏன் இத்தனை தொடர் தோல்விகள்?"**

"நியூஸிலாந்திடம் ஒரு டெஸ்டில் தோற்றாலும் அடுத்த இரண்டில் வென்று விட்டோமே? டெஸ்ட் சாம்பியன் என்று சொல்லத்தக்க ஆஸி அணியை இந்தியா வெல்லவில்லையா? இரண்டு டெஸ்



டில் வென்று விட்டு மறுபடி ஆஸியிடம் தோற்கவில்லை? ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். கிரிக்கெட்டில் வெற்றி தோல்வி என்பது சகஜம். ஆனால் நாங்கள் தோற்கும் போது மட்டும் 'ஏன் தோல்வி?' என்று கேட்கும் போதே தோற்றத்தில் சந்தோஷம் என்கிற பாவனை ஏனோ வந்து விடுகிறது! ஒன்றை கவனித்தீர்களா? எங்கள் ஸ்டார் போலர் சமிந்தா வாஸ் இந்தப் போட்டிகளில் ஆடவில்லை. அதுவே கை உடைந்தாற் போலாகி விட்டது. அஃப்கோர்ஸ், எந்த ஒரு தனி நபரையும் நம்பி எந்த ஒரு அணியும் இல்லை என்றாலும் ஒரு வீரருக்கு பதில் தகுந்த மாற்று ஏற்பாடு அவசியம்தானே? நான் முன்பே உங்களிடம் சொல்லியிருக்கிறேன். எங்கள் அணி வீரர்களுக்கு வயதாகி விட்டது. தகுந்த மாற்று வீரர்கள் வர வேண்டும்."

**"உங்கள் கிரிக்கெட் போர்டில் என்ன குளறுபடி? அரவிந்த டி ஸில்வாவைத் துணை கேப்டன் பொறுப்பிலிருந்து நீக்கி, மகாநாமவை அணியிலிருந்தே நீக்கி... ஏன் இப்படி?"**

"குளறுபடி ஒன்றுமில்லை. நான் குறிப்பிட்ட மாற்று ஏற்பாடுகளுக்கான ஆரம்ப முயற்சிகள்தான் இவை. எங்கள் டீமில் என்னை, அரவிந்தாவை விட ஜெயசூர்யா சற்று வயது குறைந்தவர். அடுத்து கேப்டன் பொறுப்பை அவரிடம் தரலாமே என்று யோசித்தோம். ஒரு பரிசோதனை முயற்சியாகத்தான் அரவிந்த டி ஸில்வாவுக்குப் பதில் ஜெயசூர்யாவை துணை கேப்டனாகப் போட்டு, எப்படிச் செய்கிறார் என்று பார்க்கிறோம். இது கூட அரவிந்த டி ஸில்வாவின் ஒப்புதலின் பேரிலே செய்யப்பட்ட ஏற்பாடுதான். மகனாமா சிறந்த வீரர்தான். புதிய வீரர்களைப் பயிற்றுவிக்க, சீனியர்களை அவ்வப்போது விலகச் சொல்லி இடம் கொடுப்பதில் தவறில்லை. நாளை என்னையே கூட அணியிலிருந்து நீக்கி, ஜெயசூர்யாவை கேப்டனாக்கினால் ஆச்சர்யப்பட ஒன்று

# பாகிஸ்தான் அணி 'கோச்'சாக இலங்கை கேப்டன் ரணதுங்கா!

மில்லை. இதில் தவறேதும் இருப்பதாக நான் கருதவில்லை."

**"மாற்று ஏற்பாடுகள் அவசியம் தான். ஆனால் தற்சமயம் வலு குறைந்திருப்பதற்கு என்ன உடனடி நிவாரணம்?"**

"என்னிடம் ஒரு டொனால்ட் இல்லை. ஒரு வார்னே இல்லை. மெக்ரத் இல்லை. என்னிடம் உள்ளவர்கள் மிகச் சாதாரண பந்து வீச்சாளர்கள்தாம். ஆனால் எங்களது வலுவான பேட்டிங் ஆர்டரால் இந்தக் குறையை மறைத்துக் கொண்டிருக்கிறோம். மார்க் டெய்லரோ, ஹான்ஸி க்ரோன் யேவோ என்ன செய்கிறார்கள்? தங்களது புயல் வேகப் பந்து வீச்சாளர்களை முன் னிறுத்தி வெற்றியைப் பறிக்கிறார்கள். நான் moderate bowlers ஐ வைத்துக் கொண்டு ஒப்பேற்றுகிறேன். இது சில சமயம் க்ளிக் ஆகிறது; சில சமயம் காலை வாரி விடுகிறது. நல்ல போலர் களை நாங்கள் தேடிக் கொண் டிருக்கிறோம். அதுதான் எங்கள் பிரச் னைக்கான நிரந்தரத் தீர்வு."

**"இங்கிலாந்துக்குப் போகிறீர்களே... வெற்றி வாய்ப்பு எப்படி இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?"**

"நீண்ட வருடங்களுக்குப் பின் இங் கிலாந்து போகிறோம். எப்படியும் ஜெயித் தாக வேண்டும். சரிந்துள்ள இலங்கை அணியின் இமேஜ் உயர வேறு வழியே இல்லை. அதற்காக ஆசிபெறத்தான் பாபாவை தரிசிக்க வந்துள்ளேன். அவரது ஆசி எனக்கு எப்போதும் ஒரு மானசீக பலம் தருகிறது."

**"உங்களை பாகிஸ்தான் அணிக்கு கோச்சாக நியமிக்கப் போகிறார் களாமே? ஒப்புக் கொண்டு விட்டீர் களா?"**

"பாகிஸ்தான் கிரிக்கெட் போர்டு தலைவர் மஜீத்கான் என் நண்பர். என்னை பாக். அணிக்குப் பயிற்சி அளிக்கக் கேட்டுக் கொண்டது உண்மைதான். சம்பளமும் நல்லதொரு பெரிய தொகையாகத்தான் சொல்லியிருக் கிறார்கள். நானும் செட்டில் ஆக வேண் டாமா? பாபாவின் அருளால் உலகக் கோப் பையை எப்படியும் வென்று விடுவோம். அதன் பின் என் ஓய்வை அறிவித்து விட்டு, பாக். அணிக்கு கோச்சாகச் செல்ல இருக்கிறேன்."

பேட்டி : **நந்தினி**



''ஒவ்வொரு புட்பால் மேட்சையும் கவுண்டமணி உன்னிப்பா கவனிச்சாராமே, டீவில எதுக்கு?''
''செந்திலை... படங்களில் புதிய பாணியில் உதைக்கத்தான்...''
— ராஜிராதா



''லாட்டரிலதான் லட்ச ரூபா பணம் விழுந்துருக்கே... வாங்கின கடனை குடுக்கக் கூடாதா?''
''நீங்க சொல்ற மாதிரி நடந்துகிட்டா பணம் வந்ததும் குணம் மாறிடுச்சுனு சொல்லிடக் கூடாது பாருங்க!''
- ராஜிராதா

# குங்குமம், திருநீறு, கொஞ்சம் டான்ஸ்...

**அனுராதா ஸ்ரீராமைத் தெரியாமல் இருக்காது. அவர் பாட்டுக்களைக் கேட்காதவர்கள் கூட சமீப காலமாக அவ்வப்போது கிளம்பும் அவர் குறித்த சர்ச்சைகளைப் படித்திருக்கக்கூடும். சினிமா, லைவ் ஷோக்கள், ஆல்பம், டீவி நிகழ்ச்சிகள் என்று அனுராதா இன்று ஓர் அண்ணாமலை சைக்கிள். தம் மீதான பகிரங்கக் குற்றச்சாட்டுகளுக்கு பதில் சொல்லிக் கொண்டிருக்கக் கூட நேரமில்லாமல் றெக்கை கட்டிப் பறக்கிறவர். கடந்த ஞாயிற்றுக்கிழமை அவரை மடக்கிப் பிடித்து சுமார் ஒன்றரை மணி நேரம் பேசினோம். சங்கீதம் சார்ந்து பேசத் தொடங்கினாலும் சர்ச்சைகளே நேரத்தை நிறைய விழுங்கின. பேட்டியிலிருந்து :**



**"அனுராதா, நீங்கள் ஒரு கர்நாடக சங்கீதப் பாடகியாகத்தான் முதலில் அறிமுகமானீர்கள். திடீரென்று அதை முற்றிலுமாக ஒதுக்கி விட்டு மடோனா ஸ்டைலில் ஏன் இறங்கி விட்டீர்கள்?"**

"கர்நாடக சங்கீதத்தை நான் மறக்கவில்லை; ஒதுக்கவும் இல்லை. அது எப்படி சாத்தியமாகும்? ஆனால், இன்று மக்கள் விரும்பும் இசை என்று பார்த்தால், அது சினிமா இசைதான். இன்றைய காலகட்டத்தின் இசை என்பதே சினிமாப் பாடல்கள்தான் என்றாகி விட்டது. அடிப்படையில் நான் கர்நாடக சங்கீதம், வெஸ்டர்ன் ம்யூஸிக் இரண்டையுமே தீவிரமாகப் பயின்றவள். இசையில், இது உசத்தி, அது மட்டம் என்பதெல்லாம் கிடையாது என்று தெளிந்திருக்கிறேன். தற்செயலாக ரகுமான் மூலம் (அச்சம் அச்சம் இல்லை - 'இந்திரா') சினிமாவில் நுழைந்து ஐம்பது பாடல்களுக்கு மேல் பாடி விட்டேன். இது பிடித்திருக்கிறது. கர்நாடக இசைக் கச்சேரிகளை ஒப்புக் கொண்டு, நேரமின்றித் தவிக்க வேண்டாமே என்றுதான் குறைத்துக் கொண்டு விட்டேன். ஆனாலும் இரு மாதங்களுக்கு ஒருமுறையாவது என் கணவருடன் இணைந்து ஹிந்துஸ்தானி இசைக் கச்சேரிகள் செய்து வருகிறேன்."

**"ஆனால் சினிமாப் பாடல்களை விடவும் பாப் ஆல்பம் மூலமும் லைவ் ஷோக்களின் மூலமும்தான் அதிகம் கவனம் பெறுகிறீர்கள் எனலாமா?"**

"என் 'சென்னை கேர்ல்' ஆல்பம் மேக்னா சவுண்ட் நிறுவனத்தாரின் முயற்சி + ஆர்வத்தின் வெளிப்பாடு. லைவ் ஷோக்களிலும் சினிமா பாடல்கள்தானே பாட வேண்டி இருக்கிறது?"

**"பாப் லைவ் ஷோக்கள் என்பன நம் கலாசாரத்துக்கு அந்நியமான விஷயம். தீவிரமாக இன்று பலர் அதைப் பிடித்துக் கொண்டிருக்கிறீர்கள். எத்தனை நாள் இந்த அலை நீடிக்கும் என்று நம்புகிறீர்கள்?"**

"நம் மரபுகளும் விருப்பங்களும் கலாசாரமும் மாறிக் கொண்டே வருகின்றன. அதற்கேற்ப இசையும் கூட! புரந்தரதாசரின்

இசை போலத் தியாகராஜருடையது இல்லை. பட்டம்மாளின் இசைக்கும் எம்.எஸ்ஸின் இசைக்குப் கூட எத்தனை வித்தியாசம்! சினிமா இசையே கூட அதன் வடிவம் நாளுக்கு நாள் மாறி வருவதையே காண்கிறோம். அதே ரீதியில் தான் இசையை வழங்குர் வடிவங்களும். இன்றைக்கு பாப் இசை, இளைஞர்களுக்குப் பிடித்திருக்கிறது. விரும்பிப் பார்க்கிறார்கள்; கேட்கிறார்கள். அவர்கள் விரும்புவதை நாங்கள் செய்ய முடிவது சந்தோஷம் தானே? நாளை ஒருவேளை இதுவும் மாறலாம்."



**டான்ஸ் ஆடுவதில், கலாசாரம் கெட ஒன்றுமில்லை. என் வேர்களை நான் மறந்ததில்லை. பாப் பாடகியானாலும் குங்குமப் பொட்டும் திருநீறும் அணியாமல் எப்போதாவது என்னை மேடையில் கண்டிருக்கிறீர்களா?**

**"பாப் பாடல்கள் பாடுவதைச் சொல்ல வில்லை. மேடையில் ஆடுவது, ரகளை செய்வது...."**

"ஸீ, நடனம் என்பது அற்புதமான விஷயம். நான் முறைப்படி நடனம் பயின்றிருக்கிறேன். ஒரு பாப் இசை நிகழ்ச்சிக்கு வருகிற ரசிகன் கட்டாயம் நடனத்தை எதிர்பார்ப்பான். அது வேண்டாம் என்று நினைத்தால் ஏன் அத்தனை கூட்டம் என் நிகழ்ச்சிகளுக்கு வர வேண்டும்? கேஸட் போதுமே! மேடையில் ஒரு நிகழ்ச்சியை ப்ரஸன்ட் செய்வது ஒரு கலை. பரதநாட்டியத்திலும் நாட்டிய நாடகங்கள் இருப்பதில்லையா? அதுபோல சின்னச் சின்ன உரையாடல்கள், நடனம், பாட்டு என்று கவனமாக திட்டமிடுகிறோம். இதில் சீரழிவு என்ன இருக்கிறது? நான் அணியும் உடைகளில் எப்போதாவது ஆபாசம் தெரிகிறதா? அல்லது நடனம்தான் ஆபாசமாக இருக்கிறதா?"

**"சிங்கப்பூரில் நடந்த நிகழ்ச்சி ஒன்றில் ஹரிஹரனைக் கட்டிப் பிடித்து நீங்கள் ஆடியதாகப் பத்திரிகைகளில் செய்தி வந்ததே. பொது மேடைகளில் இதெல்லாம் ஆபாசமாக அல்லாமல் வேறெப்படித் தெரியும்?"**

"கட்டிப் பிடித்து ஆடினேன் என்பதெல்லாம் டூ மச். அன்று என்ன நடந்தது என்று சொல்கிறேன். வெண்ணிலவே வெண்ணிலவே (மின்சாரக் கனவு) பாடலுக்கு அன்று நானும் ஹரிஹரனும் குரலும் சிறு நடன அசைவுகளும் தந்தோம். அந்தப் பாடலை சினிமாவில் பார்த்திருப்பீர்கள். மிக மென்மையான நடன அசைவுகள்தான். துளிக் கூட ஆபாசம் இருக்காது. நாங்களும் கண்ணியமாகத்தான் ஆடினோம். தொடக் கூட இல்லை. ஆனாலும், செய்தி திரித்து வெளியிடப் பட்டு விட்டது."

**"சினிமாப் பாடல்கள் மூலமே பிரபலமான சுசீலா, ஜானகி போன்றோர் மேடையிலும் பாடியிருக்கிறார்கள். மக்கள் ரசித்தும் இருக்கிறார்கள். நடனமா ஆடினார்கள்? ஆனால் அதற்காக மக்கள் வந்து ரசிக்காமல் இல்லையே?"**

"ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு பாணி. எனக்கு என் பாணி. என்னிடம் இளமை இருக்கிறது. என் பிரஸன்டேஷன் எல்லாரையும் சுண்டி இழுக்க நான் மிகவும் மெனக்கெடுகிறேன். எத்தனை ஒத்திகைகள்! எத்தனை முன்னேற்பாடுகள்! பாப் இசை என்பது ஸ்டுடியோவுக்குள்ளே பாடப்படுவதல்ல. அந்தக் கலை, மேடைக்கானது. அந்த மேடைக்கொரு இலக்கணம் உண்டு. நான் ஒருபோதும் அந்த இலக்கண எல்லைகளை உடைப்பதில்லை என்பதை மட்டும் உறுதியாகச் சொல்வேன். இதில் கலாசாரம் கெட ஒன்றுமில்லை. என் வேர்களை நான் மறந்ததில்லை. பாப், பாடகியானாலும் குங்குமப் பொட்டும் திருநீறும் அணியாமல் எப்போதாவது என்னை மேடையில் கண்டிருக்கிறீர்களா? எனக்கு பீட்ஸா சாப்பிடப் பிடிக்கும்தான். அதற்காகப் பிள்ளையார் சதுர்த்தி அன்று கொழுக்கட்டை செய்யாமலோ, சாப்பிடாமலோ இருப்பதில்லை. என் மேடை நிகழ்ச்சிகளை என் கணவரும் மாமனாரும் கூடத்தான் ரசிக்கிறார்கள்.

இதுவரை ஒருமுறை கூட முகம் சுளித்ததோ குறைசொன்னதோ இல்லை. என்னை முற்றிலும் புரிந்து கொண்டு ஒத்துழைப்பதில் என் கணவர் ஒரு ஜெம்! ஹரிஹரனுடன் நான் ஆடியது பற்றி எழுந்த சர்ச்சைகள் பற்றி அவரிடம் கேட்டுப் பாருங்கள். அவரும் அந்த நிகழ்ச்சிக்கு வந்திருந்தார். நான் தவறாக ஆடியிருந்தால் சுட்டிக்காட்டாமலா இருந்திருப்பார்? அவரவர் பார்வையில்தான் பிரச்னை."

''ஹரிஹரனோடு நீங்கள் ஆடியது மட்டுமல்ல; நிகழ்ச்சிக்குப் பின் மது அருந்தி, மறுபடி ஆடிப் பாடியதாகவும்...''

''அபத்தம். எனக்கு குடிப் பழக்கம் கிடையாது. அன்றைய நிகழ்ச்சிக்குப் பின் நான், என் கணவர், ஹரிஹரன், அவர் மனைவி, பிரகாஷ் ராஜ் எல்லோரும் ஒரே இடத்தில்தான் இருந்தோம். சாதாரணமாகத்தான் பேசிக் கொண்டிருந்தோம். இதெல்லாம் பொறுப்பில்லாமல், பத்திரிகையாளர்கள் கிளப்பி விடும் வதந்தி.''

''நீங்கள் ஹரிஹரனோடு ஆடிய விஷயமெல்லாம் இங்கே தெரிய வந்ததே கங்கை அமரன் மூலம்தானே? அவர் இப்படிக் குற்றச்சாட்டாக வெளியிட்டிருப்பதற்குப் பின்னணி ஏதும் உண்டா?''

"கங்கை அமரனின் இரட்டை அளவுகோலை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. லைவ் ஷோக்களின் போது அவரே இரட்டை அர்த்தம் தொனிக்க ஜோக் அடிப்பார். ஆனால், "இரட்டை அர்த்தப் பாடல்களை எப்படிம்மா பாடறீங்க?" என்று என்னிடம் கேட்டார். அப்படிப்பட்ட பாடல்களை எழுதுவது அவரைப் போன்ற பாடலாசிரியர்கள்தானே? விஷயம் என்னவென்றால், நிகழ்ச்சி கலகலப்பாக அமைய அவரே இரட்டை அர்த்தம், அபத்தம், கடி என்று இறங்கி விட்டு, அடுத்தவர்களையும் சீண்டுவதை ஒரு 'பேட்டர்னா'க வைத்திருக்கிறார். பொதுவாக கங்கை அமரனின் பேச்சுகளை நாங்கள் யாரும் சீரியஸாக எடுத்துக் கொள்வதில்லை. இதுவும் அப்படி விடப்பட வேண்டிய ஒன்றுதான்."

பேட்டி : **ஜி.எஸ்.எஸ்.**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **'தேர்ட் ஐ' பிரகாஷ்**

## பேட்டி காணோம்!

**சமீபத்தில் தமிழ் மாநில காங்கிரஸை விட்டு விலகினார் திருச்சியின் முன்னாள் எம்.பி.யான எல். அடைக்கலராஜ். அவர் விலகிய ஜோரில் சன் டி.வி.யின் வீரபாண்டியன் அடைக்கலராஜை பேட்டி கண்டார். அந்த காரசார பேட்டி ஜூன் 28ம் தேதி ஞாயிறு இரவு 'நேருக்கு நேர்' நிகழ்ச்சியில் ஒளிபரப்பப்படவுள்ளதாக ஞாயிறு மதியம் வரை விளம்பரப்படுத்தப்பட்டது. ஆனால், இரவு 9 மணிக்கு அப்பேட்டி ஒளிபரப்பாகவில்லை. 'தொழில் நுட்ப கோளாறு காரணமாக ஒளிபரப்பப்படவில்லை' என்று காரணம் கூறியது சன் டி.வி.**

**உண்மையில், விளம்பரம் பார்த்துவிட்டு, மூப்பனார் அந்த கேஸட்டை முழுமையாகப் பார்க்க விரும்பி, தகவல் அனுப்பினாராம். கேஸட்டும் போனதாம். தன்னைப் பற்றியும், த.மா.கா. பற்றியும் அடைக்கலராஜ் ரொம்ப டேமேஜிங்காகப் பேசியுள்ளதைப் பார்த்ததும், 'இந்தப் பேட்டியை தவிர்க்க வேண்டும்'**



**என்று 'உறவு' உரிமையோடு கேட்டுக் கொண்டாராம். ஏற்கனவே சிங்கப்பூர் போய் விட்ட கேஸட்டை, நிறுத்தி விடுமாறு மேலிட உத்தரவு பறக்க... பேட்டி நின்று போனதாகப் பின்னணித் தகவல்கள் உலா வருகின்றன.**

**இது பற்றி அடைக்கலராஜ் என்ன கூறுகிறார்?**

**''சன் டி.வி.க்கு நானாக பேட்டி தருகிறேன் என்று போகவில்லை. அவர்களாகவேதான் 'பேட்டி' என்று வந்தார்கள். நானும் பதிலளித்தேன். ஞாயிறு மதியம்வரை விளம்பரமும் வெளியானது. ஆனால் இரவு பேட்டி ஒளிபரப்பாகவில்லை. இடையில் என்ன நடந்தது என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் சன் டி.வி.யிலிருந்து எனக்கு ஃபோன் வந்தது. 'சில பெரியவர்களின் வேண்டுகோள். தட்ட முடியாது. எனவே பேட்டி வரவில்லை. ஸாரி' என்றார்கள். நானும் 'பரவாயில்லை' என்று கூறி விட்டேன்.**

**''சன் டி.வி. பேட்டி ரத்தானதும் விஜய் டி.வி.யின் ரபி பெர்னாட் தொடர்ந்து பேட்டியளிக்குமாறு வற்புறுத்தினார். எனினும் சில நண்பர்களின் வேண்டுகோளை மதித்து விஜய் டி.வி.க்கு பேட்டி தர அன்போடு மறுத்து விட்டேன்.**

**''உண்மையை வெளியிட விரும்பினேனே ஒழிய, த.மா.காவையோ, மூப்பனாரையோ அசிங்கப்படுத்த வேண்டுமென்று ஆசையில்லை'' என்றார் அடைக்கலராஜ்.**

**— கிரண் நியூஸ்**

முதல் தடவை பவானியைப் பார்த்ததும் கூட இதே மாதிரி அழுத கோலத்தில்தான். பவானி முழங்காலில் முகம் புதைத்து கவரோரம் உட்கார்ந்திருந்தாள். நிறைய அழுதிருப்பாள் போல. பாலா வந்ததை உணர்ந்த மாதிரி தலை நிமிர்ந்தது. சோர்ந்த இமைகளும், கரைந்த கண்மையும், வீங்கின கன்னங்களுமாக மெல்ல அவனைப் பார்த்தாள். புடைவைத் தலைப்பில் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"வாங்க" என்றாள்.

பாலா ஓரிரு செகண்டுகள் அவளை நேராய்ப் பார்த்தான். எப்போதும் அழுவதற்கே படைக்கப்பட்ட ஒரு ஜீவன் மாதிரி அவள் இருந்தாள். ஒரு வேளை கல்யாணத்துக்கு முன் அவளை சந்தித்திருக்க வேண்டும் என்று நினைத்தான். இதே முகம், மின்னுகிற கண்களும், புருஷனிடம் அறைவாங்காத கன்னங்களுமாய் பொலிவாய் சந்தோஷமாய் இருந்திருக்கும். அவள் கல்யாணத்துக்கப்புறம்தான் பாலா அவர்களின் எதிர் வீட்டில் குடிவந்தது. சரோஜாம்மா குடும்பத்துடன் பரிச்சயம் ஏற்பட்ட





# மனதில் உனது ஆதிக்கம்

பிறகு பல தடவைகள் பவானியை சந்தித்தும் பேசியும் இருக்கிறான். பவானி அதிகம் பேசக் கூடியவள் அல்ல. ஆனாலும் அம்மாவிடமிருந்து நேராய் தாரைவார்த்துப் பெற்றுக் கொண்ட மாதிரி அந்தப் புன்னகை மட்டும் கொஞ்சம் கூடுதலாகவே அவளிடம் இருக்கும். எப்போதும் லேசாய் சோகம் கலந்த, ஸ்நேகமான பார்வை.

அழுது முடித்ததற்கப்புறம் பவானி மிக அழகாய் இருப்பதுபோல் பட்டது அவனுக்கு. மிகச் சில பேருக்குத்தான் அப்படியொரு துயர அழகு சாத்தியப்படுகிறது. பவானி மாநிறம் தாண்டிய மிதமான கருப்பு நிறம். நீள் வட்ட முகம். ஒரு தடவை அவன் வீட்டு ஜன்னலிலிருந்து வாசல்படியில் தலைவாரியபடி நிற்கும் பவானியைப் பார்க்க நேரிட்டபோது அத்தனை தூரத்திலிருந்தும் பளிச்சென அவள் கண்கள் மட்டும் பிரதானமாய்த் தெரிந்தது ஞாபகம் வந்தது. அவளின் நிர்மலமான அழகுக்கு அந்தக் கண்களின் பங்கு அதிகம். ஆனால் இத்தனைக் கிட்டேயிருந்து பார்க்கும் போது அதற்குப் பின்னால் இருக்கிற வேதனை வரிகள்தான் பிரதானமாய்த் தெரிகிறது இப்போது.

**பா**லாவுக்கு அவளோடு ஏதாவது பேச வேண்டும் போல் இருந்தது. ஏதாவது கேட்க வேண்டும். அவனை இந்த வீட்டில் ஒருவனாய் மதிக்கிற குடும்பம். அதன் மீது அவனுக்கிருக்கிற அக்கறையை எப்படியாவது வெளிப்படுத்திவிட வேண்டும் என்றிருந்தது.

''மறுபடியும் பிரச்னையா பவானி...'' என்று கேட்டான். குரலின் தயக்கத்தை மெதுவாய் உதறிவிட்டு, உன் பிரச்னைகள் என்னவென்று எனக்குத் தெரியும். தாராளமாய் அது பற்றி என்னிடம் சொல்லலாம் என்கிற தொனியில்தான் இருந்தது அவன் கேட்டது.

லேசாய் அவள் தலை ஆடியது. வாயைத் திறந்து எதுவும் சொல்லவில்லை.

''என்ன ஆச்சு பவானி?''

பவானி மேலும் மௌனமாகத்தான் இருந்தாள். பிறகு என்ன நினைத்தாளோ தெரியவில்லை. ஒரு விநாடி பார்வை சமையலறைப் பக்கம் போனது. மெதுவாய் எழுந்தாள்.

''இதப் பாருங்க...'' என்று திரும்பி முதுகு காட்டி நின்றாள். தோள்பட்டையிலிருந்து புடைவையை லேசாய் விலக்கினாள். தலைப் பின்னலை முன்பக்கமாய் எடுத்துவிட்டுக் கொண்டாள்.

பாலா பார்த்தான். அவள் பின்னங்கழுத்துக்குக் கீழே கருப்பாய் வட்ட வட்டமாய் மூன்று நான்கு இடத்தில்... என்ன அது? காயம் மாதிரி. கண்களை சுருக்கி மேலும் உற்றுப் பார்த்தான்.

''என்ன பவானி அது?'' என்றான்.

புடைவையை இடுப்பில் இழுத்துச் செருகிக் கொண்டு திரும்பினாள். ஒரு சின்ன சிரிப்போடு சொன்னாள்.

''சிகரெட் சூடு...''

அவனுக்கு அதிர்ச்சியாயிருந்தது. ''கடவுளே...'' என்றான். மீதி எல்லாம் சொல்லாமலே புரிந்து விட்டது.

பிறகு வேதனையோடு சொன்னாள். ''இது உச்சகட்ட சித்ரவதை பாலா. ரெண்டு நாள் முன்னாடி நடந்தது. அந்தாளுக்குக் கொஞ்சம் கூட மனச்சாட்சி கிடையாது. என்னென்ன

**2**

**சித்ரன்**

கொடுமை இருக்கோ அத்தனையும் அனுப விச்சிட்டேன். இதுக்கு மேல எனக்கு சகிப் புத்தன்மை கிடையாது. அதான் வந்துட்டேன். ஒரேடியா..."

பாலா என்ன சொல்வதென்று தெரியாமல் நின்றான். பவானியின் புருஷனை ஓரிரு தடவைகள் பார்த்தும் பேசியும் இருக்கிறான் அவன். பார்த்தால் ஒன்றுமறியாத சாது மாதிரிதான் இருப்பான். நன்றாய் சிரித்துச் சிரித்துப் பேசகிற டைப்தான். ஆனால் அவனுக்குள்தான் கோபம் வந்தால், சூடான காப்பியை பெண்டாட்டி முகத்தில் ஊற்றுவதும், முதுகில் சிகரெட் சூடு வைப்பதுமான கொடூர மிருகம் ஒளிந்திருக்கிறதென்று சொல்லவே முடியாது.

"இப்படியுமா இருப்பான் ஒரு மனுஷன்?" என்றான்.

"அந்தாளு மனுஷனே இல்லை. ராட்சஸன்..." என்றாள்.

விழத் தயாராய் சில துளிகள் அவள் கண் விளிம்பில் நின்றன. மேலும் அவளே சொன்னாள்.

"இனிமே நான் இங்கதான் இருக்கப் போறேன்..."

அதற்கப்புறம் பத்துப் பதினைந்து நாட்கள் வேலை மும்முரத்தில் கழிந்தன. இரவு, நேரங் கழித்து வீட்டுக்கு வர வேண்டியிருந்தது. பவானியின் வீட்டுக்குப் போக அத்தனை சமயமும் கிடைக்கவில்லை. எப்போதாவது அவளின் நினைப்பு வரும்போது தவறாமல் அந்த சிகரெட் காயங்களும் ஞாபகம் வந்தன. அவள் இப்படி புருஷனை விட்டு வந்து வீட்டில் இருப்பது சரோஜாம்மாவுக்கும் வேணு மாமாவுக்கும் எப்படி இருக்கும் என்று யோசித்துப் பார்த்தான்.

"ஏன் பாலா இப்பல்லாம் உன்னைப் பார்க்கறதே அபூர்வமா இருக்கு" என்று வேணு மாமா ஒரு தடவை பார்த்துக் கேட்டு விட்டார். "பேசறதுக்கு ஆளில்லாம போரடிக்குது" என்றார்.

"இல்ல மாமா... கொஞ்சம் ஆஃபீஸ்ல வேலை ஜாஸ்தி..." என்றான். சிறிது நேரமாவது அவர்களுடன் செலவிட முடியாமல் இப்படிப் பறக்க வேண்டியதிருக்கிறதே என்ற ஆதங்கமும் வந்தது.

பவானி வீட்டிலேயேதான் இருந்தாள். அவள் சொன்ன மாதிரியே கணவன் வீட்டுக்குப் போகவில்லை என்று தெரிந்தது. இப்போதெல்லாம் அவள் சகஜ நிலைமைக்கு வந்து விட்டது போல் இருந்தது.




இடையில் ஓர் இரவு அவர்களுடன்தான் அவர்கள் வீட்டிலேயே சாப்பிட்டான். பவானிதான் பரிமாறினாள். அவள் எதையோ எடுக்கத் திரும்பின ஒரு விநாடியில் சட்டென்று அவள் முதுகைப் பார்த்தான். காயங்கள் இருந்த இடத்தைப் பார்வை தேடியது. எல்லாம் மறைந்திருந்தது. அப்படிப் பார்த்தது அவளுக்கு லேசாய் குறுகுறுத்திருக்க வேண்டும். சட்டென்று திரும்பி அவனது பார்வையை நேருக்கு நேர் சந்தித்தாள். பாலாவுக்கு ஒரு மாதிரி ஆகிவிட்டது.

ஏதோ புரிந்த மாதிரி அவள் சொன்னாள்.

"எல்லாம் ஆறிடுச்சு..."

பாலா மெல்லிய திகைப்போடு நிமிர்ந்தான்.

"சாம்பார், ரசம், சாப்பாடு எல்லாம்..." என்றாள் தொடர்ந்து.

அவன் ஆசுவாசமாய் ஒரு பெருமூச்சு விட்டான். அதற்கப்புறம் அவள் அந்தப் பக்கம் இந்தப் பக்கம் திரும்பும் போதெல்லாம் அவனையறியாமல் பவானியை கவனிக்க ஆரம்பித்தான். அவன் மனதில் பவானியை வேராய்க் கொண்டு சின்னச் செடியொன்று துளிர்க்க ஆரம்பித்திருந்தது.

'இனி அவள் என்ன செய்யப் போகிறாள்? அம்மா வீட்டிலேயே நிரந்தரமாய் இருக்கப் போகிறாளா? வாழா வெட்டி என்று சொல்வார்களே? அது மாதிரியா? எல்லோருடைய அனுதாபத்தையும் சம்பாதித்துக் கொண்டு...'

பாலாவுக்கு ஏனோ மனசெல்லாம் கலங்கின மாதிரி இருந்தது. அவள் வாழ்க்கை. எது நல்லதென்று படுகிறதோ, எது அவளுக்குச் சந்தோஷம் தருகிறதோ அதை அவள் தீர்மானிக்கட்டும். நான் வெறும் அபிப்பிராயமோ, ஆறுதலோதான் சொல்ல முடியும். மற்றவை அவள் கையில்தான் இருக்கிறது. அவள் போராட்டத்தின் முடிவை அவளே எடுக்கட்டும். நான் என்ன செய்ய முடியும்

லயன்ஸ் கிளப் என்னும் சமூக நலச் சங்கங்கள், உலக நாடுகள் முழுவதும் உள்ளன. இச் சங்கத்தின் பிரதான கொள்கையான சுதந்திரம் (Liberty), அறிவாற்றல் (Intelligence), தேசப் பாதுகாப்பு (Our Nations Safety) என்பவைகளின் முதல் எழுத்துக்களைச் சேர்த்து LIONS CLUB என்று வழங்கினர். மற்றபடி சிங்கத்திற்கும் இந்த நிறுவனத்திற்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை.

'எப்படி வந்தது' நூலிலிருந்து.
– பா. குணா

நடுவில்?

ஒன்றேயொன்று செய்ய முடியும் என்று தோன்றியது. நினைத்ததும் சிலிர்ப்புத் தருகிற விஷயமாகவும் அது இருந்தது. நொடியில் மிக மெலிதான குறுகுறுப்பை நெஞ்சுக்குள் படரவிட்டுப் போனது அந்த நினைப்பு.

உடனே அதைக் கலைக்க முயற்சித்தான் பாலா. ஆனால் அப்போது தொற்றிக் கொண்டு விட்ட அது, தொலையாமல், கலையாமல் மனதோடேயே ஒட்டிக் கொண்டு விட்டது. ஒரு திடீர்ப் பரபரப்பில் இதயத் துடிப்பு அதிகரிப்பது மாதிரி உணர்ந்தான்.

சீனியைப் பார்த்தபோது அந்த எண்ணத்தைச் சொல்லலாம் என்று தோன்றியது. அதற்குள் சீனியே பாலாவின் முகத்தைப் படித்துவிட்டு, "நீ நார்மலா இருக்கிற மாதிரி தெரியலையே..." என்றான்.

"ஒண்ணுமில்லைடா..." என்று பாலா முதலில் சொன்னாலும் அப்புறம் தயக்கத்தை விட்டுப் பேசினான். பவானியைப் பற்றிச் சொன்னான். அவள் கணவன் பற்றி, சிகரெட் சூடு பற்றி... அவள் வேதனைகள் பற்றி. கடைசியாய் அவனுக்கு வந்த அந்த யோசனை பற்றி.

"நிஜமாவே சீனி... அவ கஷ்டப்படறாங்கிற விஷயம் என்னை என்னவோ பண்ணுதுடா. லேசா மனசு வலிக்குதுன்னு கூட சொல்லலாம்" என்றான் பாலா. "பவானி இந்த மாதிரி கஷ்டப்பட வேண்டிய பொண்ணில்லைடா. ஏதோ தப்பா ஒரு விதி அமைஞ்சிடுச்சு. அத மாத்த முடியும்னு தோணுது."

சீனி, "ரொம்ப ஸீரியஸா பேசற மாதிரி இருக்கு. என்ன சொல்லவர்றேன்னு புரியலை" என்றான்.

"ஸீரியஸாத்தான் சொல்றேன் சீனி. அவளுக்குச் சம்மதம்னா அவ புருஷனை டைவர்ஸ் பண்ண அவளுக்கு ஐடியா இருந்ததுன்னா, அதற்கப்புறம் நானே அவளைக் கல்யாணம் பண்ணிட்டு கடைசி வரை பூ மாதிரி வெச்சுக்கணும்னு..."

சொல்லும்போது பாலா உணர்ச்சிவசப்பட்டிருந்தான். சீனி அவனை ஆச்சரியமாய்ப் பார்த்தான்.

"உன்னுடைய நல்ல மனசுக்கும், தைரியத்துக்கும் நீ இந்த மாதிரி நினைச்சதுல எந்தத் தப்பும் இல்லடா பாலா. இருந்தாலும் சட்டுன்னு எந்த முடிவும் எடுத்துராத. யோசி...!" என்று மட்டும் சொன்னான்.

நிறைய யோசித்து விட்டான். ஆஃபீஸில் வேலைக்கு நடுவிலும் கூட இதேதான் நினைப்பு. ஆனால் பெரிதாய் மனமாற்றம் ஒன்றும் ஏற்படாமல் அப்படியேதான் இருந்தது முடிவு.

பவானியிடம் அதைச் சொல்லிப் பார்க்கலாமா என்று தோன்றியது. ஆனால் அழுகையின் சாரல் முழுதாய் ஓயாத அவளிடத்தில் இப்போது சொல்லக் கூடிய விஷயம் அல்ல என்று தோன்றி அந்த எண்ணத்தைக் கைவிட்டான்.

ஞாயிற்றுக் கிழமை பொறுமையாய், நிதானமாய் ஒரு சின்னக் கண்ணாடி முன் நின்று ஷேவ் செய்து கொண்டிருக்கும்போது பவானி வந்தாள். இளம் பச்சை நிற சேலையில் கதவோரமே சாய்ந்து நின்று "உள்ளே வரலாமா?" என்றாள்.

"வா! பவானி... உக்காரு.. என்று பிரம்பு நாற்காலியொன்றைக் காட்டினான். அவசரமாய் ஷேவைத் தொடர்ந்தான். திடீர்ப் பரபரப்பில் எங்கேயாவது கன்னத்தில் ப்ளேடால் தப்பாய் இழுத்து விடுவோமோ என்று பயமாயிருந்தது.

"ஒரு நிமிஷம் வந்துடறேன்..." என்று வாஷ்பேசினுக்கு ஓடினான்.

பவானி உட்காரவில்லை. சுற்று முற்றும் வீட்டைக் கண்களால் அளந்தாள். மெதுவாய் நடந்து சுற்றிப் பார்த்தாள்.

பாலாவுக்கு அறை அலங்கோலமாய்க் கிடக்கிறதே என்று கவலை வந்தது. அங்கங்கே தூக்கிப் போட்ட துணிகள், படித்து வீசின புத்தகங்கள், கலைந்த படுக்கை, மடித்து வைக்கப்படாத பெட்ஷீட்.

அவளும் அதை உணர்ந்த மாதிரி "இது என்ன இப்படிக் கிடக்குது வீடு.." என்று இரைந்து கிடந்த புத்தகங்களையெல்லாம் எடுத்து ஷெல்ஃபில் அடுக்கி வைக்கப் போனாள். பின்னர் என்ன நினைத்தாளோ

மறுபடி அவற்றைப் பழைய இடத்திலேயே கலைத்துப் போட்டாள்.

"பேச்சிலர் ரூம்னா இப்படித்தான் இருக்கணும். அதைக் கலைக்கக் கூடாது..." என்றாள் சிரித்தபடி. தொடர்ந்து "சும்மா வந்தேன்..." என்றாள். மறுபடி ஓரிரு விநாடிகள் ரூமுக்குள்ளே உலாத்திவிட்டு சரேலென புறப்பட்டுப் போய்விட்டாள்.

ஒரே ஒரு நிமிடம் இருக்குமா! சற்று நேரம் முன்பு அவள் இந்த வீட்டுக்குள் இருந்தது. ஏதோ நாள் முழுவதும் அங்கேயே அவள் இருந்த மாதிரி உணர்வு. பாலா அவளுக்காக எடுத்துப் போட்ட பிரம்புச்சேரில் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டான். 'பவானி' என்று ஒருமுறை மனதிற்குள் சொல்லிப் பார்த்துக் கொண்டான்.

**பா**லாவுக்கு உடனே பவானியைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. யோசிக்காமல் சட்டென எழுந்து வீதியைக் கடந்து எதிர் வீட்டுப்படி ஏறினான்.

முன்னறையும் அதற்கடுத்த அறைகளும் தாண்டி, தாழ்வாரத்தில் பவானி. சரோஜாம்மா முறத்தில் நெல்புடைத்துக் கொண்டிருந்தாள்.

"ஏன் உடனே வந்துட்ட? அத்தனை மோசமாவா இருக்கு என்னோட வீடு!" என்றான்.

"அதெல்லாம் இல்லை. இங்க கொஞ்சம் வேலை இருந்தது..." என்று முற்றத்தைக் காட்டினாள். நிறைய பொம்மைகள் காய்ந்து கொண்டிருந்தன.

அப்போதுதான் பாலா அதைக் கவனித்தான். ஆச்சரியப்பட்டான்.

"இதெல்லாம் என்ன பொம்மை, பொம்மையா?"

சரோஜாம்மா நெல் புடைப்பதை நிறுத்திவிட்டுச் சொன்னாள்.

"எல்லாம் இவளே கையால செஞ்சது. அவ தாத்தா கிட்டயிருந்து கத்துக்கிட்ட கலை...."

வியப்பில் அவன் கண்கள் விரிந்தன. பவானி அதை எப்படி செய்தாள் என்று விளக்க ஆரம்பித்தாள். எல்லாம் காகிதக் கூழ் கொண்டு செய்ததாம். சும்மா இருக்கிற சமயங்களில்.

பாலா பக்கத்தில் போய் அவற்றை எடுத்துப் பார்த்துப் பிரமித்தான். "இன்னும் இருக்கு" என்று பவானி வீட்டுக்குள் ஓடினாள். அவள் செய்திருந்த பொம்மைகள் அத்தனையும் அள்ளி வந்து கடை பரப்பினாள். தோளில் ஏருடன் உழவன், தவழ்கிற கண்ணன், சாய்வு நாற்காலியில் ஒய்யாரமாய்ப் புத்தகம் படிக்கிற குழந்தை, இடுப்பில் குடத்துடன் வளைந்த பெண், பறவைகள், நாய், பூனைக்குட்டி...

"எனக்கொன்று பண்ணிக்குடேன். ஷெல்ஃப்ல வெச்சுக்கறேன்."

"உங்களுக்கில்லாததா? என்ன பொம்மை வேணும்?"

'ம்' என்று யோசித்தான் பாலா. "றெக்கை விரிச்சிட்டிருக்கிற மாதிரி ஒரு புறா..."

"ரைட்... ஆகட்டும்..." என்று எழுந்து பின் பக்கம் கிணற்றடிக்குப் போனாள். அவன் பவானி போவதையே பார்த்துக் கொண்டிருந்தான்.

**பா**லா சிறிது நேரம் பொம்மைகளைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு அவனும் பின்பக்கம் போனான். பவானி தண்ணீர் இறைத்து தொட்டியில் நிரப்பிக் கொண்டிருந்தாள். அவள் பின்னால் போய் நின்றான் பாலா.

"நான் வேணா இறைச்சுத் தரட்டுமா..?" என்றான். குரல் கேட்டுத் திரும்பிச் சிரித்தாள் பவானி.

"பரவாயில்லை. வேண்டாம்." பவானி கயிற்றை இழுத்து, இழுத்து விட ப்ளக், ப்ளக் என்று பித்தளைக் குடத்தில் தண்ணீர் நிரம்புகிற சப்தம். அவன் கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தான்.

அந்த இடைவெளியில் "பவானி! ஒண்ணு சொல்லட்டுமா?" என்றான்.

"என்ன சொல்லுங்க" என்று நிறைந்த குடத்தை இரு கையிலும் மாறி மாறி இழுக்க ஆரம்பித்தாள்.

பாலா தீர்மானித்தான். அதைச் சொல்லி விடலாம் என்று திடீரென்று தோன்றி விட்டது. பொறுமை ஒரு விநாடியில் எல்லைக் கோட்டை தகர்த்துக் கொண்டு விட்டது. சட்டென்று அதைச் சொல்லியும் விட்டான். அவனே நம்ப முடியாத ஒரு கணம் அது.

"பவானி! நீ விரும்பினா உன்னைக் கல்யாணம் பண்ணிக்கத் தயாரா இருக்கேன்...."

பவானி திகைப்பில் சட்டென்று கைகளை விட்டுவிட்டாள். குடம் வெகு வேகமாய் கயிற்றை இழுத்துக் கொண்டு கீழ் நோக்கிப் போனது. மறுவிநாடி 'பொம்' என்று அது மூழ்கும் சப்தம் கேட்டது.

(தொடரும்)






1998 ஜூலை 26
வெகுதான்ய ஆடி 10
மலர் : 56
இதழ் : 52

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## வீராசாமி விவகாரம்; முதல்வருக்குச் சோதனை!

ஆர்க்காடு வீராசாமி விவகாரம் முதல்வருக்குப் பெரிய சோதனையாக எழுந்திருக்கிறது. அமைச்சரின் சகோதரர், சென்னை நகர விளம்பரப் பலகைகள் பலவற்றுக்கு உரிமையாளர். ஏறத்தாழ இரண்டாயிரம் விளம்பரப் பலகைகளுக்கான வரியை மாநகராட்சிக்குச் செலுத்தாமல் அவர் ஏய்த்து விட்டார் என்பது குற்றச்சாட்டு. இந்தக் குற்றச்சாட்டின் அடிப்படையில் சென்னை செஷன்ஸ் நீதிமன்றத்தில் தனிநபர் ஒருவர் கொடுத்த புகார் மனு ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

நீதிமன்றம் புகாரை ஏற்றுக் கொண்டதுமல்லாமல், காவல் துறை விசாரணை மேற்கொள்ளப்பட வேண்டும் என்றும் உத்தரவிட்டுள்ளது. செஷன்ஸ் நீதிபதி பானுமதியின் உத்தரவு, தமிழக காவல் துறை டைரக்டர் ஜெனரலுக்கு அனுப்பப் பட்டிருக்கிறது!

இந்த நிகழ்ச்சியே தமிழக அரசுக்குப் பெரிய தலைகுனிவு என்று சொல்லிவிட முடியாது. ஆனால் பெருத்த அவமானமாக இது மாறாமல் இருக்க, அமைச்சர் ஆர்க்காடு வீராசாமி தாமே முன்வந்து ராஜினாமாவைச் சமர்ப்பித்து விடுவது நல்லது.

'நீதிமன்றம் உத்தரவிட்டுள்ள காவல் துறை விசாரணை முறைப்படி, தடையின்றி




நடக்கவிடாமல் அமைச்சர் பதவி வகிக்கும் வீராசாமி முட்டுக்கட்டை போடக் கூடும். இது நிகழாமலிருக்க அவர் பதவி நீக்கம் செய்யப்படுவதே நல்லது' என்கிறார் ஜெயலலிதா. இதுகுறித்து ஆளுனரிடம் மனு வேறு செய்திருக்கிறார்.

ஜெயலலிதா அரசியல் எதிராளியாக இருக்கலாம். 'ஊழல் புகார் குறித்துப் பேச அவருக்கு என்ன தார்மிக பலம் இருக்கிறது?' என்ற கேள்வியும் எழலாம். ஆனால் இதனாலெல்லாம் ஆர்க்காடு வீராசாமி பேரில் கூறப்பட்டுள்ள குற்றச்சாட்டு வலுவிழந்து விடாது.

ஆகையால், தமது ராஜினாமாவைச் சமர்ப்பிப்பதன் மூலம் முதல்வரை தர்மசங்கடத்திலிருந்து காப்பாற்றும் பொறுப்பு அமைச்சருக்கு இருக்கிறது. கலைஞரே தமது தலைவர் என்று சூளுரைக்கும் ஆர்க்காட்டார், அந்தத் தலைவரின் நலனையும் கட்சியின் நலனையும் ஆட்சியின் நலனையும் கருதிச் செயல்பட வேண்டிய நேரம் இது.

அமைச்சர் ராஜினாமா செய்யத் தவறினால் அவரது ராஜினாமாவைக் கோரும் கசப்பான பொறுப்பு முதல்வருக்கு இருக்கிறது.

விளம்பரப் பலகைகள் விவகாரத்தில் சென்னை மாநகராட்சிக்கு வரியிழப்பு நேர்ந்துள்ளது. மாநகராட்சி மேயர், முதல்வரின் மகன்; கட்சியில் முக்கிய பொறுப்பு வகிப்பவர். காவல் துறையோ முதல்வரின் நேரடிக் கட்டுப்பாட்டில்தான் இருக்கிறது.

இதனால் முதல்வர் இரட்டிப்பு விழிப்புணர்வுடனும் சுறுசுறுப்புடனும் இவ்விஷயத்தில் இயங்கியாக வேண்டும். அமைச்சரின் ராஜினாமாவை உடனே கோர வேண்டும். அத்துடன் காவல்துறை விசாரணை முறைப்படியும் சுதந்தரமாகவும் துரிதமாகவும் நடந்து முடிய ஆவன செய்ய வேண்டும்.




விசாரணையின் முடிவில், அமைச்சர் குற்றமற்றவர் என நிரூபணமாகி விட்டால் அது தி.மு.க. ஆட்சிக்குத்தான் கூடுதலான கௌரவம் சேர்க்கும். அவ்வாறின்றி குற்றச்சாட்டுகள் மெய்ப்பிக்கப்பட்டாலும் அரசின் முழு ஒத்துழைப்பு இவ்விசாரணைக்குக் கிடைத்தது என்கிற நற்பெயரை அடையலாம். இதனால் இந்த ஆட்சியின் நம்பகத்தன்மை பலப்படும்.

ஜெயலலிதாவின் முறைகேடுகள் குறித்தும் அவரது ஆட்சிக் காலத்தில் அமைச்சர்கள் இழைத்த ஊழல்கள் குறித்தும் பல்வேறு வகையான நீதி விசாரணைகள் நடைபெற்று வருகின்றன. இதற்கென, தமிழக அரசின் முயற்சியில் சிறப்பு நீதிமன்றம் வேறு நிறுவப்பட்டிருக்கிறது.

சட்டத்தின் ஓட்டைகளைப் பயன்படுத்தி ஜெ. இந்த விசாரணைகளுக்கு முட்டுக்கட்டை போட்டு வருகிறார். அவற்றை எதிர்கொண்டு அரசும் நீதித் துறையும் போராடி வருகின்றன.

இந்தச் சந்தர்ப்பத்தில் தமிழக அரசின் நேர்மை சந்தேகத்துக்கப்பாற்பட்டதாக இருக்க வேண்டியது அவசியம். இல்லாவிட்டால் ஜெயலலிதா பேரிலான வழக்குகள் அர்த்தமும் வலுவும் இழந்து போய் நிற்கும்.

ஆர்க்காடு வீராசாமி பேரிலான குற்றச்சாட்டுகள் ஆராயப்படும்போது, வேறு தி.மு.க. புள்ளிகளின் பெயர்களும் வெளிவரக்கூடும். அவ்வாறு வெளிப்பட்டு, குற்றச்சாட்டுகளும் உறுதிப்பட்டால் 'பதர்'களை உதறித் தள்ளி கட்சியைத் தூய்மைப்படுத்துவதற்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பம். ஆட்சியும் அதனால் பலப்படும் என்பதுடன் எதிர்காலத்தில் ஊழல் செய்யவோ அதற்குத் துணை போகவோ நினைப்பவர்களுக்குக் கடும் எச்சரிக்கையாகவும் இந்த நடவடிக்கைகள் அமையும். ●

# வழிகாட்டும் குழு (ஐ.முறைகல்!)

**ச**மீபத்தில் சென்னையில் அகில இந்திய சுற்றுலா வழிகாட்டிகள் கூட்டமைப்பின் இரண்டாவது மாநாடு நடந்தது. கல்கத்தா, ஜெய்பூர், கஜுராஹோ, மும்பை என்று பல இடங்களிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள்.

பாப்ரி-மஸ்ஜித் விவகாரம், சூரத்தில் பிளேக் நோய், அஸ்ஸாமில் வெள்ளம் இப்படி எது நடந்தாலும் இந்தியாவுக்கு வரும் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து விடுகிறதாம். சமீபத்தில் போக்ரன் அணுகுண்டு வெடிப்பு!

''ஜூலை, ஆகஸ்ட் மாதங்களில் சென்னைக்கு வரும் ஸ்பெய்ன், இத்தாலி, பிரான்ஸ் நாட்டுச் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை கணிசமாக இருக்கும். குறைந்தது 10 வழிகாட்டிகளாவது ரொம்ப பிஸியாக இருப்பார்கள். இப்போது ஒரே ஒரு வழிகாட்டிக்குத்தான் பணி கிடைத்திருக்கிறது'' என்கிறார் அசோகா. மேற்படி கூட்டமைப்பின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் தமிழர்.

இந்திய அரசின் சுற்றுலாத் துறையின் அங்கீகாரம் பெற்றவர்கள் இதன் உறுப்பினர்கள். அங்கீகாரம் கிடைப்பதற்கு என்ன தகுதி?

குறைந்தது பட்டப்படிப்பு இருக்க வேண்டும். சில இந்திய சுற்றுலா அலுவலகங்களில் நடத்தப்படும் 3-6 மாத அளவிலான பயிற்சியில் தேர்வு பெற வேண்டும்.

இன்னொரு முக்கிய விஷயம்: வழிகாட்டிக்கு மாநில மொழி, ஆங்கிலம், இவை தவிர வேறொரு வெளிநாட்டு மொழியும் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டும்!

கூட்டமைப்பின் செயலாளரான தவுலத் கிங் ஜெய்ப்பூரைச் சேர்ந்தவர். ''கோவாவுக்கு வருபவர்கள் உல்லாசப் பயணிகள். சிக்கிம் செல்பவர்கள், இமயத்தில் ட்ரெக்கிங் செய்வதற்காக வருபவர்கள். இவர்களைத் தவிர்த்து வரும் வெளி நாட்டுப் பயணிகளான cultural tourists எனப்படுவோர்தான் எங்கள் இலக்கு'' என்கிறார்.

ஒரு நாளைக்கு ரூ. 345லிருந்து 650வரை என்று அரசு இவர்களுக்கான வருமானத்தை நிர்ணயித்திருந்தாலும் திடீர் திடீரென்று ஆங்காங்கே தோன்றும், அரைகுறை வழிகாட்டிகள் ஒரு பக்கம், வெளி நாடுகளிலிருந்து வரும் சுற்றுலாக் குழுக்களின் தலைவரே வழிகாட்டிபோல் நடந்து கொள்வது, ஆகிய இரண்டும் இந்த வழிகாட்டிகளின் வருமானத்தை வெகுவாகப் பாதித்திருக்கிறது என்கிறார்.

— ஜி.எஸ்.எஸ்.

படம்: ஸ்ரீஹரி





"பேபஸ்... ஷீலா சங்கர் ஸ்பீக்கிங்"

"கொஞ்ச நாள் முன்னால டெலிபோனை எடுக்கவே எனக்கு பயமா இருக்கும். யாராவது இங்கிலீஷ்ல பேச ஆரம்பிச்சா பதில் சொல்லத் தெரியாம திண்டாடிப் போயிடுவேன்.

"இத கவனிச்ச என்னோட ஆபீஸ் ஃப்ரெண்ட்ஸ் விவேகானந்தால சேருன்னு அட்வைஸ் பண்ணினாங்க. நானும் ட்ரை பண்ணிப் பார்க்கலாமேன்னு சேர்ந்து, அவங்க அனுப்பின ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸ் பேட்டரியலை படிச்சு பிராக்டிஸ் பண்ண ஆரம்பிச்சேன். என்னோட பயமெல்லாம் இப்ப எங்க போச்சுன்னு தெரியல.

"Now, I speak English very fluently. சொன்னா நம்ப மாட்டீங்க. ஒரே வருஷத்துல எனக்கு ரெண்டு ப்ரமோஷன் கிடைச்சிருக்கு."

Mrs. ஷீலா சங்கர்

திருமதி ஷீலா சங்கரைப் போலவே ஏழு லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் விவேகானந்தாவின் ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸில் சேர்ந்து மிகச் சரளமாக இங்கிலீஷில் பேசும் ஆற்றல் பெற்றுள்ளனர். இந்த கோர்ஸ் அடிப்படை, இலக்கணம், ஸ்போக்கன் இங்கிலீஷ் என மூன்று லெவல்களாக அமைந்துள்ளது. உங்களுக்கு தேவையான லெவலில் சேர்ந்து வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் சுலபமாக இங்கிலீஷ் கற்றுக்கொள்ளுங்கள். தயக்கமின்றி மிகச்சரளமாக பேசத் தொடங்குங்கள்.

**LEVEL - 1** (அடிப்படை ஆங்கிலம்) ஆரம்ப நிலையிலிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தைகளை ஸ்பெல்லிங் மிஸ்டேக் இல்லாமல் எழுத, படிக்க எளிய முறையில் பயிற்சி பெறலாம். பயிற்சிக் கட்டணம் ரூ. **175/-** மட்டுமே.

**LEVEL - 2** (இலக்கணப் பயிற்சி) ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டு பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத முறையாகப் பயிற்சி பெறலாம். பயிற்சிக் கட்டணம் ரூ. **225/-** மட்டுமே.

**LEVEL - 3** (ஸ்போக்கன் இங்கிலீஷ்) தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் சரளமாகப் பேச நவீன முறையில் பயிற்சி பெறலாம். பயிற்சிக் கட்டணம் ரூ. **250/-** மட்டுமே.

**LEVEL - 2&3** இரண்டு பிரிவுகளிலும் சேர்ந்து பயிற்சி பெற ரூ. **375/-** மட்டும் செலுத்தினால் போதும்.

**LEVEL-1,2&3** மூன்று பிரிவுகளிலும் சேர்ந்து பயிற்சி பெற ரூ. **525/-** மட்டும் செலுத்தினால் போதும்.

இக்கூப்பனை பூர்த்தி செய்து நிரப்பி அனுப்புங்கள்

நான் விவேகானந்தாவின் ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸில் சேர விரும்புகிறேன். எனக்கு பாடங்களை V.P.P. யில் அனுப்புங்கள். தபால்காரரிடம் பணத்தைச் செலுத்தி பாடங்களைப் பெற்றுக்கொள்கிறேன். (தேவையான கட்டத்திற்குள் ✓ குறியிடவும்)

- LEVEL-1 — பெயர்: ..........
- LEVEL-2 — முகவரி: ..........
- LEVEL-3 — ..........
- LEVEL-2&3 — ..........
- LEVEL-1,2&3 — பின்கோடு: ..........

**VIVEKANANDA INSTITUTE**

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை - 600 017.

KLK

**நேர்முகப்பயிற்சி பெற விரும்புவோர் கீழ்க்காணும் பயிற்சி மையத்துடன் தொடர்பு கொள்ளுங்கள்**

**சென்னை** : 9, பேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17. ★ 30, டேங்க் பாங்க் ரோடு, (E.S.I. ஆஸ்பத்திரி அருகில்) கீழ்ப்பாக்கம், சென்னை-10. ★ 205, T.H. ரோடு, (M.M. தியேட்டர் அருகில்) தண்டையார்பேட்டை, சென்னை-81. ● 18, ராமசாமி தெரு, சண்முகம் ரோடு, மேற்கு தாம்பரம், சென்னை-45. ● **மதுரை** 26A, கண்ணாடிக்காரத் தெரு (கூடலழகர் பெருமாள் கோவில் அருகில்) மதுரை-1 ● **திண்டுக்கல்** 7, E.V.R. சாலை, 80 அடி ரோடு, மேற்கு அசோக் நகர், திண்டுக்கல்-1 ● **திருச்சி** சோழா டவர்ஸ், 23C/5, கீழச்சிந்தாமணி, (E.R. ஸ்கூல் எதிரில்) திருச்சி-2. ● **கோயம்புத்தூர்** ஸ்ரீ கிருஷ்ணா டவர்ஸ், 515, டாக்டர் நஞ்சப்பா ரோடு, காந்திபுரம், கோயம்புத்தூர்-18. ● **குன்னூர்** 30-B, S.S. கேன் காம்ப்ளெக்ஸ் மவுண்ட் ரோடு, குன்னூர்-2. ● **சேலம்** சென்ட்ரல் கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ் (மெய்யனூர் அருகில்) 77, ஓமலூர் மெயின் ரோடு, சேலம் - 1 ● **கிருஷ்ணகிரி** 35, 2-வது கிராஸ், கோ-ஆப்ரேட்டிவ் காலனி, கிருஷ்ணகிரி-1 ● **ஈரோடு** 811, பிரப் ரோடு (டெலிபோன் பவன் அருகில்) ஈரோடு-1. ● **திருப்பூர்** K.P.N. காலனி முதல் தெரு சங்கீதா தியேட்டர் மெயின் ரோடு, திருப்பூர்-1 ● **வேலூர்** 9, நீலகண்டர் தெரு (பக்கி ஆஸ்பத்திரி அருகில்) வேலூர் ● **தஞ்சாவூர்** 1263/1 தெற்கு வீதி, (பாரதமாதா பப்ளிசிட்டி மாடியில்) தஞ்சாவூர்-9. ● **அரக்கோணம்** 107, பஜார் வீதி, அரக்கோணம்-1 ● **பாண்டிச்சேரி** 326, அம்பலத்தாடையார் மடத்து வீதி (அண்ணா சாலை அருகில்) பாண்டிச்சேரி -1.

**தபால் ஸ்டிரைக் காரணமாக, கேள்விகள் வராததால் 'நீங்கள் கேட்டவை' இந்த வாரம் இடம் பெறவில்லை. ஸோ, நாமே சில வி.ஐ.பிக்களைக் கேள்வி கேட்க முடிவு செய்தோம். தவிர்க்க முடியாமல் நமது கேள்விகள் 'ஸ்டிரைக்' பறியதாகவே அமைந்து விட்டன!**

**கல்லூரியில் படித்த நாட்களில் ஸ்டிரைக் செய்திருக்கிறீர்களா?**

**பேராசிரியர் பெரியார் தாசன் :**

**1965**யில் பச்சையப்பன் கல்லூரியில் இரண்டாம் வருட பட்டப்படிப்பைப் படித்துக் கொண்டிருந்தபோது இந்தியை எதிர்த்து ஸ்டிரைக் செய்தோம். காங்கிரஸ் மற்றும் திராவிடர் கழகத்தைச் சேர்ந்த மாணவர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடாமல் இருக்க, அப்போதைய திமுக ஆதரவு மாணவர்களான நாங்கள் ஸ்டிரைக் செய்தோம். பலன் என்ன? தமிழை வாழ வைக்க முயற்சி என்று நாங்கள் கருத, அது ஆங்கிலத்தைத் தக்க வைக்கும் முயற்சியாக மாறிப் போன அவலம் பிறகுதான் புரிந்தது. ஒரு வருடம் வீணானதுதான் மிச்சம். ஆயிரம் பேர் ஊர்வலம் போனால் பத்து பேராவது அதில் வன்முறையாளர்களாக இருப்பார்கள். அதுதான் அப்போதும் நடந்தது. பொதுவாக ஒரு ஊர்வலம் என்றால் போலீஸ் சிலரைக் கைது செய்யும். பின் அவர்கள் விடுதலை செய்யப்பட்டாலே, 'வெற்றி' என்று கோஷமிடுகிறார்கள். கோரிக்கை என்ன ஆனது என்பதைப் பற்றிக் கவலையில்லை. இதுதான் பெரும்பாலான ஸ்டிரைக்குகளின் லட்சணம்!

**மருத்துவத்தைப் பொறுத்தவரை 'திடீர் வேலை நிறுத்தம்' என்றவுடன் உங்கள் நினைவுக்கு வருவது எது?**



• ரா.கி. ரங்கராஜன்

**டாக்டர் சுதா சேஷையன்:**

**சி**ல குழந்தைகள் தூக்கத்திலேயே, எந்தவிதக் காரணமும் இல்லாமல் இறந்துவிடும். இப்படி இதயம் இயக்கத்தை திடீரென்று நிறுத்திக் கொள்வதை SIDS (Sudden Infant Death Syndrome) என்று குறிப்பிடுவார்கள். பல வருடங்களுக்கு முன் என் உறவினர் ஒருவரே "தூளியிலே குழந்தையை படுக்கப் போட்டுட்டு வேலையை முடிச்சிட்டு வந்து பார்த்தா குழந்தை செத்துக் கிடந்தது" எனும்படியான சம்பவம் நடந்தது. இன்னமும் கூட SIDSக்கான அனைத்துக் காரணங்களும் கண்டு பிடிக்கப்படவில்லை. என்றாலும் ஒரு வயதுக்குட்பட்ட குழந்தையைக் குப்புறப் படுக்க வைத்துத் தூங்கச் செய்தால், தூக்கத்தின்போது போதிய ஆக்ஸிஜன் கிடைக்காமல் இறக்க வாய்ப்பு உண்டு என்று ஒரு காரணத்தை அறிந்திருக்கிறார்கள்.



• நியூஸ் வரதராஜன்



• பெரியார்தாசன்

**நீதிபதிகள் ஸ்டிரைக் செய்ததுண்டா?**

**முன்னாள் நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியார்:**

**ந**ம் நாட்டிலும் சரி, வெளிநாட்டிலும் சரி, எனக்குத்

தெரிந்து நீதிபதிகள் எந்தவித வேலை நிறுத்தத்திலும் ஈடுபட்டதில்லை. உற்பத்தியோடு தொடர்புடைய உழைப்பாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதுதான் சரித்திரத்தில் உண்டு. அறிவு ஜீவிகள் - ஸ்டிரைக் இரண்டும் என்னைப் பொருத்த வரை தொடர்பில்லாத வார்த்தைகள். வழக்கறிஞர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடும் விந்தையைக் கூட, கடந்த பத்து வருடங்களாகத்தான் இங்கு காண்கிறேன்.

ஜூன் பதினைந்து வாக்கில் மேட்டூர் அணை திறக்கப்படுவதை ஒரு முக்கியச் செய்தியாக சொல்வது வழக்கம். அன்று செய்திகள் வாசிக்கும்போது "இந்த ஆண்டு மேட்டூர் அணையிலிருந்து காவிரி நீர்..." என்று பாதி வாக்கியத்தில் தொண்டை கரகரப்பாகி வரண்டு போக, தொண்டையை சரி செய்து கொண்டு "மன்னிக்கவும்" என்று மீண்டும் அந்த வாக்கியத்தை முதலிலிருந்து தொடங்க, அதே இடத்தில் மீண்டும் தொண்டையில் வேலை நிறுத்தம். அப்போதெல்லாம் ஒரே



• கிருஷ்ணசாமி ரெட்டியார்

# கேட்டவை



• எஸ்.வி. சேகர்

செய்தி வாசிப்பாளர் வேறு. செய்திக்கான படங்கள் ஓடும் போது தொண்டையை நனைத்துக் கொள்வதற்காக ஒரு தம்ளர் தண்ணீரை அருகே வைத்திருப்பது வழக்கம். வேறு வழியில்லாமல் அத்தனை நேயர்களும் திரையில் பார்த்துக் கொண்டிருக்கும் போதே நான் தண்ணீரைக் குடித்து விட்டு செய்திகளைத் தொடர்ந்தேன். ஆக, காவிரி எனக்கும் பிரச்னையாகி விட்டது.

**மனைவி திடீரென்று 'சமையல் செய்யமாட்டேன்' என்று ஸ்டிரைக் செய்தால் என்ன செய்வீர்கள்?**

**எஸ்.வி. சேகர் :**

தபால் துறையினர் போன்றவர்கள் செய்யும் ஸ்டிரைக் வேறு வகை. மனைவியின் மறுப்பு வேறு வகை. மனைவி 'சமைக்க மாட்டேன்' என்றால் காரணம் கேட்பேன். நியாயமான காரணமென்றால் ஓகே. அதற்காக நானே நளபாகம் செய்ய களத்தில் இறங்கிவிட மாட்டேன். ஹோட்டல்தான்.

**டி.வியில் நியூஸ் வாசித்த போது தொண்டை ஸ்டிரைக் செய்த அனுபவம் ஏதாவது உண்டா?**

**வரதராஜன் :**

1982 ஆம் ஆண்டு என்று நினைவு. ஒவ்வொரு வருடமும்

**எழுதும் போது பேனா ஸ்டிரைக் செய்து, மூட் அவுட்டானது உண்டா?**

**ரா.கி. ரங்கராஜன் :**

ஐந்து மணிக்கு மேட்டரைக் கொடுக்க வேண்டும் என்பதற்காக நாலரை மணிக்கு கிடு கிடுவென்று எழுதும் போது பேனா மக்கர் செய்தால் மூட் அவுட்டாகாமல் இருக்குமா? எத்தனையோ முறை! இங்க் பேனாதான் பொதுவாகப் பயன்படுத்துவேன். எவ்வளவு டைட்டாக மூடியிருந்தாலும் அதை நான் திறந்து விடுவேன். எடிட்டர் (அமரர் எஸ்.ஏ.பி) கூட "உனக்கு எலும்புக் கை" என்பார். ஆனால் கீழே இங்க்கை சிந்தாமல் பேனாவை நிரப்பும் கலை எனக்கு சுட்டுப் போட்டாலும் வராது. அதற்குப் புனிதன்தான் உதவுவார். இப்போதெல்லாம் பால் பாயிண்ட் – மைக்ரோடிப் பேனாவைத்தான் பயன்படுத்துகிறேன். நகைச்சுவை படைப்புகளை எழுதும் போது பாதியில் பேனா மக்கர் செய்வது பெரும் கொடுமை!

தொகுப்பு : குல்ஷா



"நீங்க ரயில்வேலதானே வேலை செய்றீங்க...?"

"ஆமா... எப்படிக் கண்டுபிடிச்சீங்க...?"

"மணி எத்தனைன்னு கேட்டதுக்கு பதினாறு பத்துன்னு சொன்னீங்களே...!"

— லட்சுமி ஆவுடைநாயகம்

"ஆபீஸுக்கு லேட்டா வரதும் இல்லாம சிரிச்சுட்டு வர்றியே?"

"லேட்டா வந்ததுக்கு இன்னைக்கு சொல்லப் போற காரணத்தை நினைச்சா எனக்கே சிரிப்பு தாங்கலை, சார்!

— எஸ். எஸ். பூங்கதிர்





"வழக்கமான இடத்துக்கு வந்துடுன்னு சொல்லிட்டு 'டக்'குனு போனை கட் பண்ணிட்டாருடி என் காதலர்..."

"போக வேண்டியதுதானே...!"

"எந்தக் காதலர்னு தெரியாம எந்த இடத்துக்குப் போறதுன்னு யோசிக்கிறேன்...!"

— ஜூனியர் தேஜ்

"கேஸ் தோற்றுப் போனதுகூட எனக்கு அவ்வளவா வருத்தமளிக்கலை; ஆனா, என் லாயர் அதை என்னிடம் சொன்ன விதம்தான் வயித்தெரிச்சலா இருந்துச்சு..."

"என்ன சொன்னார்?"

"'நீதி வென்றுவிட்டது'ன்னுதான்!"

— லலிதா செல்லப்பா



"என்னங்க, எனக்கு வீட்ல மாப்பிள்ளை பார்த்து முடிச்சுட்டாங்கன்னு சொல்றேன். நீங்க பாட்டுக்கு கண்டுக்காம கம்முன்னு இருக்கீங்களே? ஏதாச்சும் பேசுங்க...!"

"எப்ப டிரீட் கொடுக்கப் போறே, கமலா?"

— எஸ்.எஸ். பூங்கதிர்





"பஸ் கண்டக்டருக்குப் போய் ஏன் மாமூல் கொடுத்தே?"

"தள்ளு தள்ளுன்னாரு. மஃப்டி போலீஸ் ஞாபகத்துல மாமூல் தள்ளிட்டேன்...!"

— ஜூனியர் தேஜ்

"காலம் எவ்வளவு தூரத்துக்கு முன்னேறிடிச்சு பாருப்பா!"

"என்னப்பா சொல்ற?"

"ஏன்டா, கிளாஸை கட் அடிக்கறேன்னு, பையன்கிட்ட கேட்டா, ஆசிரியரின் எதேச்சாதிகார நடவடிக்கையைக் கண்டித்து வெளிநடப்பு செய்யறேங்கறான்!"

— தே. கண்ணன்





"முடி உதிர்வதைத் தடுக்க உங்க ஹேர் ஆயிலில் புதுசா 'G' பார்முலா உள்ளதுன்னு விளம்பரம் செய்திருக்கீங்களே, என்ன அது?"

"கோந்து கலந்திருக்கோமே!"

— கீழை. அ. கதிர்வேல்

மாட்டாராம் கலைஞர். கல்வி, போக்கு வரத்து, சுகாதாரம் ஆகிய துறைகளின் செயல்பாடுகள் கலைஞருக்குத் திருப்தி தரவில்லையாம். கலைஞர் தன்னிடமுள்ள ஒன்றிரண்டு துறைகளைப் புதிதாக நியமிக்கப்படுவோரிடம் ஒப்படைத்தாலும் ஆச்சர்யப் பட வேண்டியதில்லை என் கிறார்கள். கலைஞரிடம் 'சபாஷ்' பெற்றிருப்பவர்கள் கோ.சி.மணியும், துரை முருகனும்தானாம்.


• ஸ்டாலின்


• ஆர்.கே. குமார்

● "ஆர்க்காட்டாரின் சுற்றத்தாரிடம் வருமான வரி இலாகா காட்டும் வேகம் எதிர்பார்த்ததுதான்" என்று கேஷுவலாக நம்மிடம் சொன்னார் கழகத்தின் மேல்மட்டப் பிரமுகர் ஒருவர். நீண்ட காலமாகவே, வருமானவரி இலா காவின் கண்காணிப்பில் இருந்தார்களாம் அவர்கள். இப்போது 'காக்கை உட்கார' கதையாக, நடவடிக்கைகள் துவங்கியிருக் கின்றன" என்கிறார் அந்தப் பிரமுகர். ஆனால் 'கழகத்தை உடைக்கச் சதி' என்ற ஆர்க்காட்டாரின் அறிக்கை கண்டு முகத் தைச் சுளிக்கிறார்கள் கழகத்தினர். "அவரோட பிரச்னைகளுக்காகக் கழகத்தை ஏன் பிக்சருக்குக் கொண்டு வருகிறார் அவர்?" என்று கேட்கிறார்கள். இதற்கிடை யில் அ.தி.மு.க மத்திய அமைச்சர்களின் பழி வாங்கும் போக்கைத் தடுத்து நிறுத்திட, பிரதமரின் ஆலோசகர் பிரமோத் மூலமாகத் தேவையான நடவடிக்கை கள் எடுக்கப்படுவதாக தி.மு.க உள்வட்டாரங்கள் சொல்கின்றன.

● நீண்ட நாட்களாக முதல்வர் அமைச்சரவையில் கூட்டல், கழித் தல் வரும் என்று சொல்லிக் கொண்டு வருகிறார் அல்லவா! அதற்கான நேரம் வந்து விட்டது என்கிறது கோட்டை வட்டாரம். மாவட்டச் செயலாளர் பொறுப்பி லுள்ள அமைச்சர்கள் விடுவிக் கப் படுவார்கள் என்று ஒரு குருவி சொன்னாலும், சில சீனியர்கள் மேல் கை வைக்க

● தி.மு.க – த.மா.கா கவுன் சிலர்கள் மேயர் ஸ்டாலின் மீது கொஞ்சம் கடுப்பாகத் தான் இருக்கிறார்களாம். சமீபத்தில் நகரின் பல பகுதிகளில் நடை பாதை ஆக்கிரமிப்புகள் அகற்றப்பட்டன அல்லவா! அந்தச் சமயத்தில் வியாபாரிகளின் தொல்லை தாங்க முடியாமல் மாநகராட்சி அதிகாரிகளின் கைகளைக் கட்டிப் போட முயன்றார்கள் கவுன்ஸிலர்கள். ஆனால் அதிகாரிகள் "நாங்கள் ஒன்றும் செய்ய முடியாது. மேயர் தெளிவாகச் சொல்லி


• கோ.சி. மணி

விட்டுத்தான் அமெரிக்கா சென்றார்; நடவடிக்கைகளை நிறுத்த முடியாது" என்று சொல்லி விட்டார்களாம். இப்போது மேயர் அமெரிக்காவிலிருந்து திரும்பி விட, மாநகராட்சி ஆணையாளரைப் பற்றி ஒரு கூடைப் புகார்களுடன் தயாராக இருக்கிறார்கள் கவுன்ஸிலர்கள்.

● மத்திய புலனாய்வு ஏஜென்ஸிகளின் நடவடிக்கைகள் ரொம்பவும் குழம்ப வைக்கின்றன என்கிறார் மாநில உளவுத்துறை நண்பர் ஒருவர். தங்கக் கட்டிகள் விவகாரத்தில்



• துரைமுருகன்

தடாலடி அடித்த பின் தத்தி, தத்தி செல்லும் சி.பி.ஐ 'லெக்ஸஸ்' கார் விவகாரத்தில் பல துரித நடவடிக்கைகள் எடுத்திருக்கிறதாம். அ.தி.மு.க.வின் பொற்கால ஆட்சியில் மன்னார்குடி குடும்பம், பல ஆடம்பர கார்களை முறைகேடாக இறக்குமதி செய்த வழக்கில்; சம்பந்தப்பட்ட சுங்க இலாகா மதிப்பீட்டாளர் ஒருவர் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருக்கிறாராம். அப்போது கலெக்டராக இருந்தவரின் மீதுச் நடவடிக்கை துவங்க இருக்கிறதாம். திருச்செந்தூர் இறைவன் தான் காப்பாற்ற வேண்டும்.

● மெர்கன்டைல் வங்கி விவகாரத்தில் ஜெ.வுடன் சென்று பிரதமருடன் நடந்த

# அமெரிக்காவில் ஆர்.கே.குமார்?

சந்திப்புக்குப் பின் எந்த முன்னேற்றமும் இல்லை என்று வருத்தப்பட்டுக் கொண்டு இருக்கின்றன நாடார் இயக்கங்கள். இது சம்பந்தமாக ஜெ.யைத் தொடர்பு கொள்ள செய்த முயற்சிகளும் எடுபடவில்லையாம். குமாருக்குப் பின் நிதி இலாகா பொறுப்பை ஏற்றுள்ள கடம்பூராரும் கையை விரித்து விட்டாராம். இதற்குக் காரணம் சிவசங்கரனுக்கும் எஸ்ஸாருக்கும் பா.ஜ.க. மேலிடத்தில் உள்ள செல்வாக்குதான். இதற்கிடையில் சென்ற பாராளுமன்றத் தேர்தலுக்குப் பின்னர் ஊடலோடு இருந்த நாடார் அமைப்புகள் சரத்குமாரிடம் மீண்டும் நேசம் காட்டத் துவங்கியுள்ளன.

● அம்மாவால் கழட்டிவிடப்பட்ட ஆர்.கே. குமார் என்ன செய்கிறார்? குழப்பங்களிலிருந்து விடுபட கொஞ்சநாள் அமெரிக்காவுக்குச் சென்றிருப்பதாக அவரது உறவினர்கள் சொல்கிறார்கள்.

● சமீபத்தில் 50வது பிறந்தநாளைக் கொண்டாடினாரல்லவா திருநாவுக்கரசு? அதில் அவருக்கு ரூ. 50 லட்சமும் ஒரு சொகுசு காரும் 'பரிசாக' வழங்கப்பட்டது. இப்பரிசை வழங்கியதன்மூலம் ஒரு தி.மு.க. மற்றும் ஒரு அ.தி.மு.க. என இரு மிகப்பெரும் புள்ளிகள் தம் கறுப்புப் பணத்தை வெள்ளையாக்கி விட்டதாக வருமான வரித்துறையினர் கண்டுபிடித்துள்ளார்கள். விரைவில் ரெய்டு ஆரம்பிக்கலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது!

— தில்லப்பா

காதில் விழுந்தவை:

"சசி... நான் சொல்றதைக் கேளு. அந்தப் பொம்மை அதுவா உன்னைத் தேடி வரலை. நீயா... நீயாவே ஆமா... நீயாவே அதைப் போய் எடுத்திட்டு வந்து உன் நெஞ்சு மேலே வச்சிருந்திருக்கணும். ஆனா உன்னை அறியாமலேயே நீ இதைச் செஞ்சிருக்கணும்... இது ஒருவகையான ஸ்கிஸோஃப்ரீனியா..."

அவள் பலமாகச் சிரித்தாள்.

"நீ முட்டாள். அதிபயங்கரமான முட்டாள். இது நிஜமாகவே பழிவாங்கற ஆவியோட வேலைதான். ஆனா உனக்குப் புரியாது. ஏன்னா..."

"ஏன்னா..."

"உனக்கு உண்மை தெரியாது..."

"உண்மையா..."

"ஆமாம்... உண்மை..." அவள் தெளிவாகப் பேசினாள்.

"என்ன உண்மை...?"

அவள் சற்றுத் தயங்கி விட்டுச் சொன்னாள்.

"என் கணவரை வந்து..."

"வந்து..."

"நான்தான் கொலை செஞ்சேன்..." அவள் கண்களை மூடிக் கொண்டாள்.

நான் அதிர்ந்தேன்.

"சசி... என்ன இது சசி..."

"ஆமா... முரளி... நான்தான் என் கண

# குதிரை சக்தி

# 4

வரைக் கொலை செஞ்சேன்... அவர் இயல்பா படிக்கட்டுல விழுந்து இறந்துட்டார்னு பொய் சொன்னேன்..."

"மைகாட்... என்னாச்சு சசி... என்ன நடந்தது..."

"முரளி... நான் படுக்கைல அந்தக் குதிரை பொம்மையை அணைச்சிட்டு படுத்திட்டிருந்தேன். அப்ப அங்க வந்த பிரபாகர் அதைப் பத்திக் கேட்டார். நானும் 'அருணைப் பத்தி எல்லா உண்மையையும் சொல்லிட்டேன்... இதுவரைக்கும் நடந்தது நிஜம். அப்புறம் நான் சொன்னதுதான் பொய்..."

"நிஜத்துல என்ன நடந்தது..."

"அந்தப் பொம்மையைப் பத்தி சொன்ன உடனே...: 'ஏண்டி புருஷனை வெச்சிக்கிட்டே இன்னொருத்தனை நினைச்சிக்கிட்டு இருக்கியா.. குடுடி... அந்தப் பொம்மைய'ன்னு அந்த பொம்மையைப் பிடுங்க முயற்சி செஞ்சார். நான் திமிறிக்கிட்டு பெட்ரூமை விட்டு வெளில ஓடினேன். அவர் துரத்திக்கிட்டு வந்தாரு. நான் கீழே போற படிக்கட்டை நெருங்கின சமயம் என் முடியைப் புடிச்சிக்கிட்டார். என்னைத் திருப்பி என் கைல இருந்த பொம்மையைப் பிடுங்க முயற்சி செஞ்சாரு. நான் விடலை. அவர் ரொம்பக் கோபமாயிட்டார். 'அவன் உனக்கு அவ்வளவு முக்கியமான்னு' கேட்டுட்டே என் கழுத்தை நெரிக்க ஆரம்பிச்சார். எனக்கு மூச்சு முட்டிச்சி. கண்ணுல தண்ணியா வந்தது. நாக்கு வெளில வர ஆரம்பிச்சது. கழுத்து.. ஒடம்பு எல்லாம் ஒரு மரண வலி. கூடவே அவர்கிட்ட இருந்து வந்த அந்த சாராய நாத்தம்... என்னால தாங்க முடியலை. என் கைல இருந்த பொம்மையால அவர் தலைல ஒரு அடி கொடுத்தேன்... பலமான அடிதான்.

"அவர் என் கழுத்தை விட்டுட்டு அப்படியே தலையைப் புடிச்சிக்கிட்டு தள்ளாடினாரு. இரண்டு அடி நகர்ந்தாரு. முதல் படில தடுமாறி விழுந்தாரு. அப்படியே உருண்டு... உருண்டு ஹால்ல போய் விழுந்தாரு. சலனமே இல்லாம கிடந்தாரு. நான் கொஞ்ச நேரம் அப்படியே பார்த்துக்கிட்டு இருந்தேன். அப்புறம் மெல்ல கீழே இறங்கிப் போனேன். அவர் குப்புறக் கிடந்தாரு. நான் திருப்பினேன். முகம் பூரா இரத்தமா இருந்தது.

"அப்ப கண்களைத் திறந்து பார்த்தாரு. அவர் உதடு அசைஞ்சது. 'பழி'ங்கற வார்த்தை லேசா என் காதுல விழுந்தது. அப்படியே அவர் தலை சாஞ்சது. இது தான் உண்மையா நடந்தது முரளி..."

நான் அவள் சொன்னவற்றை



ஜீரணிக்க முற்பட்டேன்.

ஆனால் அவள் அதற்கு நேரம் தர வில்லை.

"இப்ப இதைத் தூக்கி எறியப் போறேன்" என்றவள் அந்தப் பொம்மையை எடுக்கப் போனாள்.

"எங்க போறே சசி..." என்றேன்.

''கடற்கரைக்கு... கடல்ல எறிஞ்சாதான் இது திரும்பி வராது...''

"இரு சசி... அவசரப் படாதே... இந்த இராத்திரி நேரத்துல வேணாம்... காலைல போலாம்..."

அவள் நான் சொன்னதைக் கேட்டதாகவே தெரியவில்லை. அந்தப் பொம்மையை எடுத்துக் கொண்டு வேகமாக வெளியேறினாள். நான் தொடர்ந்தேன்.

ஷெட்டி விருந்த சிவப்பு நிற காரில் அவள் அமர்ந்தாள். நானும் இடப்பக்க முன் இருக்கையில் நுழைந்தேன். நான் நுழைந்ததை அவள் கவனித்ததாகவே தெரிய வில்லை. அந்தப் பொம்மை முன் சீட்டில் எங்கள் இருவருக்குமிடையில் கிடந்தது.

அவள் காரை ரிவர்ஸில் படுவேகமாகவே எடுத்தாள். அவள் ஸ்டீரியங்கை லாகவமாகவே கையாண்டாலும் அவள் உடலில் ஒருவித இறுக்கம் எனக்குத் தெரிந்தது.

முன் காம்பவுண்ட் சுவரை லேசாக உரசியபடி கார் சாலைக்கு வந்தது.

நான் "மெதுவா... மெதுவா...." என்று சொன்னதை அவள் கவனிக்கவில்லை.

கார் துப்பாக்கிக் குண்டாய்ச் சீறியது...

"சசி... நான் சொல்றதைக் கேளு..."

அவள் ஒருகணம் என்னைப் பார்த்து விட்டு மறுபடியும் சாலையைப் பார்க்க ஆரம்பித்தாள்....

"நீ பேசாம வா...."

ஒரு திருப்பத்தில் கார் படு வேகமாகவே திரும்பியது... மைய விலக்கு விசையால் கார் கதவோடு அழுத்தப்பட்டேன்...

"சசி... மெதுவா ஓட்டு சசி... ப்ளீஸ்...."

மறுபடியும் என்னைப் புறக்கணித்தாள்...

யதேச்சையாக எங்கள் இருவருக்கும் இடையில் பார்த்தேன்... அந்தப் பொம்மையைக் காணவில்லை...

''சசி, அந்தப் பொம்மையைக் காணோம்...'' என்று நான் கத்தியது நான் செய்த முதல் தவறு என்பதைப் பிறகு உணர்ந்தேன்... திடுக்கிட்டுத் திரும்பிய சசியின் முகத்தில் திகில் பரவுவதை உணர்ந்தேன்... காரின் உள்ளே எரிந்த மங்கலான விளக்கின் ஒளி சீட்டின் அடியை

**ஃபெரமா ராஜ்**



"என்ன இது?! உங்க ஆபிஸ்ல அந்த வேடி ஸ்டெனோ மட்டும் அவ்வளவு பெரிய அறையிலே உட்கார்ந்து வேலை பார்க்கறாங்க?"

''நான்தான் சொன்னேனே, புது மானேஜர் ஸ்டெனோவுக்கு அளவுக்கதிமா இடம் கொடுத்து வெச்சிருக்கார்னு!''

– யமுனா ரெங்கநாதன்

எட்டவே இல்லை... அந்த இருட்டிலே என் கால்களுக்கருகில் அந்தக் குதிரை வருவதைப் போன்ற ஒரு திமர் பிம்பம் என் மனத்தில் திடுமென்று எழுந்தது... சடாரென்று கால்களைத் தூக்கிக் கொள்ள முற்பட்ட போது "என்ன இது பைத்தியக்காரத்தன எண்ணம்" என்று என்னை நானே கட்டுப்படுத்திக் கொண்டேன். அப்போதுதான் சசி தனது கால்களை ஸ்டியரிங் உயரத்திற்குத் தூக்கிக் கொண்டிருப்பதைக் கவனித்தேன்... ஆக்ஸிலேட்டரிலிருந்து அவள் கால்கள் விடுபட்டிருந்தாலும் வண்டியின் வேகம் இன்னமும் குறையவில்லை... விபரீதம் உறைக்க நான் கத்தினேன்.... "சசி... ஜாக்கிரதை... நீ வேகமாகத் திரும்பினபோது பொம்மை கீழே விழுந்திருக்கலாம்... ரோடைப் பாரு... அவள் இருட்டிலே அந்த பொம்மையைப் பீதியுடன் தேடிக் கொண்டிருந்ததால் நான் சொன்னதை அவள் காதில் வாங்கிக் கொண்டிருப்பாள் என்று தோன்றவில்லை... வெகு அருகில் அப்போது பக்கவாட்டு சந்தில் இருந்து வெளிப்பட்ட ஒரு செங்கல் லாரியை கவனித்தேன். "சசி... லாரி... சசி.... ஜாக்கிரதை..."

கடைசி நொடியில்தான் அவள் அந்த லாரியைக் கவனித்தாள். உடனே அவள் கால்கள் வெகு வேகமாக இறங்கின... சற்றும் வேகம் குறையாமல் சென்று கொண்டிருந்த கார், லாரியின் மீது மோதுவதற்குள் நிற்கும் என்று எதிர்பார்த்து.... ஏமாந்தேன்.

கார் வேகம் குறையாமல் லாரியை நோக்கிச் சென்றது...

நான் சசியைப் பார்த்தேன்... அவள் முழுமையாகக் கால்களை அழுத்திக் கொண்டிருந்தது தெரிந்தது.. அவள் கண்கள் விரிந்திருந்தன... வாய் திறந்திருந்தது... ஒரு அமைதியான ஓலம் அவள் அடித் தொண்டையில் இருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தது....

கார் லாரியின் பக்கவாட்டில் மோதியதைப் பார்க்கவில்லை... ஆனால் பயங்கரமான வேகத்துடன் நடந்த அந்த மோதலைப் பரிபூரணமாக உணர்ந்தேன்.

சசியின் உடலில் ஒரு புரியாத நகர்வு தெரிந்தது... சட்டென்று கார் இருக்கையிலிருந்து முன்னோக்கி படுவேகமாக அவள் மார்பு ஸ்டியரிங்கில் மோதுவதைக் கண்கூடாகக் கண்டேன்...

சில கணங்களுக்குள் நிகழ்ந்துவிட்ட இத்தனை நிகழ்ச்சிகளுக்கும் உச்ச கட்டமாக நடந்த அந்த நிகழ்ச்சியை என் வாழ்நாளில் மறக்க முடியாது என்பது அப்போதே எனக்குப் புரிந்தது...

ஸ்டியரிங்கில் படு பயங்கரமாக அவள் மார்பு மோதிய போது, அவள் கழுத்து, இயல்பே இல்லாத ஒரு கோரமான கோணத்தில் வேகமாக வளைந்தது... எலும்பு இணைப்புகள் முறியும் ஓசையை துல்லியமாகக் கேட்ட அதே நேரத்தில் என் தலை கார் கண்ணாடியில் மோதுவதை உணர்ந்தேன்...

வலியும் எரிச்சலும் பூரணமாக ஆக்கிரமிக்க, என் தலை மற்றும் முகத்தை சூடான இரத்தம் நனைப்பதை உணர்ந்தேன்...

உட்கார்ந்திருக்கிறேனா... தவழ்ந்திருக்கிறேனா என்று புரியாத கணத்தில் சசியைப் பார்த்தேன்... அவள் முகம் என்னைப் பார்த்தவாறு ஸ்டியரிங்கின் மேல் கவிழ்ந்திருந்தது... அவள் வாயின் ஓரத்தில் இரத்தக்கோடு பளீரென்று உறைத்தது.

அவள் திறந்திருந்த கண்களில் ஒரு வெறுமை... அவள் ஒட்டுமொத்த முகத்தில் இதை எல்லாம் எதிர்பார்த்து போல் ஒரு பாவனை...

என் பார்வையில் வெளிச்சப் பூக்கள் மின்ன, நான் மயங்க ஆரம்பித்தபோது,

## தபால் ஸ்டிரைக்

**கடிதங்கள் வராததால் வட்ட மேஜை இடம்பெறவில்லை.**

**– ஆர்.**

நான் அழுது கொண்டிருக்கிறேன் என்பது மட்டும் புரிந்தது.

**வ**லிதான் நான் மீண்டும் முதலில் உணர்ந்தது... பிறகு மருத்துவமனையின் அந்தப் பிரத்யேக வாசனையை உணர்ந்தேன்...

மெல்ல கண்களைத் திறந்தபோது ஒரு படுக்கையில் கிடப்பது தெரிந்தது... என் தலையும் நெற்றியும் பாண்டேஜ்களால் மூடப்பட்டிருப்பது புரிந்தது... கை கால்களை அசைக்க முயற்சித்துத் தோற்றேன்... இடப்புறமாக ஒரு ஸ்டேண்டில் இருந்து, தலைகீழாகத் தொங்க விடப்பட்ட பாட்டிலில் இருந்து, ட்ரிப் என் உடலுக்குள் இறங்கிக் கொண்டிருந்தது தெரிந்தது...

அந்த மஞ்சள் நிற திரவத்தின் ஊடே காற்று முட்டைகள் மேலெழுந்து கொண்டிருந்ததைச் சற்று நேரம் கிறுக்குத்தனமாகப் பார்த்துக் கொண்டிருந்தேன்... "மிஸ்டர் முரளி.." என் வலப் பக்கத்தில் இருந்து குரல் வர, சற்று கஷ்டப்பட்டுத் தலையைத் திருப்பினேன். காக்கிச் சட்டை தென்பட்டது...

"மிஸ்டர் முரளி, நான் இன்ஸ்பெக்டர் ஜெயராம்..."

சற்றுத் தெளிவில்லாமல் தெரிந்து, பிறகு சட்டென்று தெரிந்த அந்த முகத்தைப் பார்த்தேன்... சட்டத்தின் கீர்க்கம்...

"மிஸ்டர் முரளி... நான் பேசறது கேட்குதா..."

நான் தலையசைத்தேன்...

"உங்ககிட்ட சில கேள்விகள் கேக்கணும்..."

நான் தலையசைத்தேன்... அவர் தான் உட்கார்ந்திருந்த நாற்காலியை சற்று என் அருகாக இழுத்துக் கொண்டார்...

"மிஸ்டர் முரளி...."

"சொல்லுங்க...." என்றேன் தீனமாக.

"எப்படி இருக்கீங்க...?"

"பரவாயில்லை... சசி... சசி... எப்படி இருக்கா...?" பதிலைத் தெரிந்து கொண்டே ஏன் அந்தக் கேள்வியைக் கேட்டேன் என்று எனக்கும் புரியவில்லை.

அவர் உதட்டை பிதுக்கினார்...

"மல்டிபுள் ப்ராக்சர்... தூக்குத் தண்டனைக் கைதி மாதிரி... கழுத்து எலும்புங்க... நெஞ்சு எலும்புங்க... நிறைய உடைஞ்சிடிச்சி... உடனடி மரணம்..."

ஒரு பெருமூச்சு என்னை விட்டு ஓடியது....

"மிஸ்டர் முரளி... என்ன நடந்தது..."

"விபத்து... சசி ரொம்ப வேகமா ஓட்டினா..."

"ஆமா... லாரிக்காரன் சொன்னான்... பயங்கர வேகமாமே... ப்ரேக் போட்ட மாதிரியே தெரியலேன்னான்..."

"இல்ல... சசி ப்ரேக்கை அழுத்தினா... கிட்டத்தட்ட ப்ரேக் மேலேயே நின்னா... ஆனாலும் கார் நிக்கலை... ப்ரேக் ஃபெயிலாடிச்சோ என்னமோ..."

"இல்ல முரளி... ப்ரேக் நல்லாத்தான் இருந்தது... நாங்க செக் பண்ணிட்டோம்..."

"அப்புறம்... அப்புறம் எப்படி..."

அவர் சற்று நேரம் என்னைப் பார்த்தார்.



**"கன்னம் ஏன் வீங்கியிருக்கு?"**
**"புரோக்கர்கிட்டே வீட்டு மனைக்குக் 'குத்து' மதிப்பா ஒருவிலை சொல்லி பேரத்தை ஆரம்பிச்சேன்..."**

**– பாலுப்ரியன்**

பின்னர் குனிந்து அதை எடுத்தார்.

அந்தப் பொம்மை... அந்தக் குதிரை பொம்மை....

"இது என்னது தெரியுதா...?" என்றார்.

"பொம்மை... குதிரை பொம்மை... அவ கார்ல.... அவ கார்ல இருந்தது..." நான் திக்கினேன்...

"இது ப்ரேக் பெடலுக்கு அடில போய் மாட்டிக்கிட்டு இருந்தது... அதான் ப்ரேக் பிடிக்கல...."

நான் "மிஸ்டர் முரளி... மிஸ்டர் முரளி..." என்ற இன்ஸ்பெக்டரின் குரல்களுக்கு இடையே மயங்க ஆரம்பித்திருந்தேன்...

(முற்றும்)

# SUMMER ADVENTURE

Rs. 6/- only

# KUKU AND MIKU

# A LITTLE KINDNESS



## Midnight Monster

PLUS

## COMICS SPECIAL

August 1998

# GOKULAM

*The monthly magazine for children*

47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.

# தர்மா

"ஒரு மிருகத்தை அழிக்கணும்னா மிருகமா மாறித்தான் தீரணும்" என்று மகன் விஜய்காந்த் கூறுவதை முதலில் ஒப்புக் கொள்ளாத ஜெய்சங்கர், கடைசியில் அதை ஒப்புக் கொள்வதுதான் கதை!

விஜய்காந்துக்கு ஏற்ற கனம் என்று நினைத்து சண்டைக்கு ஸ்கோப் உள்ள ஒரு 'நாட்'டைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். இருக்கட்டும். ஆனால் எங்கேயாவது ஒரு புதுமை, எப்போதாவது ஒரு சுவாரஸ்யப் பின்னல் இதையெல்லாம் கூட எதிர்பார்ப்பது பஞ்சமா பாதகமா என்ன?

எத்தனை எத்தனை லாஜிக் ஓட்டைகள்! தங்கையின் திருமணத்துக்கு யாரும் அறியாமல் சென்று வாழ்த்த, ரிசப்ஷனின் போது மேடையில் நின்று ஒரு பாட்டுப் பாடுகிறார் ஹீரோ!

அவ்வளவு கலவரப் பகுதியில் க்ளைமாக்ஸில் திடீரென்று ஜெய்சங்கர் தோன்றுவது எப்படி? பல பேரைக் கொன்ற ஹீரோ ஒப்புக்குக் கூட சிறைக்குப் போகாமல் கடைசியில் பாடுவது எப்படி?

சண்டைக் காட்சிகள் என்ற பெயரில் இடம் பெறும் மிகக் கொடூர, நீளமான வன்முறைக் காட்சிகள், சென்சாரின் செயல்பாட்டை மிகவும் சந்தேகிக்க வைக்கின்றன.



நல்லோனிலிருந்து அல்லோனாக மாறும் ரஞ்சித், பாசமிகு அண்ணனாக தலைவாசல் விஜய், குடும்பத்தனமாகத் தோன்றும் தங்கை ஷில்பா, முஸ்லிம் மாதுவாக மனோரமா ஆகியோரின் சீரான நடிப்புதான் சின்ன ஆறுதல்.

எஸ்.எஸ்.ஆர்., தம் மெகா ஆசையை(?) இந்தப் படத்தின் மூலமாக நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார் - முதலமைச்சர் ரோல்!

இளையராஜாவின் இசை ஈர்த்ததுண்டு; கவராமல் போனதும் உண்டு. ஆனால் இதில் எரிச்சலே படவைத்திருக்கிறார் - பாடல்கள், பின்னணி இரண்டிலும்.

பல காட்சிகளில் நிறைய சுயபிரதாபம் அடித்துக் கொள்கிறார் விஜய்காந்த். அவருக்கு ஒரே ஒரு ஆறுதல் வரி : சந்தோஷப் படுங்கள். இதைவிட மோசமாக உங்களின் அடுத்த படம் கட்டாயம் இருக்க முடியாது!

— ஜி.

# தள்ளாடும் தஞ்சை ஓவியங்கள்!

பதினெட்டாம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்ட சரபோஜி மகாராஜாவுக்கு மகாராஷ்டிரத்தில் பெண் எடுத்தார்கள். அவருக்கு வந்த சீர்வரிசையில் பொன், பொருள், கலைப் பொருட்களுடன் ஓவியங்களும் இடம் பெற்றிருந்தன. தெய்வீகமான அந்த ஓவியங்களை ரசித்து மகிழ்ந்த மன்னர், அந்த ஓவியங்களை வரைந்த கலைஞர்களை அழைத்துத் தம் அரண்மனையிலுள்ள எல்லா பகுதிகளிலும் ஓவியங்களை வரையச் செய்தார். மேலும், அந்த ஓவியங்களில் வைரம், வைடூரியம், முத்து, பவளம் போன்ற விலையுயர்ந்த கற்களைத் தங்கத்துடன் இழைத்துப் பதித்தார். அக்காலத்தில் மிராசுதாரர்களும், பணம் படைத்தவர்களும் இந்த ஓவியர்களை அழைத்து, தங்கள் வீடுகளிலும் இத்தகைய ஓவியங்களைச் செய்து கொண்டார்கள். இந்த ஓவியங்களே பின்னாளில் 'தஞ்சை ஓவியம்' என்று புகழ்பெற்றது.

இன்றைக்கும் தஞ்சைப் பகுதியில் சில வீடுகளில் பெண்ணுக்குச் சீதனமாக ராமர் பட்டாபிஷேகம், வெண்ணெய் கிருஷ்ணன் படத்தைக் கொடுத்தனுப்புவது வழக்கம்.

தஞ்சை ஓவியங்களுக்காக இந்தியாவிலேயே முதன் முறையாக ஆர்ட்கேலரியைத் துவக்கியிருக்கிறார் ஓவியர் பி.டி. ராஜா. சென்னையிலுள்ள தேனாம்பேட்டையில் சமீபத்தில் ஓவியக் கண்காட்சியும் நடத்தினார். ஓவியக் கண்காட்சியைத் துவக்கி வைத்தவர் எழுத்தாளர் பாலகுமாரன். சிறப்பு விருந்தினராக லேனா தமிழ்வாணன்.

“இப்போ இது வியாபாரமாய்டுச்சுங்க. இந்தப் படம் தயாரிக்கறதுக்கு அதிக மூலதனமும் பொறுமையும் அவசியம். அப்படியே செஞ்சாலும் போட்ட முதல் தேறினாலே பெரிய விஷயம். என்கிட்ட படம் வாங்க வர்ற நிறையப் பேரு படத்துல தன்னோட பேரைப் போடச்



• கண்காட்சியில் ஓவியங்கள்

சொல்றாங்க. இல்லைன்னா பேர் எழுதாத படத்தை வாங்கிட்டுப் போயி அவங்க பேரை எழுதி அவங்க வரைஞ்சதா



சொல்லி வித்துடுறாங்க. இந்தப் படங்களை வாங்க வர்ற வேற மாநிலத்துக் காரங்க அடிமாட்டு வெலைக்கிக் கேக்க றாங்க" என்று நொந்து போய்ப் பேசுகிறார் பி.டி. ராஜா.

• பி.டி. ராஜா



பி.டி. ராஜா 1995ல் தஞ்சை ஓவியங்களுக்காக மாநிலத்திலேயே முதல் பரிசு பெற்றிருக்கிறார். மும்பை, டில்லி, பெங்களூர், மலேசியா போன்ற இடங்களில் ஓவியக் கண்காட்சி நடத்தியிருக்கிறார். பதினைந்து வருடமாக இக்கலையைச் செய்து வருகிறார்.

"வெளிநாட்டுக்காரங்க பழங்கலைகளை ஆதரிக்கிற அளவுக்கு நம்ம நாட்டுல ஆதரவு இல்லை. குறைந்தபட்சம் மாடர்ன் ஆர்ட்ஸுக்கு இருக்கற வரவேற்புக் கூட தஞ்சாவூர் ஓவியங்களுக்கு இல்லை. அதுனாலேயே இந்தக்கலை கொஞ்சம் கொஞ்சமா நசிஞ்சுக்கிட்டு வருது. நான் புதுமுயற்சியா 'நடனம்', 'புத்தர்', 'மகாவீரர்'னு படங்களை வரைஞ்சி வச்சிருக்கேன். அதை யாராவது போட்டோ எடுத்து ஸ்கெட்ச் பண்ணிட்டாக் கூட அது அவங்க வரைஞ்சதாயிடும்' என்கிறார் பி.டி. ராஜா.

கண்காட்சியில் உக்ரநரசிம்மர், மகாலட்சுமி, வெங்கடாசலபதி, வேளாங்கன்னி மாதா, ராதாகிருஷ்ணர், நடராஜர், முருகன், காயத்ரி, ஆண்டாள், வீணை வாசிக்கும் விநாயகர், நடனமாடும் விநாயகர் என்று விதவிதமாய்ப் படங்கள். ஐந்நூறு ரூபாயிலிருந்து ஒரு லட்ச ரூபாய் வரைக்கும் பெறுமானமுள்ள படங்கள்.

ஆத்யானந்தபிரபு, என்று ஆஞ்சநேயர் பாதியும், விநாயகர் பாதியுமாய் இவர் வரைந்திருக்கும் படம் ரொம்ப விசேஷமானது. கண்காட்சியில் சுவரில் தொங்கிக் கொண்டிருக்கும் 'ஆலிலைக் கண்ணனின்' சிரிப்புக்கு அர்த்தங்கள் ஆயிரம் சொல்லலாம்.

ஆனால் ஓவியக் கண்காட்சியில் எதிர் பார்த்த வருமானம் இல்லை என்றார் ராஜா.

**— கே. பாலசுப்ரமணியன்**

ஒரே வரியில் மறுத்து விட்டாள் அகல்யா.

"சாரி.. முடியாது! வேற ஆளை பாத்துக்குங்க..." - அவள் அப்படி மறுக்கக் காரணம் இருக்கிறது. மொத்தமாக அறுபது நாட்கள் கால்ஷீட் வேண்டுமாம். ஒரு நாள் கூட இடைவெளியின்றி ஷூட்டிங்காம். எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தரத் தயார் என்கிறார் புரொட்யூசர்.

அதற்காக தவழத் தொடங்கியிருக்கும் குழந்தையை விட்டு விட்டு எப்படி வெளியூர் போவதாம்...?

மனசுதான் கேட்குமா?

இல்லை குழந்தைதான் தாங்குவாளா?

நிர்தாட்சண்யமாக மறுத்துவிட்டு அகல்யா போய் விட்டாள். ஆனால் புரொட்யூசரைப் பிடித்து இழுத்து நிறுத்தி வைத்திருக்கிறான் ராமமூர்த்தி.

"நீங்க கவலப்படாதீங்க. நான் சம்மதிக்க வைக்கறேன். எனக்கு உங்க நிலை நல்லா தெரியுது. அகல்யாவுக்கும் இந்தப் படம் நல்ல பிரேக் தரும்..."

- அவரைச் சமாதானப்படுத்தி தினத்தந்தி பேப்பரை எடுத்துப் படித்துக் கொண்டிருங்கள் என்று கொடுத்துவிட்டு மாடிக்குத் தாவி ஏறுகிறான்.

தலைச் சிக்கை எடுத்துவிட்டுக் கொண்டிருக்கிறாள் அகல்யா.

"அகல்... என்ன நீ இப்படி மூஞ்சில அடிச்சி சொல்லிட்டு வந்துட்டே. எப்பேர்ப்பட்ட சான்ஸ் தெரியுமா இது?"

"நல்ல சான்ஸ் தான், இல்லேங்கலே. ஹரிணியை யார் பார்த்துப்பாங்க...?"

"இப்ப அதான் பெரிய சிக்கலாக்கும். அந்தக் கவலை உனக்கு எதுக்கு?"

"ஐய்யோ என்ன நீங்க.... குழந்தைக்கு குறைந்தபட்சம் ஆறுமாசமாவது நான் பால் தரணும்."

"போறும். நீ இவ்வளவு நாள் தந்ததே போதும். ஃபாரெக்ஸ் செரலாக்னு ஏகப்பட்ட ஐட்டம் மார்க்கெட்ல இருக்கு. நான் பாத்துக்கறேன். நீ போய் அக்ரிமெண்ட்ல கையெழுத்துப் போடு..."

- ராமமூர்த்தி அவளை வளைக்க ஆரம்பித்து விட்டான். இந்த விஷயத்தில் அவனொரு மலைப்பாம்பு. அவளுக்கும் தெரியும். அவனை கலக்கத்துடன் பார்க்கிறாள்.

"காத்துள்ள போதே தூத்திக்கணும்டா..." என்கிறான் மிருதுவாக.

"எனக்குக் கொஞ்சம் கூட நடிக்கவே பிடிக்கலைங்க... சம்பாதிச்சது போதாதா?" - அவள் ஈனசுரத்தில் கேட்கிறாள்.

"இப்ப இருக்கற விலைவாசிக்கு நீ சம்பாதிச்சது அஞ்சு வருஷம் தாங்கினா அதிகம். இதோ பார், முன்னையாவது நீயும் நானும் மட்டும்தான். இப்ப மகள் ஒருத்தி வந்துட்டா. அவளுக்கு, அவளோட எதிர்காலத்துக்குன்னு சேர்க்க வேண்டாமா?"

- அவன் கேள்வி அவளை மெல்ல அசைக்கிறது. பக்கத்தில் கட்டிலில் மல்லாக்கப் படுத்தபடி கை கால்களை உதைத்தபடி விளையாடிக் கொண்டிருக்கிறது மகள் என்னும் அந்த உயிர்ப்பதுமை!

-எப்பேர்ப்பட்ட மனசும் இப்படி ஒரு காட்சி பார்த்தால் சற்று ஈரப்பட்டுப் போகும்.

- அவளும் பார்க்கிறாள்.

- ஈரத்தோடு பாசமும் பீறிடுகிறது.

"சரி நான் ஒப்புக்கறேன். ஆனா ஒரு கண்டிஷன்!"

# கலைக்க முடியாத வேஷங்கள்

"என்ன... சீக்கிரம் சொல்லு."

"நீங்களும் குழந்தையோட அவுட்டோர் வரணும். நான் ஹரிணிக்குப் பால் தந்தே தீரணும்."

அவன் முகம் அடுத்த நொடி குத்துப்பட்ட மாதிரி கலங்கிப் போகிறது.

"முண்டம்... ஊரைப் பொறுத்து நீ கனவுக் கன்னி... ஒரு வருஷமா நீ நடிக்காம ஒதுங்கி அமெரிக்கா போய்ட்டவ. இருந்தும் உன் க்ரேஸ் ஜனங்க கிட்ட குறையலை. அதை எப்படிக் காப்பாத்திக்கறதுன்னு யோசி,

"குழந்தையை நான் பாத்துக்கறேன்."

அவன் அவளை அடக்குகிறான். அவளும் அடங்கிப் போகிறாள். அவளுக்குக் கல்யாணம் நடந்திருப்பதோ குழந்தை பிறந்திருப்பதோ இந்த நிமிஷம் பிரம்ம ரகசியம்.

அவன் கருவிலேயே கொல்ல கத்தியும் கபடாவுமாய் நிற்கத்தான் செய்தான். ஆனால் டாக்டர் கருவைக் கலைத்தால் உயிருக்கு ஆபத்து என்று கூறி விட்டதால் வேறு வழியின்றி பெற்றுக் கொள்ள வேண்டியதாய்ப் போய்விட்டது.

அதற்காக ஹாலிவுட்டில் நடிப்புப் பயிற்சி பெறப் போகிறேன் என்றெல்லாம் அளக்கும்படியும் ஆகிவிட்டது.

எப்படியோ இந்த நிமிஷம் ஒருவருக்கும் தெரியாது. சில நரித்தனமான நிருபர்கள் மோப்பம் பிடித்துவிட்ட போதும் அவர்களை கவனித்து விட்டதால் கப்சிப்!

புரொட்யூசர்களும் கனவுக் கன்னி, இந்திரலோக சுந்தரி என்கிற நினைப்போடும் நம்பிக்கையோடும் வரத் தொடங்கி விட்டனர்.

எவ்வளவு கேட்டாலும் அள்ளித்தரத் தயார்.

அப்புறமென்ன...?

அவுட்டோருக்கு கிளம்பி வந்து விட்டாள். தங்கி இருக்கும் லாட்ஜ் ஜன்னல் வழியாக வெளியே பார்க்கிறாள். அம்பா சமுத்திரம் தெரிகிறது. சரியான வயல் சார்ந்த வாழை தழைத்த ஊர். பசுமை பொழியக் கிடக்கிறது.

லாட்ஜுக்குப் பின்னாலேயே வாழைத் தோப்பு. வரப்பில் நீர் பாய்ந்து கொண்டிருக்கிறது. வாழையைத் தண்ணீர் ஏமாற்றவில்லை. ஆனால் நான் என் குழந்தையை ஏமாற்றிக் கொண்டிருக்கிறேனே...

இந்திரா சௌந்தர்ராஜன்





**"எனக்கு தூக்கத்துல நடக்கற வியாதின்னு நான் சொல்லாமலே எப்படி கண்டுபிடிச்சீங்க டாக்டர்?"**

**"நீங்க ஆபீஸ் நேரத்துல இங்கே வரும்போதே கண்டுபிடிச்சிட்டேன்...!"**

**— வலங்கைமான் நூர்தீன்.**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

பாவம் குழந்தை... என்ன பாடுபட்டுக் கொண்டிருக்கிறதோ?

மனதை எவ்வளவு கட்டுப்படுத்தினாலும் மீறிக் கொண்டு அது பாய்கிறது. ஒரு கணம் அதன் அழுகுரல் கேட்டால் கூடப் போதும். மனது கொஞ்சம் சமாதானமடைந்து விடும். இதனால் தானோ என்னவோ இன்று ஷூட்டிங்கிலும் டேக்குக்கு மேல் டேக் வாங்கிவிட்டாள்.

கூடவே இருக்கும் அசிஸ்டென்ட் புரிந்து கொண்டு கேட்கிறாள்.

"வீட்டுக்கு ஒரு எஸ்.டி.டி. கால் போடட்டுமாம்மா...?"

"முதல்ல போடு... ஹரிணி எப்படி இருக்கான்னு தெரியணும்." – அவள் அறையில் இருந்தபடியே முயற்சிக்க, மறு முனையில் சிக்குகிறான் ராமமூர்த்தி.

"என்னங்க நான்தான்..."

"நினைச்சேன். என்னடா இன்னும் போன் பண்ணலையேன்னு."

"பாப்பா எப்படி இருக்கா?"

"நல்லாருக்கா. உன் தங்கச்சி வித்யா உன் ஜாடையா? ஆகையால அழல்லாம் இல்ல. அவளையே நீன்னு நினைச்சுக்கறா நல்லா..."

"அவளை போய்க் கூட்டிகிட்டு வந்திங்களாக்கும்."

"என்ன பண்றது, சமாளிச்சாகணுமே?"

"நான் இங்க நடிக்கறேன். வித்யா அங்க நடிக்கறாளாக்கும்?"

"எங்க நடிச்சாலும் அதை நல்லா செய்துட்டா யாருக்கும் ஒரு பிரச்னையும் இல்ல..."

"எனக்கு இப்பவே ஹரிணியைப் பாக்கணும்போல இருக்குங்க..."

"கவலைப்படாதே... உன் தங்கச்சி கூட்டிக்கிட்டு வருவா. யாரும் கேட்டா அவ குழந்தைன்னு சொல்லிச் சமாளிச்சுக்கலாம்."

"முதல்ல அனுப்பி வைங்க..."

"நீ ஷூட்டிங்ல கான்சன்ட்ரேட் பண்ணு அகல்யா. நாங்க வர்றோம்."

– அவன் போனை முடக்கப் போகிறான். அகல்யா பெரிதாகக் கத்தி அவனைத் தடுக்கிறாள்.

"என்னங்க ஒரு நிமிஷம், ஒரு நிமிஷம்."

"என்ன?"

"குழந்தை குரலைக் கொஞ்சம் கேட்கணும்."

"ஊஹூம்! நீ இப்படி இருந்தா தேற முடியாது அகல்..... இதுதான் லாஸ்ட் டைம்..." சொல்லிவிட்டுச் செல்கிறான். சில வினாடிகளில் குழந்தை ஹரிணியின் அழுகை சப்தம் தொலைபேசி வயர் வழியாக, கிட்டதட்ட அறுநூற்று சொச்சம் கி.மீ. கடந்து வந்து காதில் பாய்கிறது.

"ஏன் குழந்தை அழறா... பசியா?"

'முண்டம். குரலை கேட்கணும்னியேன்னு கிள்ளினேன். அதான் அழுவறா."

அகல்யா அடுத்த நொடி போனை முடக்குகிறாள். கண்களில் நீர் சேர அப்படியே படுக்கையில் விழுகிறாள்.

அசிஸ்டென்ட்டுக்குப் புரிகிறது.

"குழந்தை அழுதிச்சாம்மா?"

"ஆமாம் லட்சுமி... நான் கேட்கணும்கறதுக்காக கிள்ளி விட்டுருக்காரு. இப்படின்னு தெரிஞ்சிருந்தா கேட்டிருக்கவே மாட்டேன்."

விசும்பி விசும்பி அழத் தொடங்குகிறாள் அகல்யா.

"அழாதிங்கம்மா... கொஞ்ச நாள். பிறகு தான் போய்டப்போறோம்ல..."

அவள் சமாதானப்படுத்திய முகூர்த்தமோ என்னவோ – நாட்கள் எப்படியோ நகர்ந்து முடிய, ஷூட்டிங் முடிய இரண்டு நாள் இருக்கும்போது ராமமூர்த்தி குழந்தையுடனும் தங்கையுடனும் வந்து சேருகிறான்.

செட்டில் மேக் அப்பில் இருக்கும்போது வித்யா அவள் குழந்தையுடனும் ராமமூர்த்தியுடனும் வந்து நிற்கிறாள். பார்த்த மறு நொடி பாய்ந்து போய் குழந்தையை வாங்கிக் கொள்ள, அது வீறிட்டு அலறுகிறது. செட்டே திரும்பிப் பார்க்கிறது. திரும்ப வித்யா வாங்கிக் கொள்ளவும்தான் அழுகை

நிற்கிறது. முன் போல் போஷாக்காய் இல்லை. என்ன இருந்தாலும் தாயின் அரவணைப்பு போல் வருமா?

கவலை தட்டிப் போய் பெற்றவளைப் பார்த்து ஏதோ புதியவளைப் பார்க்கிற மாதிரி வெறிக்கிறது.

"வாடா கண்ணு... வாடா ராஜா... என் செல்லம்... வா...வா..."– ஆனமட்டும் கூப்பிட்டு பார்க்கிறாள். அது வருவேனா என்கிறது.

"போடா தங்கம்... ஆன்ட்டி கூப்பிடறாங்க பார்... போ! போ..." – ராமமூர்த்தியும் கொம்பு சீவி விடுகிறான். அவளுக்கு நெஞ்சைக் கரிக்கிறது. அம்மா ஆன்ட்டியாகிவிட்ட கொடுமையை ஜீரணிக்க முடியாமல் மனதுக்குள்ளேயே உடைந்து அழ ஆரம்பிக்கிறாள்.

''மேடத்துக்குதான் குழந்தைங்கன்னா எவ்வளவு பிரியம் பார்த்திங்களா?" – செட்டில் வேடிக்கை பார்க்கும் ரசிகன் ஒருவன் முணுமுணுத்துக் கொள் கிறான்.

"பேக் அப்..."– டைரக்டர் குரல் கொடுத்துவிட்டு அகல்யாவை நெருங்கி "மேடம் நீங்க வேஷத்தை கலைக்கலாம். இனி நாளைக்குத் தான் ஷூட்டிங்..." என்கிறார்... எந்த அர்த் தத்தில் சொன்னாரோ?

அகல்யா நொறுங்கிப் போகிறாள்.

"இங்கபோட்ட வேஷத்தைக் கலைச்சுடலாம். வாழ்க்கைல போட்ட வேஷத்தை எப்படிக் கலைப்பேன்...?"

## சீரியஸான ஒரு 'சில்லறை' விஷயம்

இரயில் நிலையங்களில் இரண்டாவது வகுப்புப் பயணிகள் படும்பாடு பல வகையானது. அதுவும் மதுரை, இராமேஸ்வரம் போன்ற நிலையங்களாக இருந்து, மற்ற மாநிலங்களிலிருந்து வந்திருப்பவர்களாகவும் இருந்து விட்டால் போதும்! சுமை தூக்குவோர் மற்றும் ஆட்டோக்களுக்குக் கொண்டாட்டம்தான். ஆனால், பயணிகளின் தேவைகளை உணர்ந்து உருப்படியாக விவரங்களைச் சொல்லவோ குறைந்தது மனிதத் தன்மையுடன் பதில் சொல்வதற்காவது யாரேனும் இருக்கிறார்களா?

பயணச் சீட்டுக் கட்டணம் ரூ. ஆறு. பத்து ரூபா நோட்டைக் கொடுக்கிறோம். 'ஒரு ரூபா கொடுங்க. மீதி ஐந்து ரூபாயாகத் தருகிறேன். இல்லையென்றால், போய் மாற்றிக் கொண்டு வாருங்கள்' என்று ஒலிநாடாவில் பதிவுசெய்திருப்பது போல பதில் கிடைக்கும். எங்கும் சில்லறைக் காசுகளுக்குத் தட்டுப்பாடு. தொலை பேசிக் கட்டணம் மூன்று நிமிடத்திற்கு ரூபாய் ஒன்று என்று நிர்ணயிக்கப்பட்டு அறிவிக்கப்பட்டிருந்தாலும், ரூபா 1.50க்கு குறைந்து ஒரு இடத்திலும் ஏற்றுக் கொள்வதில்லை. இரயில் நிலையத்திற்கு வந்த பிறகு ஒன்றை மறந்து விட்டோம். அல்லது அவசரமாக ஒரு தகவல் தெரிவிக்க வேண்டும் என்றால் அந்த நிலையில் அஞ்சல் அட்டை அல்லது உறைகளுக்கு எங்கே போவது?

இந்தச் சின்னச் சின்ன இன்னல்களிலிருந்து பயணிகள் விடுபட வேண்டும். அவர்களுக்குத் தேவையான உதவிகளை செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் இரயில்வே பாதுகாப்புப் படையினர் பல முக்கிய நிலையங்களில் சேவை மையத்தை நிறுவி உள்ளனர். நாள் முழுவதும் இடைவெளி இல்லாமல் இயங்கும் இம் மையங்களில் பயணிகளுக்குத் தேவையான தகவல்களும் உதவியும் கிடைக்குமென்று அறிவித்துள்ளார்கள்.




பட்டியல் போட்டு 25 வகையான உதவிகளை, (சில்லறைக் காசுகள், அஞ்சல் அட்டை உட்பட.) செய்யக் காத்திருக்கிறார்கள். இந்த 'சேவை மையத்தில் எங்கே இரத்த வங்கி உள்ளது. ஈ.சி.ஜி. எடுக்குமிடம் உட்படப் பல தகவல்களும் கிடைக்குமாம்!

''பயணிகளின் உடனடித் தேவை குடிதண்ணீர், சாமான்கள் காப்பகம், உணவகம், மின் சாதன இணைப்புக்களின் குறைபாடு போன்றவைகள் குறித்து யாரிடம் கேட்பது என்று இனி தேடி அலைய வேண்டாம். சேவை மையத்தில் தெரிவித்து விட்டால் அந்தப் பிரிவு ஊழியர்களுடன் தொடர்பு கொண்டு ஆவன செய்யப்படும். குடிதண்ணீர் கிடைக்குமிடத்தை சொல்லுவார்களே தவிர குழாயில் தண்ணீர் வருகிறதா என்பது வேறு விஷயம்'' என்கிறார் தென்னக ரயில்வே பாதுகாப்புப் படை இணை ஆணையர் டாக்டர் சரு.

– சீனி. மகாலிங்கன்

# பொன்னியின் செல்வன்

இரண்டாம் அத்தியாயம்

## சேற்றுப் பள்ளம்

காட்டிலும் மேட்டிலும் கல்லிலும் முள்ளிலும் அந்தப் பெண்ணைத் தொடர்ந்து வந்தியத்தேவன் ஓடினான். ஒரு சமயம் அவள் கண்ணுக்குத் தெரிந்தாள். மறு கணத்தில் மறைந்தாள். இனி அவளைப் பிடிக்க முடியாது என்று தோன்றியபோது மறுபடியும் கண்ணுக்குப் புலப்பட்டாள். மாய மாரீசனைத் தொடர்ந்து இராமர் சென்ற கதை வந்தியத்தேவனுக்கு நினைவு வந்தது. ஆனால் இவள் மாயமும் அல்ல; மாரீசனும் அல்ல. இவளுடைய கால்களிலே மானின் வேகம் இருக்கிறது என்பது மட்டும் நிச்சயம். அம்மம்மா! என்ன விரைவாக ஓடுகிறாள்? 'எதற்காக இவளைத் தொடர்ந்து ஓடுகிறோம்? இது என்ன பைத்தியக்காரத்தனம்?' என்று எண்ணினான். உடனே அதற்கு ஒரு காரணமும் கற்பித்துக் கொண்டான். கோடிக்கரை நெருங்க நெருங்க, சேந்தன் அமுதன் வர்ணித்த மங்கையின் நினைவு அவனுக்கு அடிக்கடி வந்து கொண்டிருந்தது. இவள் அந்தப் பூங்குழலியாகத்தான் இருக்க வேண்டும். இவளுடன் சிநேகம் செய்து கொண்டால் வந்த காரியம் நிறைவேறுவதற்கு அனுகூலமாயிருக்கும்.




கல்கி கலெக்ஷன்

**அமரர் கல்கி**

அத்துடன், கலங்கரை விளக்கத்துக்குப் போக வழி கேட்டும் தெரிந்து கொள்ள லாம். தொலை தூரத்தில் வரும்போதே அவர்களுக்குக் கலங்கரை விளக்கின் உச்சி தெரிந்தது. ஆனால் அதை நெருங் குவது எளிதாகயில்லை. காட்டுக்குள் புகுந்ததும் கலங்கரை விளக்கு தெரிய வேயில்லை. காட்டுக்குள்ளே சுற்றிச் சுற்றி வருவதாக ஏற்பட்டதே தவிர, வழி அகப்படவில்லை. இந்தச் சமயத்திலே தான் குழகர் கோவிலின் மதில் சுவரின் மேல் பூங்குழலியை வந்தியத்தேவன் கண்டான். அவளைப் பிடித்து வழி கேட்கலாம்.. என்று பார்த்தால், அவள் இப்படி மாய மானைப் போல் பிடி படாமல் ஓடுகிறாளே? இவளை இப் படியே விட்டு விட்டுத் திரும்ப வேண் டியதுதான்! ஆனால் ஓட்டப் பந்த யத்திலேகூட ஒரு பெண்ணுக்குத் தோற் பது என்றால், அதுவும் மனத்துக்கு உகந்ததாயில்லை...

ஆ! அதோ திறந்தவெளி வந்து விட் டது. சற்றுத் தூரத்தில் நீலக் கடல் தெரிகிறது. விரிந்து பரந்து அமைதி குடி கொண்ட அந்தக் கடலின் தோற்றம் என்ன அழகாயிருக்கிறது! அதோ கலங் கரை விளக்கமும் தெரிகிறது. அதன் உச்சியில் இப்போது ஜோதி கொழுந்து விட்டு எரிகிறது. அதன் செந்நிறக் கதிர் கள் நாலா பக்கமும் பரவி விழுந்து விசித்திர ஜால வித்தைகள் புரிகின்றன.

இந்த இடத்தில் இந்தப் பெண்ணைப் பின் தொடர்வதைவிட்டுவிட்டு கலங் கரை விளக்கை நோக்கிப் போகலாமா? கூடாது! கூடாது! இந்தத் திறந்த வெளி யில் இவளை ஓடிப் பிடிப்பது சுலபம். இங்கே அவ்வளவு மணலாகக் கூட இல்லை. கால், மணலில் புதையவில்லை. பூமியில் புல் முளைத்துக் கெட்டிப் பட்டிருக்கிறது. சில இடங்களில் சேறு காய்ந்து பொறுக்குப் படர்ந்திருக்கிறது. இங்கேயெல்லாம் தடங்கலின்றி ஓட லாம். அந்தப் பெண்ணை இலகுவாய்ப் பிடித்துவிடலாம்! மேலும் அவள் கடலை நோக்கியல்லவா ஓடுகிறாள்? எவ்வளவு ஓடினாலும் முடிவில் கட லோரத்தில் சென்று அவள் நின்றுதானே ஆக வேண்டும்! ஒருவேளை இந்த விந் தையான பெண் கடலிலேயே முழுகி மறைந்து விடுவாளோ! அடடா! குதி ரையிலேயே ஏறி வராமற் போனோமே? அப்படி வந்திருந்தால் இந்தத் திறந்த வெளியில் ஒரு நொடியில் இவளைப் பிடித்து விடலாமே?

அதோ அவள் சற்றுத் தயங்கி நிற்கிறாள். நேரே கடலை நோக்கி ஓடாமல் வலது பக்க மாகத் திரும்பி ஓடுகிறாள்! தன்னிடம் பிடிபடாமல் இருப்பதற்காக வலது புறத்தில் சற்றுத் தூரத்தில் தென்பட்ட காட்டை நோக்கி ஓடுகிறாள். காட்டுக் குள் அவள் புகுந்து விட்டால் நிச்சய மாகப் பிடிக்க முடியாதுதான்! இத்தனை நேரம் ஓடியதும் வீண்! வந்தியத் தேவனு டைய கால்களும் அச்சமயம் கெஞ்ச ஆரம்பித்தன. அவனுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க ஆரம்பித்து விட்டது...

மீண்டும் அவளுடைய மனத்தை மாற்றிக் கொண்டு விட்டாள் போலும்! காட்டுக்குள் போகும் எண்ணத்தை விட்டுவிட்டாள் போலும்! பம்பரத்தைப் போல் ஒரு சுற்றுச் சுற்றித் திரும்பி ஓடி வருகிறாள். கலங்கரை விளக்கின் அடிக் குப் போக நினைத்தாள் போலும். ஒரு நாலு பாய்ச்சல் பாய்ந்தால் அவளைப் பிடித்துவிடலாம். கைப்பிடியாக அவ ளைப் பிடித்து, "பெண்ணே! ஏன் இப்படி என்னைக் கண்டு மிரண்டு ஓடுகிறாய்? உனக்கு உன் காதலனிட மிருந்து செய்தி கொண்டு வந்திருக் கிறேன்!" என்று சொன்னால், எத்தனை அதிசயம் அடைவாள்! சேந்தன் அமுதன் அவனிடம் ஒன்றும் சொல்லி அனுப்பவில்லை என்பது உண்மைதான்.

அதனால் என்ன? ஏதாவது சொந்தமாகக் கற்பனை செய்து சொன்னால் போகிறது...!

வந்தியத் தேவன் மனத்திற்குள் தீர்மானித்தபடி தன் வேகத்தில் மிச்சமிருந்த வலிமையையெல்லாம் உபயோகித்துப் பாய்ந்து ஓடினான். திரும்பி ஓடி வந்து கொண்டிருந்த அவளை நாலே பாய்ச்சலில் பிடித்துவிடலாம் என்பதுதான் அவனுடைய உத்தேசம். திடீரென்று, "ஐயோ!" என்றான். தனக்கு என்ன நேர்ந்துவிட்டது என்பது முதலில் அவனுக்கே தெரியவில்லை. பிறகு புலப்படத் தொடங்கியது. அவனுடைய கால்கள் இரண்டும் சேற்றில் புதைந்து கொண்டிருந்தன. முதலில் பாதங்கள் மட்டும் புதைந்தன. பிறகு கணுக்கால் புதைந்தது. முழங்கால் வரையில் சேறு மேலேறிவிட்டது!

அடாடா! இந்த இடம் நம்மை எப்படி ஏமாற்றிவிட்டது? மேலே பார்த்தால் நன்றாய்க் காய்ந்து பொறுக்குத் தட்டியிருக்கிறது. உள்ளே சேறு இன்னும் காயவில்லை. என்றுமே முழுமையும் காய முடியாத புதை சேற்றுக் குழிகளைப் பற்றி வந்தியத்தேவன் கேள்விப்பட்டதுண்டு. ஆடு மாடுகள், குதிரைகள், யானைகள் கூட அப் பள்ளங்களில் அகப்பட்டுக் கொண்டால் சிறிது சிறிதாக உள்ளே அமுங்கிக் கொண்டே போய்க் கடைசியில் முழுதுமே முழுகி மறைந்துவிடுமாம்!

அத்தகைய புதை குழிதானே இது! அப்படித்தான் தோன்றுகிறது. முழுக்காலும் மறைந்துவிட்டதே! மேலும் உள்ளே இறங்கிக் கொண்டேயிருப்போமா? விரைவில் தொடை வரைக்கும் புதைந்துவிடும் போலிருக்கிறதே! யானைகளையும் குதிரைகளையும் விழுங்கி ஏப்பம் விடும் புதை சேறு நம்மைச் சும்மா விட்டுவிடுமா! ஐயோ! இதுவா நமது முடிவு? நாம் கண்ட எத்தனை எத்தனையோ பகற் கனவுகள் எல்லாம் இதிலேயே புதைந்துவிட வேண்டியதுதானா? இந்த அபாய வேளையில் அந்த விசித்திரமான பெண் வந்து கைகொடுத்துக் காப்பாற்றினால்தான் உண்டு. தப்புவதற்கு வேறு வழியில்லை. ஒரு பெருங் கூச்சல் போட்டுப் பார்க்கலாம்- இவ்விதம் எண்ணிய வந்தியத்தேவன், "ஐயோ! நான் செத்தேன்! சேற்றில்





கரையில் கால்களை நன்றாய் ஊன்றிக் கொண்டு வந்தியத்தேவனுடைய கைகளைப் பற்றிக் கரையில் இழுத்து விட்டாள். அம்மம்மா! அந்த மெல்லியலாளின் கைகளிலேதான் எவ்வளவு வலிமை! தஞ்சைபுரி கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையருடைய இரும்புக் கைகளைவிட இவளுடைய கரங்கள் அதிக உறுதியாயிருக்கின்றனவே!

கரை ஏறியதும் வந்தியத்தேவன் கல கலவென்று சிரித்தான். அவனுடைய கால்கள் மட்டும் கொஞ்சம் நடுங்கிக் கொண்டிருந்தன.

"என்னைக் காப்பாற்றிக் கரை சேர்த்துவிட்டதாக உனக்கு எண்ணம் போலிருக்கிறது! நீ வந்திராவிட்டால் நான் கரையேறியிருக்கமாட்டேன் என்று நினைத்தாயோ?" என்றான்.

"பின் எதற்காக அப்படி, 'ஐயோ! ஐயோ!' என்று கத்தினாய்?" என்று பூங்குழலி கேட்டாள்.

"உன்னை ஓட விடாமல் தடுத்து நிறுத்துவதற்காகத்தான்!"

"அப்படியானால் மறுபடியும் உன்னைக் குழியிலேயே தள்ளிவிடுகிறேன். உன் சாமர்த்தியத்தினால் நீயே கரை ஏறிக் கொள்!" என்று பூங்குழலி சொல்லித் தள்ள யத்தனித்தாள்.

"ஐயையோ!" என்று வந்தியத்தேவன் விலகி நின்று கொண்டான்.

"எதற்காக அலறுகிறாய்?"

"உயிருக்காகப் பயப்படவில்லை: சேற்றுக்குத்தான் பயப்படுகிறேன்! ஏற்கெனவே தொடை வரைக்கும் சேறாகி விட்டது!"

பூங்குழலியின் முகத்தில் புன்னகை மலர்ந்தது. வந்தியத்தேவனை ஏற இறங்கப் பார்த்தாள்.

"அதோ கடல் இருக்கிறது! போய்ச்

முழுகிச் சாகிறேன். எனக்குக் கை கொடுத்து உதவி செய்து காப்பாற்றுவார் யாரும் இல்லையா!" என்று கத்தினான்.

அந்தக் கூக்குரல் பூங்குழலியின் காதில் விழுந்தது. அவனுக்கு நேர் எதிரே சற்றுத் தூரத்தில் ஓடிக் கொண்டிருந்த பூங்குழலி நின்றாள். ஒரு கணம் தயங்கினாள். வந்தியத்தேவனுடைய அபாயமான நிலையைப் பார்த்துத் தெரிந்து கொண்டாள்.

மறுகணம் அங்கே பாதி மணலிலும் பாதி சேற்றுக் குழியிலும் கிடந்த படகு ஒன்று அவள் கவனத்தைக் கவர்ந்தது. அக்குழியில் தண்ணீர் நிறைந்து ஆழமான, நீரோடையாக இருந்த காலத்தில் அப் படகு உபயோகப்பட்டிருக்க வேண்டும். அதில் இப்போது லாகவமாகக் குதித்து ஏறினாள். துடுப்பை எடுத்து இரண்டு தடவை வலித்தாள். அடாடா! இது என்ன அதிசயம்? அந்தப் படகு நீரில் அன்னப் பறவை செல்வதுபோல் அல்லவா சேற்றின் மேலே விரைவாக மிதந்து செல்கிறது? மிதந்து சென்று புதை சேற்றுக் குழியின் அக்கரையையும் அடைந்து விட்டது. பூங்குழலி கெட்டித் தரையில் குதித்தாள்.

சேற்றை அலம்பிச் சுத்தம் செய்து கொள்!'' என்றான்.

''நீ கொஞ்சம் முன்னால் சென்று வழி காட்ட வேண்டும்!'' என்றான் வந்தியத்தேவன்.

இருவரும் கடற்கரையை நோக்கி நடந்தார்கள். சேற்றுப் பள்ளத்தைச் சுற்றிக் கொண்டு சென்றார்கள்.

''என்னைக் கண்டதும் எதற்காக அப்படி விழுந்தடித்து ஓடினாய்? என்னைப் பயங்கரப் பேய் பிசாசு என்று எண்ணி விட்டாயா?'' என்று வல்லவரையன் கேட்டான்.

''இல்லை; பேய் பிசாசு என்று எண்ணவில்லை. ஆந்தை என்று எண்ணினேன். உன் மூஞ்சி ஆந்தை மூஞ்சி மாதிரியேயிருக்கிறது!'' என்று கூறிவிட்டுச் சிரித்தான்.

வந்தியத்தேவனுக்குத் தன் தோற்றத்தைக் குறித்துக் கர்வம் அதிகம். ஆகையால் அவனை ஆந்தை மூஞ்சி என்று சொன்னது அவனுக்கு மிக்க கோபத்தை உண்டாக்கிற்று.

''உன்னுடைய குரங்கு முகத்துக்கு என்னுடைய ஆந்தை முகம் குறைந்து போய்விட்டதாக்கும்!'' என்று முணுமுணுத்தான்.

''என்ன சொன்னாய்?''

''ஒன்றுமில்லை. என்னைக் கண்டு எதற்காக அப்படி ஓடினாய் என்று கேட்டேன்.''

''நீ எதற்காக அப்படி என்னைத் துரத்திக் கொண்டு வந்தாய்?''

''கலங்கரை விளக்கத்துக்கு வழி கேட்பதற்காக உன்னைத் துரத்திக் கொண்டு வந்தேன்...''

''அதோ தெரிகிறதே விளக்கு! என்னை வழி கேட்பானேன்?''

''காட்டுக்குள் புகுந்த பிறகு தெரியவில்லை. அதனாலேதான்! நீ எதற்காக என்னைக் கண்டதும் அப்படி ஓட்டம் எடுத்தாய்?''

''ஆண் பிள்ளைகள் மிகப் பொல்லாதவர்கள். ஆண் பிள்ளைகளைக் கண்டாலே எனக்குப் பிடிப்பதில்லை!''

''சேந்தன் அமுதனைக் கூடவா?'' என்றான் வல்லவரையன் கொஞ்சம் மெல்லிய குரலில்.

''யாரைச் சொன்னாய்?''

''தஞ்சாவூர் சேந்தன் அமுதனைச் சொன்னேன்.''

''அவனைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?''

''அவன் உன் அருமைக் காதலன் என்று தெரியும்.''

''என்ன? என்ன?''

''உன் பெயர்



பூங்குழலிதானே?"

"என் பெயர் பூங்குழலிதான். சேந்தன் அமுதனைப் பற்றி என்ன சொன்னாய்? அவன் என்...?"

"அவன் உன் காதலன் என்றேன்."

பூங்குழலி கலீர் என்று நகைத்தாள். "அப்படிய யார் உனக்குச் சொன்னது?" என்றாள்.

"வேறு யார் சொல்வார்கள்? சேந்தன் அமுதன்தான் சொன்னான்."

"தஞ்சாவூர் வெகு தூரத்தில் இருக்கிறது. அதனாலேதான் அப்படிச் சொல்லித் தப்பித்துக் கொண்டான்!"

"இல்லாவிட்டால்...?"

"இங்கே என் முன்னால் சொல்லியிருந்தால் அந்தச் சேற்றுக் குழியில் தூக்கிப் போட்டிருப்பேன்."

"அதனால் என்ன? சேற்றை அலம்பிக் கொள்ளக் கடலில் ஏராளமாய்த் தண்ணீர் இருக்கிறதே?"

"நீ விழுந்த புதை சேற்றுக் குழியில் மாடு, குதிரை எல்லாம் முழுகிச் செத்திருக்கின்றன. யானையைக் கூட அது விழுங்கிவிடும்!"

வந்தியத்தேவனுடைய உடம்பு சிலிர்த்தது. அவனை அந்தப் படுகுழி கொஞ்சம் கொஞ்சமாகக் கீழே இழுத்துக் கொண்டிருந்தபோது ஏற்பட்ட உணர்ச்சியை நினைத்துக் கொண்டான். இவள் மட்டும் வந்து கரையேற்றியிரா விட்டால், இத்தனை நேரம்... அதை நினைத்த போது அவன் உடம்பெல்லாம் நடுங்கிற்று.

"சேந்தன் அமுதன் என்னைப் பற்றி இன்னும் என்ன சொன்னான்?" என்று பூங்குழலி கேட்டாள்.

"நீ அவனுடைய மாமன் மகள் என்று சொன்னான். உன்னைப் போன்ற அழகி தேவ லோகத்திலேகூடக் கிடையாது என்று சொன்னான்..."

"தேவலோகத்துக்கு அவன் நேரில் போய்ப் பார்த்திருப்பான் போலிருக்கிறது. இன்னும்...?"

"நீ நன்றாகப் பாடுவாய் என்று சொன்னான். நீ பாடினால் கடலுங்கூட இரைச்சல் போடுவதை நிறுத்திவிட்டுப் பாட்டைக் கேட்குமாம்! அது உண்மை தானா?"

"நீயே அதைத் தெரிந்து கொள்! இதோ கடலும் வந்து விட்டது!..."

இருவரும் கடற்கரையோரமாக வந்து நின்றார்கள்.

## மூன்றாம் அத்தியாயம்

# சித்தப் பிரமை

வானத்தில் விண்மீன்கள் கண்ணைச் சிமிட்டிக் கொண்டிருந்தன. பிறைச் சந்திரன் நீலக் கடலில் மிதக்கும் வெள்ளி ஓடத்தைப் போல பவனி வந்து கொண்டிருந்தான்.

காற்றின் வேகம் அதிகமாகியிருந்தது. கடல் குமுறியது. வெள்ளலைக் கைகளை நீட்டிக் கரையில் நின்றவர்களைத் தன்பால் இழுக்க முயன்றது.

"ஏன் நிற்கிறாய்? சீக்கிரம் சேற்றைக் கழுவிக் கொள்! வீட்டுக்கு உடனே போக வேண்டும். இல்லாவிட்டால் இன்று எனக்குச் சோறு கிடைக்காது. அண்ணி சோற்றுப் பானையைக் கவிழ்த்து விடுவாள்!" என்றாள் பூங்குழலி.

"இங்கே கடலின் ஆழம் அதிகமா?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"உன்னைப் போல் பயங்கொள்



மனிதன் இருக்கிறானே? அவன் என் குதிரையையும் பிடித்து இழுத்துக் கொண்டு வருகிறானே?"

"அது கொஞ்சம் அபாயந்தான்! ஓடிப் போய் எச்சரிக்கை செய்!"

"நில்லு! நில்லு!" என்று கூச்சவிட்டுக் கொண்டே வந்தியத்தேவன் ஓடிப் போய்த் தடுத்து நிறுத்தினான்.

பூங்குழலியும் சற்று நேரததுக்கெல்லாம் அவர்களுடன் வந்து சேர்ந்து கொண்டாள்.

மூவரும் கலங்கரை விளக்கத்தை நோக்கி நடந்தார்கள்.

"நீ குதிரையில் ஏறிக் கொள்ளலாமே?" என்றாள் பூங்குழலி.

"இல்லை; உன்னுடன் நடந்தே வருகிறேன்."

பூங்குழலி குதிரையின் அருகில் சென்று அதன் முகத்தைத் தடவிக் கொடுத்தாள். அதனால் மகிழ்ச்சி அடைந்ததைப் போல் குதிரை உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு சற்று இலேசாகக் கனைத்தது.

"உன்னை என் குதிரைக்குப் பிடித்து விட்டது! இது மிக்க நல்லது."

"என்ன விதத்தில் நல்லது?"

"நான் இலங்கைக்குப் போக வேண்டும். இந்தக் குதிரையை உன்னிடம் ஒப்புவித்து விட்டுப் போகலாம் என்று எண்ணுகிறேன். பார்த்துக் கொள்கிறாயா?"

"ஓ! பார்த்துக் கொள்கிறேன். எல்லா மிருகங்களும் என்னிடம் சீக்கிரம் சிநேகமாகிவிடும். மனிதர்களுக்கு மட்டுந்தான் என்னைக் கண்டால் பிடிக்காது..."

"ஏன் அப்படிச் சொல்கிறாய்? சேந்தன் அமுதன் உன் பேரில்..."

"எனக்கும் மிருகங்களின் பேரில்தான் பிரியம்; மனிதர்களைக் கண்டால் எனக்குப் பிடிக்காது!"

ளியை நான் பார்த்ததேயில்லை. இங்கே வெகு தூரத்துக்கு ஆழமே கிடையாது. அரைக்காத தூரம் கடலில் போனாலும் இடுப்பளவு தண்ணீர்தான் இருக்கும். ஆகையினாலேதான் ஒவ்வொரு நாள் இரவும் கலங்கரை விளக்கு எரிய வேண்டியிருக்கிறது!"

வந்தியத்தேவன் தயங்கித் தயங்கித் தண்ணீரில் இறங்கினான். சேற்றைக் கழுவிக் கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டு கரை ஏறினான்.

சற்றுத் தூரத்தில் வைத்தியருடைய மகன் குதிரை மேலேறி வருவதைக் கண்டான். வந்தியத்தேவனுடைய குதிரையும் பக்கத்தில் வந்தது.

"ஐயையோ! குதிரை சேற்றில் இறங்கி விடப் போகிறதே!" என்றான் வந்தியத்தேவன்.

"இறங்காது; மனிதர்களை விடக் குதிரைகளுக்கு விவேகம் அதிகம்!" என்றாள் பூங்குழலி.

"ஆனால் ஒரு குதிரையின் பேரில்



''மனிதர்கள் அப்படி என்ன உனக்குச் செய்து விட்டார்கள்?''

"மனிதர்கள் பொல்லாதவர்கள். பொய்யும் புனைசுருட்டுமே அவர்களுக்கு வேலை!...."

''எல்லாரையும் சேர்த்து அப்படிச் சொல்லிவிடக் கூடாது. சேந்தன் அமுதன் நல்லவன். இதோ வருகிறானே, வைத்தியர் மகன், - இவன் ரொம்ப நல்லவன்..''

"நீ எப்படி?"

"நானும் நல்லவன்

தான். என் பெருமையை நானே சொல்லிக் கொள்ளக் கூடாது அல்லவா?"

"நீங்கள் இருவரும் எதற்காக இங்கே வந்திருக்கிறீர்கள்?"

"சக்கரவர்த்திக்கு உடம்பு குணம் இல்லை அல்லவா? அவருடைய நோயைக் குணப்படுத்தச் சில மூலிகைகள் வேண்டியிருக்கின்றன. இந்தக் காட்டில் அபூர்வ மூலிகைகள் இருக்கின்றனவாமே? அதற்காகத்தான் வைத்தியர் மகனும் நானும் வந்திருக்கிறோம்..."

"சற்றுமுன் இலங்கைக்குப் போக வேண்டும் என்று சொன்னாயே?"

"இங்கே கிடைக்காத மூலிகைகளை இலங்கையிலிருந்து கொண்டு வர வேண்டும். இலங்கையில் அனுமார் கொண்டு வந்த சஞ்சீவி பர்வதம் இன்னமும் இருக்கிறதாமே?"

"ஆமாம்; இருக்கிறது. அதனாலேதான் அங்கே ஆயிரக்கணக்கான ஜனங்கள் விஷக் காய்ச்சலில் இப்போது செத்துப் போய்க் கொண்டிருக்கிறார்கள்..."

"அதுவும் அப்படியா? எனக்குத் தெரி



யாதே? எங்களை அனுப்பிய அரண் மனை வைத்தியருக்கும் அது தெரி யாது..."

"ஆண்பிள்ளைகளைப் போல் பொய் சொல்லுகிறவர்களை நான் கண்டதே யில்லை. இரண்டு நாளைக்கு முன் இரண்டு பேர் இங்கே வந்தார்கள். அவர்களும் இப்படித்தான் ஏதோ பொய் சொன்னார்கள். ஆனால் அவர் கள் சொன்னது கொஞ்சம் நம்பக் கூடிய பொய்யாக இருந்தது...."

"அவர்கள் யார்? என்ன பொய் சொன்னார்கள்?"

"அவர்கள் தங்களை யாரோ மந்திரவாதி அனுப்பியதாகச் சொல்லிக் கொண்டார்கள். சக்கரவர்த்திக்கு ரட்சை கட்டுவதற்காகப் புலி நகமும் யானை வால் ரோமமும் வேண்டும் என்றும் அதற்காக இலங்கை போவ தாகவும் சொன்னார்கள். அவர்களை அழைத்துக் கொண்டு என் அண்ணன் படகோட்டிக் கொண்டு இலங்கைக்குப் போயிருக்கிறான்..."

"ஓ! ஓ! அதுவும் அப்படியா?" என் றான் வந்தியத்தேவன். அவனுக்கு ரவிதாஸன் என்னும் பயங்கர மந்திர வாதியின் நினைவு வந்தது. இரவில் படுத்திருந்த பாழும் மண்டபத்தில் அடைந்த பயங்கர அனுபவமும் நினைவுக்கு வந்தது. கடவுளே! இந்த மாதிரி காரியங்களிலெல்லாம் ஏன் சிக்கிக் கொண்டோம்? போர்க்களத்தில் நேருக்கு நேர் பகைவனுடன் நின்று போர் புரிய வேண்டும்! அப்போது நம் வீரத்தையும் தீரத்தையும் காட்ட வேண்டும். இந்த மாதிரி தந்திர மந்திர சூழ்ச்சிகளில் எதற்காக அகப்பட்டுக் கொண்டோம்?

நமக்கு முன்னாலேயே இலங்கைக் குப் படகில் சென்றிருப்பவர்கள் யாரா யிருக்கக் கூடும்! இந்தப் பெண்ணை எவ்வளவு தூரம் நம்பலாம்? இவளும்





ஒருவேளை அந்தச் சதிகாரக் கூட்டத்தில் சேர்ந்தவளாயிருக்கக் கூடுமோ?... இராது, இராது! இவள் கள்ளங்கபடம் அற்ற பெண். இவளை எப்படியாவது சிநேகம் செய்து வைத்துக் கொள்வது நல்லது.

"பூங்குழலி! உன்னிடம் உண்மையைச் சொல்லி விடுகிறேன். சற்று முன், மூலிகை கொண்டு போக நான் வந்திருப்பதாகச் சொன்னேனே, அது பொய்தான்! மிக முக்கியமான இரகசியமான காரியத்துக்காக நான் இலங்கைக்குப் போகிறேன், அதை உன்னிடம் சொல்ல விரும்புகிறேன்..."

"வேண்டாம்! முக்கியமான இரகசியமான காரியங்களைப் பெண்களிடம் சொல்லக் கூடாது என்று உனக்குத் தெரியாதா? என்னிடம் ஒன்றும் சொல்ல வேண்டாம்..."

"சாதாரணப் பெண்களைப் பற்றித்தான் அப்படிச் சொல்லுவார்கள். உன்னிடம் இரகசியத்தைக் கூறினால் அப்படி ஒன்றும் நேர்ந்து விடாது."

"நான் சாதாரணப் பெண் இல்லையென்று உனக்கு எப்படித் தெரிந்தது? என்னை நீ பார்த்து ஒரு நாழிகை கூட ஆகவில்லையே?"

"பூங்குழலி! உன்னை அந்தக் கோவில் மதிலின் மீது முதன் முதலில் பார்த்த உடனேயே எனக்குப் பிடித்துப் போய் விட்டது. உன்னை ஒன்று கேட்கிறேன். அதற்கு உண்மையாக மறுமொழி சொல்கிறாயா?"

"கேட்டுப் பார்!"

"சேந்தன் அமுதன் உன்னுடைய காதலன் அல்ல என்பது நிஜமா? அவனை நீ மணந்து கொள்ளப் போவதில்லையா?"

"எதற்காகக் கேட்கிறாய்?"

"சேந்தன் அமுதன் என் சிநேகிதன். அவனுக்கு எதிராக ஒன்றும் நான் செய்யக் கூடாது. ஆனால் அவன் உன் காதலன் இல்லையென்றால்..."

"சொல்லு! ஏன் தயங்குகிறாய்!"

"அந்த ஸ்தானத்துக்கு நான் விண்ணப்பம் போடலாம் என்று பார்க்கிறேன். பூங்குழலி! காதலைப் பற்றி நீ குறைவாகப் பேசுவது எனக்குப் பிடிக்கவில்லை. உலகத்தில் காதலைக் காட்டிலும் தெய்வீகமான சக்தி வேறு ஒன்றும் கிடையாது. அப்பர், சுந்தரர், சம்பந்தர் எல்லாரும் கடவுளைக் காதலனாகக் கொண்டு பாடியிருக்கிறார்கள். தொல்காப்பியரும், வள்ளுவரும், மற்றும் தமிழ்ப் பெரும் புலவர்களும் காதலைப் பற்றிப் பாடியிருக்கிறார்கள். காளிதாஸன் காதலைப் பற்றிப் பாடியிருக்கிறான். பிருந்தாவனத்தில் கண்ணன் கோபியரின் காதலுக்கு வசப்பட்டான்..."

"ஐயா! நான் ஒன்று சொல்கிறேன். அதை நன்றாய்க் கேட்டு மனத்தில் வாங்கிக் கொள்ளும்!"

"அது என்ன?"

"எனக்கும் உம்மைக் கண்டால் பிடித்துத்தான் இருக்கிறது. இரண்டு நாளைக்கு முன் வந்தவர்களைப் பார்த்ததும் உண்டான வெறுப்பு உம்மிடம் உண்டாகவில்லை..."

"ஓ! ஓ! நான் யோகசாலிதான்!"

"ஆனால் காதல், கீதல் என்ற பேச்சை மட்டும் எடுக்க வேண்டாம்!"

"ஏன்? ஏன்?"

"சேந்தன் அமுதன் என் காதலன் இல்லை. ஆனால் எனக்கு வேறு காதலர்கள் இருக்கிறார்கள்!..."

"அடடா! அடடா! வேறு காதலர்களா? யார்? எத்தனை பேர்?"

"இரவு நடுநிசியில் நான் வீட்டிலிருந்து எழுந்து செல்வேன். என்னைப் பின் தொடர்ந்து வந்தால் அவர்களை உமக்குக் காட்டுவேன். நீரே பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்!"

இப்படிச் சொல்லிவிட்டுப் பூங்குழலி 'ஹா ஹா ஹா' என்று சிரித்தாள்.

அந்தச் சிரிப்பு வந்தியத்தேவனுடைய நெஞ்சை என்னமோ செய்தது. பாவம்! இந்தப் பெண்ணுக்குச் சித்தப்பிரமை போலும்! நம்முடைய காரியத்துக்கு இவள் மூலமாக எந்த வித உதவியையும் எதிர்பார்ப்பது வீண்! இவளிடம் ஒன்றும் சொல்லாமலிருப்பதே நலம்.

கலங்கரை விளக்கின் அருகிலிருந்த வீட்டை அவர்கள் நெருங்கினார்கள். வீட்டுக்குள்ளிலிருந்து ஒரு பெரியவரும் வயது முதிர்ந்த ஸ்திரீயும் வெளியே வந்தனர். பூங்குழலியையும் மற்ற இருவரையும் குதிரைகளையும் பார்த்துவிட்டுப் பெரியவர் திகைத்து நின்றார்.

"பூங்குழலி! இவர்கள் யார்? எங்கே இவர்களைப் பிடித்தாய்?" என்று கேட்டார்.

"நான் இவர்களைப் பிடிக்கவில்லை. அப்பா! இவர்கள்தான் என்னைப் பிடித்தார்கள்!" என்றாள் பூங்குழலி.

"எல்லாம் ஒன்றுதான். பொழுது போவதற்கு முன்னால் வீட்டுக்கு வந்துவிடு என்று சொன்னால் நீ கேட்பதில்லை. முந்தாநாள் இரண்டு பேரை அழைத்துக் கொண்டு வந்தாய். இன்றைக்கு இரண்டு பேரை அழைத்து வந்திருக்கிறாய்! இவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள்?"

"சக்கரவர்த்தியின் வைத்தியத்துக்காக மூலிகை கொண்டு போவதற்கு இவர்கள் வந்திருக்கிறார்கள், அப்பா!"

"ஏன் ஐயா! இந்தப் பெண் சொல்வது உண்மைதானா?" என்று அந்தப் பெரியவர் வந்தியத்தேவனைப் பார்த்துக் கேட்டார்.

"ஆம், பெரியவரே! இதோ சீட்டு!" என்று சொல்லி வந்தியத்தேவன் இடையில் கட்டியிருந்த துணிச் சுருளிலிருந்து ஓலை ஒன்றை எடுத்துப் பெரியவரிடம் கொடுத்தான்.

அதே சமயத்தில் இன்னொரு ஓலை தரையில் விழுந்தது. அதை அவசரமாகக் குனிந்து எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டான்.

"பெரிய மூடன் நான்! ஒரு தடவை காரியம் கெட்டும் புத்தி வரவில்லை!" என்று வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டான்.

பெரியவர் அந்த ஓலையை வாங்கிக் கொண்டார். கலங்கரை விளக்கின் வெளிச்சத்தில் அதைக் கவனமாகப் பார்த்தார். அவர் முகம் மலர்ந்தது. தமது மனையாளை நோக்கி, "இளையபிராட்டி ஓலை கொடுத்து அனுப்பியிருக்கிறாள்.. இவர்களுக்கு உணவு அளிக்க வேண்டும். உள்ளே சென்று உன் மருமகளிடம் சொல்லு! சோற்றுப் பானையைக் கவிழ்த்து உருட்டி விடப் போகிறாள்!" என்றார்.

(தொடரும்)

# கடவுள்

"மூன்றே மூன்று பக்கந்தான் பாக்கியிருக்கிறது. அதற்குள் உமது அதிகப் பிரசங்கத்தை முடித்தாக வேண்டும்" என்று விகடன் சொன்னபோது, எனக்குண்டான திகைப்பைச் சொல்ல முடியாது. விதுரன் தன் வில்லை முறித்ததுபோல, நானும் என் பென்சிலை ஒடித்து எறிந்துவிடலாமென்றுகூட நினைத்தேன். அப்புறம் நிதானித்ததில், விதுரன் வில்லை முறித்தபடியால் பாரதப்போர் நின்றுவிடவில்லையென்பது ஞாபகம் வந்தது. உடனே, "கொண்டு வா கத்தியை!" என்று ஒரு கூச்சல் போட்டேன். கத்தி வந்ததோ, இல்லையோ, பென்ஸிலைக் கூராக்கிக் கொண்டேன்.

சரிதான்; ஆனால் மூன்று பக்கத்திற்குள் - மூன்றே மூன்று சின்னஞ் சிறு பக்கங்களுக்குள் - பெரிய விஷயம் எதைப் பற்றித்தான் நான் எழுதமுடியும்? ஒன்றும் புரியவில்லையே? தெய்வமே? நீதான் துணை! என்று தவித்தேன். கடவுள் கை கொடுத்தார். "என்னைப் பற்றி எழுது" என்று ஒரு அசரீரி வாக்கு ஏற்பட்டது. "திக்கற்றவர்க்கு தெய்வமே துணை."

ஆமாம்; கடவுள் விஷயத்தில் ஒரு பெரிய சௌகரியம் உண்டு. அவரைப் பற்றி ஒரே ஒரு வார்த்தையிலும் சொல்லலாம்; ஒன்பதினாயிரம் புத்தகங்களும் எழுதலாம், அல்லது நான்காவது சோம்பேறியைப் போல் சும்மாயிருப்பதே சுகமென்றுமிருக்கலாம். ஏனென்று கேட்பார் கிடையாது. அன்றியும், கடவுளைப் பற்றி என்ன வேண்டுமென்றாலும் பரிகாஸம் செய்யலாம். நகைச்சுவையில்லாத மனிதர்களைப் போல சுவாமி சண்டைக்கு வரமாட்டார். மான நஷ்ட வழக்கும் தொடரமாட்டார். அவ்வளவு ஏன்? இட்டினால் திருப்பித் இட்டு வாரோ என்ற பயங்கூட அவர் விஷயத்தில் வேண்டியதில்லை.




கடவுளைப் பற்றிய பிரச்னைகளில் மிகவும் முக்கியமானது, கடவுள் உண்டா, இல்லையா என்பதுதான். மனிதன் தோன்றின காலத்திலிருந்து இந்தப் பிரச்னையும் இருந்து வருகிறது. ஒரு சாரார் "கடவுள் உண்டு" என்கிறார்கள்; இன்னொரு சாரார் "கடவுள் இல்லை" என்கிறார்கள். ஆனால் இரு சாராரும் கடவுள் இல்லாதது போலவே காரியம் செய்கிறார்கள்!

**கல்கி கலெக்ஷன்**

கடவுள் இருந்தாலும் சரி, இல்லாமற் போனாலும் சரி, அவர் மனிதனுடைய காரியங்களில் தலையிடுவதாகத் தெரியவில்லை. அப்படித் தலையிட்டாலும் தம்மிஷ்டப்படி தலையிடுகிறாரேயன்றி, மனிதனுடைய வேண்டுகோளை முன்னிட்டுத் தலையிடுவதாகக் காணப்படவில்லை. ஒரு சமயம் ஒரு பாட்டி பின் வருமாறு பிரார்த்தனை புரிந்து கொண்டிருந்ததை நான் கேட்டேன்:- "சுவாமி! பகவானே! ஊரெல்லாம் காலராவும்,

---

**அமரர் கல்கி**




வைகூரியுமாயிருக்கிறதே! என் பெரிய நாட்டுப் பெண்ணுக்கு ஒரு காலரா வந்து கொண்டுபோகாதா? அவள் இன்றைக்குச் செத்தால் இன்னும் மூன்று மாதத்துக்குள் இரண்டாயிரம் ரூபாயும் பெண்ணுமாய் என் பிள்ளைக்குக் கலியாணம் பண்ணி வைப்பேனே?...''

பகவான் ஒருவர் இருந்தால், இந்தப் பிரார்த்தனையை நிறைவேற்றி வைப்பார் என்று நினைக்கிறீர்களா?

கடவுள் மேற்சொன்னது போன்ற தீய பிரார்த்தனைகளை நிறைவேற்ற மாட்டார்; நல்ல பிரார்த்தனைகளைத்தான் நிறைவேற்றுவார் என்று சொல்லலாம். அப்படியும் காணப்படவில்லை. ஆங்கிலேயர் பாடும் தேசிய கீதத்தில் ''கடவுளே! எங்கள் அரசரைக் காப்பாற்றும்; அவருடைய சத்துருக்களை நிர்மூலம் செய்யும்; எங்களுக்கு வெற்றியைக் கொடும்'' என்று பிரார்த்தனை செய்து வருகிறார்கள். சென்ற 300 வருஷ காலமாக ஆங்கில ஜாதியாரின் மேற்படி பிரார்த்தனை ஏறக்குறைய நிறைவேறியே வருகிறது! ஆனால் ஏழை இந்தியர்களாகிய நாம் ''சுவாமி! எங்கள் தேசத்தில் நாங்கள் இராஜ்யம் நடத்த அருள் புரியுங்கள்'' என்றுதான் கேட்கிறோம். இந்தப் பிரார்த்தனைக்கு பகவான் செவிடாயிருக்கிறார்.

சமீபத்தில் திருவண்ணாமலையில் நடந்த கோர சம்பவத்தைப் பாருங்கள். ஆறு மனித உயிர்களைக் கொலை செய்துவிட்டுத் தானும் உயிரைப் போக்கிக் கொண்டான் ஒரு மனிதன். இவ்வளவையும் 'கடவுளுக்குப் பிரீதி'யாகச் செய்தான். பகவான் தலையிட்டுத் தடுக்க வேண்டிய சம்பவம் ஏதேனும் ஒன்று உண்டானால் அது இதுதான் என்று சொல்லலாம். ஆயினும் அண்ணாமலையப்பன் கண்மூடி மௌனியாய் உட்கார்ந்திருக்கிறார்!

கடவுளுக்கு மனிதன் நன்றி செலுத்த வேண்டுமா? அப்படியானால் எதற்காக?- ''மனிதனைக் கடவுள் படைத்ததற்காக'' என்று சிலர் சொல்கிறார்கள். இந்த விஷயத்தில் கடவுள்தான் மனிதனுக்கு நன்றி செலுத்த வேண்டுமென்று நான் நினைக்கிறேன். மனிதனைப்



படைத்தது கடவுள் என்பதற்கு ஆதாரம் எதுவும் இல்லை; கடவுளை மனிதன் சிருஷ்டித்தது என்னவோ நிச்சயம். ஆனால் மனிதன் தம்மைப் படைத்ததற்காகக் கடவுள் அவனிடம் நன்றி செலுத்துவார் என்று தோன்றவில்லை. தம் பெயரால் உலகில் நடக்கும் கோர கிருத்யங்களைப் பார்க்கும்போது அவருக்குத் தம்மைப் படைத்த மனிதன்மேல் கோபம் உண்டாகுமென்றே தோன்றுகிறது.

"மலைகளையும், நதிகளையும், மரங்களையும், தானியங்களையும் பகவான் மனிதனுக்காகப் படைத்திருக்கிறாரே!" என்று சிலர் சொல்கிறார்கள். சூரியனும், சந்திரனுங்கூட மனிதன் உபயோகத்துக்காக பகவான் படைத்தவைதான் என்பது அவர்கள் கருத்து. இருக்கட்டும்; மேற்கண்டவைகளையெல்லாம் மனிதனுக்காகப் படைத்த பகவான் எரிமலைகளையும், பூகம்பங்களையும், பிளேக் காலராக்களையும், தேள் பாம்புகளையும், ரெஜினால்டு கிராடாக்குகளையும், ஏ.பி. பாத்ரோக்களையும் ஏன் படைத்தார்?




இந்த விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தபோது நண்பர், திருநெல்வேலி ஜில்லாவில் இருந்துவரும் ஒரு நம்பிக்கையைக் குறிப்பிட்டார். அந்த ஜில்லாவில் தாமிரபரணி நதி வளைந்து வளைந்து ஓடுகிறது. நதிக்கரையில் திருநெல்வேலி, அம்பா சமுத்திரம் முதலிய பட்டணங்கள் இருக்கின்றன. "பாரேன்! பெரிய பட்டணங்கள் வழியாய்ப் போக வேண்டுமென்றே தாமிரபரணி வளைந்து வளைந்து போகிறது!" என்று அந்த ஜில்லாவாசிகள் ஆச்சரியமாய்ச் சொல்வதுண்டாம். நதிபோன வழியில் பட்டணங்கள் ஏற்படவில்லை; பட்டணங்கள் உள்ள வழியாகத் தேடி நதி போகிறதென்பது இவர்கள் கருத்து. உலகமும் அதிலுள்ள இயற்கைப் பொருள்களும் மனிதனுக்காகப் படைக்கப்பட்டவை என்பது இதுபோன்றதுதான்.

"மனிதன் சாப்பிடுவதற்கென்றே பகவான் நெல்லைப் படைத்திருக்கிறார்" என்பது சாக பக்ஷணிகளின் எண்ணம். அதை நெல்லாக ஏன் படைக்க வேண்டும்? அரிசியாகவே விளையும்படி செய்திருந்தால் மனிதனுக்கு எவ்வளவு உழைப்பு மீதி?– உண்மையென்னவென்றால், உலகம் மனிதனுக்காக சிருஷ்டிக்கப்பட்டது என்பதைப் போன்ற அகம்பாவமான கொள்கை வேறொன்றுமில்லை.

படைப்பில் மனிதன் அற்பத்திலும் அற்பமானவன். சிருஷ்டி இரகசியத்தை ஒருவரும் அறிந்ததில்லை. எவரேனும் அறிந்த போதிலும் வெளியிட்டுச் சொன்னது கிடையாது. கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்.

சுவாமிக்கு வேண்டுதல் செய்து கொள்வதில் எவ்வளவோ விநோதங்கள் இருக்கின்றன. "திருப்பதி வேங்கடாசலபதி! என் பிள்ளைக்கு நூறு ரூபாய் சம்பளத்தில் உத்தியோகம் ஆகட்டும், உன் உண்டியில் ஒரு ரூபாய் போடுகிறேன்" என்று தாயார் வேண்டிக் கொள்கிறாள். இங்கே கடவுள் உத்தியோகத் தரகர் ஆகிறார். 1% அவருக்குக் கமிஷன். உத்தியோகஸ்தர் ஒருவர் தமக்கு வரும் 'மேல் வரும்படி'க்கெல்லாம் ரூபாய்க்குக் காலணா வீதம் உண்டியில் சேர்ப்பிக்கிறார். இதன் மூலம் லஞ்சம் வாங்குகிற பாவத்தை முழுதும் பகவான் மேலேயே போட்டு விடுவதாக அவர் எண்ணம்!

சௌந்தரத்தாச்சியின் உயில் விஷயம் எனக்கு ஞாபகம் வருகிறது. அங்காடிக் கடை வைத்து நல்ல பணம் சேர்த்திருந்தாள் சௌந்தரத்தாச்சி.

உயிலில் தங்கை, தமக்கை, சுவீகாரப் பிள்ளை, மாமன் மகள் முதலிய எல்லோருக்கும் உசிதப்படி சொத்தும், ரொக்கமும் எழுதி வைத்தாள். கடைசியில், "ஷண்முக சுந்தரம் செட்டியின் புரோநோட்டு ஆயிரம் ரூபாய் வட்டியும் முதலும் வசூலானால் ஸ்ரீ அர்த்தநாரீசுவர ஸ்வாமிக்குச் சேர்ப்பிக்க வேண்டியது" என்று எழுதச் செய்தாள். ஷண்முக சுந்தரம் செட்டி இன்ஸால்வெண்டாகி ஐந்த வருஷம் ஆயிற்று! புரோ நோட்டு காலாவதியாகி மூன்று வருஷம் ஆயிற்று! ஆச்சி செய்தது சரியென்று உங்களுக்குத் தோன்றவில்லையா? அர்த்தநாரீசுவர சுவாமிக்கு உண்மையில் பணம் வேண்டுமென்றிருந்தால், காலாவதிப் பத்திரமானாலும் அவர் ஏன் வசூலித்துக் கொள்ளக் கூடாது? அவ்வளவு சக்தி அவருக்கில்லாவிட்டால் அவருக்கு எதற்காகப் பணம் எழுதி வைப்பது? "நூறு ரூபாயும் ஒரு தம்பிடியும் அகப்பட்டால், ஒரு தம்பிடிக்கு சூடம் வாங்கி ஏற்றுகிறேன்" என்று வேண்டிக் கொண்டவன் மகா புத்திசாலியென்றே எனக்குத் தோன்றுகிறது. "எனக்கு 100 ரூபாய் கொடுக்கும் பிள்ளையார் தமக்கு ஒரு தம்பிடியும் கொடுத்துக் கொள்ளட்டுமே!" என்று அவன் நினைத்ததில் தவறு என்ன?

இதனாலெல்லாம் "கடவுள் வேண்டாம்" என்று நான் சொல்வதாகத் தயவு செய்து நினையாதீர்கள். அதற்கு மாறாக, கடவுள் மிகவும் உபயோகமானவர் என்று நினைப்பவர்களில் நான் ஒருவன்.

முதலாவதாக, கடவுள் நம்பிக்கையுள்ளவன் ஆயுள் இன்ஷியூரென்ஸ் செய்ய வேண்டியதில்லை. இது எவ்வளவு பெரிய சௌகரியம் பாருங்கள்! எத்தனையோ இன்ஷியூரென்ஸ் ஏஜண்டுகளுக்கு நான் டிமிக்கி கொடுத்து வந்திருப்பதெல்லாம், கடவுளிடம் எனக்குள்ள நம்பிக்கையினால்தான். ஏஜண்டு தொண்டையைக் கனைத்துக் கொண்டு ஆரம்பிக்கும்போதே நான் அவருடைய வாயை அடைத்து விடுவேன். "நான் நாஸ்திகனல்ல, சுவாமி! பகவானிடம் நம்பிக்கையுள்ளவன்; பகவான் ஒருவர் இருக்கும்போதே நான் ஏன் பெண்டாட்டி பிள்ளைகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுகிறான்! இட்டமுடன் என் தலையில் இன்னபடி என்றெழுதிவிட்ட சிவனும் செத்து விட்டானோ?' என்று பிரசங்கத்தைத் தொடங்குவேன். "தயவு செய்து இந்த மாதிரி போதனை மற்றவர்களுக்குச் செய்ய வேண்டாம்" என்று ஏஜண்ட் மன்றாடிவிட்டுப் போய்ச் சேர்வார்.

கடவுளின் மற்றொரு பெரிய உபயோகம் என்னவென்றால், அவருடைய பெயரால் பொய்யையும் மெய்யாக்கி விடலாமென்பதே. முக்கியமாக, கோர்ட்டுகளில் பொய் சாட்சி சொல்வோருக்கு பகவானுடைய திருநாமம் இன்றியமையாத சாதனமாயிருக்கிறது. உண்மையில் கடவுள் பேரால் அன்றித் தற்காலக் கோர்ட்டுகளில் பொய்யே சொல்லக் கூடாது. அப்படிச் சொன்னால் அது சாக்ஷியாக ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது.

அவ்வளவு ஏன்? கடவுள் நம்பிக்கை மட்டும் இல்லாவிட்டால் நம்மில் பலர் உயிர் வாழ முடியுமென்றே தோன்றவில்லை. இந்திய சட்ட சபையில் மகாத்மா விடுதலையைப் பற்றி ஆங்கில் ஸாரியாவும், யாமீன்கானும் பேசிய பேச்சுக்களைப் படிக்கிறோம். அப்போது என்ன தோன்றுகிறது? "இத்தகைய ஜன்மங்கள் வாழும் உலகில் நாமும் ஏன் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறோம்?" என்றுதான். ஆனால் உடனே "பொறுத்திருப்போம்; காலம் மாறும்; கடவுள் உண்டு" என்று எண்ணித் தேறுகிறோம். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் கடவுள் நம்பிக்கை மட்டும் இல்லாவிடில் நம்முடைய கதி என்ன?

(கடவுளிடம் நமக்குள்ள நம்பிக்கையினால்தான் "கல்கி"யையும் சகித்துக் கொண்டிருக்கிறோம். இல்லாவிடில் மூன்று பக்கம் என்று ஆரம்பித்து கடவுளின் பெயரால் நாலு பக்கம் எழுதியவரை என்னதான் செய்யக் கூடாது?– "விகடன்") ●

**(–ஆனந்த விகடன் 15.4.1933)**



# சரிந்து சரிக்கும் சிந்தாமணி!

• சூப்பர் மார்க்கெட் : வெறிச்!

**கோ**வை நகரின் மிக முக்கிய வியாபாரக் கேந்திரம், சிந்தாமணி கூட்டுறவு சூப்பர் மார்க்கெட். சாப்பாட்டுப் பொருள்களிலிருந்து சட்டை துணிமணி வரை, பாடப் புத்தகங்களிலிருந்து பட்டாசு வகையறா வரை சகலமும், சகலமும் விற்பனையாகிற ஒரு 'ஜேஜே' பிரதேசம். தற்போது இங்கே ஈயாடுகிறது. ஊழியர்கள் வேலை நிறுத்தம், உண்ணாவிரதம், சாலை மறியல், தீக் குளிப்பு முயற்சி... கோவை நகரமே ஸ்தம்பித்துப் போய், மிரண்டு நோக்குகிறது. என்ன ஆயிற்று சிந்தாமணிக்கு?

"நாலு மாசமா சம்பள பாக்கி. பள்ளிக்கூடம் திறக்கற நேரம். சிந்தாமணில வேலை செய்யறோம்னு சொன்னா வெளில கடன் குடுக்கக் கூடத் தயங்கறாங்க"

• உள்ளிருப்பு வேலை நிறுத்தத்தில் பெண்கள்



என்றார் ஓர் ஊழியர்.

''கிட்டத்தட்ட ரெண்டு வருஷமா நிர்வாகம் பி.எஃப்., எல்.ஐ.சி., இ.எஸ்.ஐ., க்ரெடிட் சொஸைடிக்குக் கட்ட வேண்டிய காசுல ஒரு பைசா கூடக் கட்டலை. அதனால பிராவிடண்ட் ஃபண்ட் லோன் கூட வாங்க முடியலை. நாங்க உள்ளிருப்பு வேலை நிறுத்தம், சாலை மறியல் கூடப் பண்ணிப் பார்த்துட்டோம். யாரும் கண்டுக்க மாட்டேங்கறாங்க. இப்படியே போனா, நாங்க பிழைக்கறது எப்படி?'' - குமுறிக் கொட்டினார் இன்னொரு ஊழியர்.



• மூடப்பட்ட எண்ணெய் ஆலை

ஊழியர்களின் கட்சி சார்ந்த அனைத்து சங்கங்களும் வேலை நிறுத்தத்தில் ஈடுபட, தி.மு.க. சங்கம் மட்டும் போராட்டத்தில் ஈடுபடவில்லை. அதனால் ஒருசில கடைகள் திறந்திருந்தாலும் பொது மக்கள் மார்க்கெட்டுக்கு வருவதை அடியோடு நிறுத்தி விட்டதால், பிரதேசமே வெறிச்!

ஊழியர்களின் குரலுக்குச் செவிமடுக்காத சிந்தாமணி நிர்வாகம், அவர்களில் யாராவது பத்திரிகைகளுக்குச் செய்தி கொடுத்தால் மட்டும் உடனே சஸ்பெண்ட் செய்து விடுவதாகச் சொன்னார்கள். நாம் சந்தித்த பலரும் பெயரை வெளியிட மறுத்த காரணம் புரிந்தது.

"நிர்வாகச் செலவு அதிகம்னு காரணம் காட்டி வாலன்டரி ரிடையர்மென்ட் ஸ்கீமை அறிமுகப்படுத்தியது அரசு. அப்ப ஆரம்பிச்சது சார் பிரச்னை! 31.3.98 தொடங்கி, 43 பேர் 'தன் விருப்பு'ங்கற பேர்ல கட்டாய ஓய்வு கொடுக்கப்பட்டு, வீட்டுக்கு அனுப்பப்பட்டார்கள். ஆனா, இன்னிய வரைக்கும் அவங்களுக்குச் சேர வேண்டிய பணம் எதுவும் கொடுக்கப் படலை. வேலையும் போச்சு; வரவேண்டிய பணமும் வரலை! இதைப் பார்த்துத்தான் மற்ற ஊழியர்கள் முழிச்சிக்கிட்டாங்க. 227 பேர் வாலண்டரி ரிடையர்மென்ட்டுக்கு நிர்ப்பந்தப்படுத்தப்பட்டார்கள். அதுல அந்த 43 பேர் போக மிச்சம் பேர் மறுத்துட்டாங்க.

''உடனே சிந்தாமணியோட தனி அதிகாரி சற்குரு மகாதேவன் எங்களைக் கூப்பிட்டு, 'சேர வேண்டிய தொகையில் 30% உடனே தருகிறோம். எழுதிக் கொடுங்கள்'னு கேட்டார். அப்பவே இது ஏமாத்து வேலைன்னு புரிஞ்சு போச்சு. முழுத் தொகையையும் தர்றதா சொன்ன 43 பேருக்கு ஒண்ணுமே குடுக்காம இல்ல அனுப்பிச்சாங்க? அதான் நாங்க வேலை நிறுத்தம் செய்யறோம்! நாலு மாசமா சம்பளமே இல்லை!'' என்றார்கள்.

பணம் பட்டுவாடா செய்யாமல் கட்டாய ராஜினாமாவிற்கு நிர்வாகம் வற்புறுத்துவதை எதிர்த்து, ஊழியர்கள் கோர்ட்டில் ஒரு ரிட் தாக்கல் செய்திருக்கிறார்கள். ஆனால், கோடை கால கோர்ட் விடுமுறையால் அது தடைபட்டு நிற்கிறது!

அரசுத் துறை நிறுவனமான 'சிந்தாமணி' இப்படி சீரழிந்து போனதற்குக் காரணம் என்ன? பலவித பொருட்களின் விற்பனையில் மட்டுமல்லாமல், பல்வேறு தொழில்களிலும் முதலீடு செய்துள்ளது சிந்தாமணி. தற்போது இடியாக நஷ்டம் என்றால், அதற்கு மூலகாரணம் ஒண்டிப்புதூரில் இயங்கி வந்த ஒரு பெரிய சூரிய காந்தி எண்ணெய் தயாரிப்பு நிறுவனம் மூடப்பட்டதுதான் என்கிறார்கள்.

சிந்தாமணியின் கிளை நிறுவனமான இந்த சூரியகாந்தி எண்ணெய் தயாரிப்பு ஆலை, நான்கு வருடங்களாக மூடப்பட்டுள்ளது. மின்சார வாரியத்துக்கு இந்த ஆலை மாதம் ரூ. 50,000 வீதம் மொத்தம்

30 லட்சம் பாக்கி!

"இப்படி இருந்தா எப்படி நிர்வாகம் லாபத்துல ஓடும்?" என்று கேட்டார் ஊழியர்.

சுமார் எட்டுக் கோடி ரூபாய் மதிப்புள்ள இந்த ஆலையை, குறைந்தபட்சம் 3¼ கோடி Guide Line Value வைத்து விற்பதாக மூன்று வருடம் முன்பு அறிவித்தது நிர்வாகம். அ.தி.மு.க. ஆட்சி. ஆலையை சசிகலா வாங்கப் போகிறார் என்று செய்தி பரவ, விற்பனை நிறுத்தி வைக்கப்பட்டது. ஆனால் அதற்கு முன்னதாக, விற்பனை குறித்த விளம்பரத்துக்கு மட்டுமே எட்டு லட்சம் செலவானதாம்!

"அந்த ஆயில் மில் மூலமாக மட்டும் சுமார் 30 லட்சம் வீண் செலவு!" என வருத்தப்பட்டார் அங்கு வேலை பார்த்த ஊழியர் ஒருவர்.

இப்படியான பல்வேறு நஷ்டங்கள் தவிர, சிந்தாமணிக்கென்று நியமிக்கப்படும் தனி அதிகாரிகள் தனிப்பட்ட லாப நோக்கில் கமிஷன் அடித்து, ஏகபோகமாகச் செயல்பட்டதும் நஷ்டத்துக்குக் காரணம் என்கிறார்கள்.

உதாரணமாக, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் முக்கிய விற்பனைக் கேந்திரமாக இருந்து வந்தது சிந்தாமணி. ஆனால் இப்போது? சுமார் 30 லட்சம் கடன் - பாடநூல் நிறுவனத்துக்கு! எனவே டெக்ஸ்ட் புக் சொஸைடி இதற்குத் தன் சப்ளையையே நிறுத்தி விட்டதாம்!

ஏன் கடனைக் கட்டவில்லை? அந்தப் பணத்தில் பட்டாசுகளை வாங்கிக் குவித்து விட்டதுதான் காரணம். (பட்டாசு கொள்முதலில் கமிஷன் அதிகமாம்.)

இன்னொரு உதாரணம் :

பொதுவாக, சரக்கு விற்றபின் பணம் தருவதுதான் சிந்தாமணியின் வாடிக்கை. ஆனால், அரசியல்வாதிகளின் தலையீட்டால் சமீப காலமாக கொள்முதலின்போதே லட்ச லட்சமாகப் பணம் கொடுக்கப்பட்டு விட, தற்சமயம் கோவை சிந்தாமணியில் விற்காமல் குவிந்திருக்கும் ஜட்டிகளின் மதிப்பு மட்டும் ஆறு லட்ச ரூபாய்!

இந்த நிர்வாகப் போக்கு பற்றி AITUCன் தலைவர் ஆறுமுகத்தைச் சந்தித்துக் கேட்டோம்.

"1976-ல் இதன் போர்டு கலைக்கப்பட்டு, அரசு சிந்தாமணியை ஸ்பெஷல் ஆபீசர்களின் கட்டுப்பாட்டிலேயே விட்டதுதான் காரணம். கமிஷன் கொடுத்தால் கொள்முதல் உறுதி என்றபடிதான் நிர்வாகம் இயங்குகிறது. விளைவு? கொள்முதல் செய்யப்படும் பொருட்களின் தரம் பறிபோகிறது. விற்பனை மந்தமாகி இன்று வருஷத்துக்கு ஒன்றரைக் கோடி ரூபாய் வட்டி மட்டும் கட்ட வேண்டிய நிலைமைக்குக் கடனாளியாகி விட்டது சிந்தாமணி. பீளமேட்டில் ஒரு கொடோன், திருப்பூரில் பனியன் ஃபாக்டரி, ஒண்டிப்புதூர் ஆலை என கோடிக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள சொத்துக்கள் இயங்காமல் போய் விட்டன. இதனால் முழுக்க முழுக்க பாதிக்கப்படுவது அப்பாவித் தொழிலாளர்கள்தான்!" என்றார் ஆறுமுகம்.

• 'சிந்தாமணி' தலைமை நிலையம்



கோவை சிந்தாமணியின் தனி அதிகாரி சத்குரு மகாதேவனைச் சந்திக்க நேரிலும் தொலைபேசியிலுமாகப் பலமுறை முயன்றும் முடியவில்லை. ஒவ்வொரு முறையும் பலப்பல காரணம் சொல்லி சந்திக்க மறுத்து விட்டார்.

"அவரையா... எஸ். ஓ. சாரையா? நீங்க பார்க்கவே முடியாது சார்!" என்று அடித்துச் சொன்னார்கள் சிந்தாமணி ஊழியர்கள்.

கட்டுரை, படங்கள் : **கா. சு. வேலாயுதம்**



# அப்பாவின் எலிகள்

சரி, உன்னிஷ்டம்; வீட்டை இடித்து விடலாம் என்று சொல்லிவிட்டு, அப்பா கண்களை மூடிக் கொண்டார்.

அடுத்த விஷயத்துக்கான சம்மதம் அத்தனை சுலபத்தில் பெறக்கூடியதல்ல என்று அவனுக்குத் தோன்றியது.

சரியாகத் தொண்ணூற்றேழு வருடங்கள். அப்பாவை விட வீட்டுக்கு முப்பது வயது அதிகம். அவன் பார்த்திராத தாத்தாவின் தந்தை, ரூபா முன்னூறுக்கு நிலத்தை வாங்கி, எட்டாயிரத்தில் வீட்டைக் கட்டி முடித்திருக்கிறார். தலைமுறைகள் உருண்டு, தேய்ந்த வீடு. அபாரமான விசாலம். நிறைய அறைகள். கூட்டுக் குடும்பமாகப் பலர் புழங்கி, புகை, ஒட்டடை, சுண்ணாம்பு, பலவிதக் கறைகள், மறுபடி புகை, மறுபடி சுண்ணாம்பு எனப் படலங்கள் மாறி மாறி, நிறமற்றுப் போன சுவர்கள். உளுத்து விட்ட மர உத்தரங்கள். பழைய சரித்திரங்களைப் பேணிக் காக்கும் பரண். நகர்த்தினால் கீல் பெயர்ந்து அலறும் காட்டு மரக் கதவுகள். வாரிசுகளின் யோசனையில், சில அறைகள் ஒழித்து விடப்பட்டுக் கொஞ்ச நாள் வாடகைகள் வந்து கொண்டிருந்ததும் நின்று விட்டது. பழைய வீடு. ஒரு சொல்லில் நசுக்கி எறியப்பட்டு விட்ட சரித்திரம்.

வீட்டுக்கு ஒருதரம் பாரதியார் வந்திருக்கிறார்; மணி ஐயர் ஓட்டலிலிருந்து சுடச்சுட பக்கோடா வாங்கி வந்து தந்திருக்



கிறேன் என்று சாகிற வேளையில் தாத்தா நினைவு தப்பிப் பேசிக் கொண்டிருந்தார். இப்போது பாரதியாரும் இல்லை; அவருக்கு பக்கோடா வாங்கித் தந்த தாத்தாவும் இல்லை.

உலகம் மாறுகிறது. இது சாஷேக்களின் காலம். வீட்டைக் கூட சாஷேவாக்கி, ஒன்றன் மேல் ஒன்றாகக் கட்டி விற்கிறார்கள்.

"மிஸ்டர் கிருஷ்ணன், ஒன்றே முக்கால் கிரவுண்ட் என்பது சாதாரணமல்ல. இன்றைய தேதியில், இந்த நகர மதிப்பில் பதினெட்டு லட்சம். நான் பத்து லட்சம் கையில் தருகிறேன். மிச்சத்தில் உங்களுக்கொரு டபுள் பெட்ரூம் ஃப்ளாட் – சர்வ வசதிகளுடனும். கிரவுண்ட் ஃப்ளோரா, ஃபர்ஸ்ட் ஃப்ளோரா? அது உங்கள் சாய்ஸ்."

நாக்கில் துளி தேனைச் சொட்டிவிட்டுப் போன பிரமோட்டர்.

கையில் பத்து லட்சம். சாதாரணமில்லைதான். புராதனமானது என்பது தவிர, எண்ணி மகிழ வீட்டில் ஏதுமில்லை. இருளும் புழுக்கமும் மூலைகளைப் பெருக்கப் பெருக்கத் தீராத பூச்சிப் பட்டாளமும் – சமயத்தில் தேள் போன்ற அபாயங்களும் கூட.

விசாலமான, வெளிச்சமும் காற்றோட்டமுமான ஃப்ளாட்! வழுக்கும் மொஸைக் தரை. வாஷ் பேஸின். அவசரத்தில் அழகு பார்க்க அங்கே ஒரு கண்ணாடி. மேலும் பல வசதிகள். சமையல் அறைக்கே வரப் போகிற பாலாறு. டபுள் லாக் சிஸ்டம் கொண்ட தேக்குமரக் கதவு. கேபிள் கனெக்‌ஷன். விரும்பினால் ஏஸி.

**வா**ழ்வின் சின்னச் சின்ன சுகங்கள்தான் எத்தனை? அவன் நீண்டதொரு பெருமூச்சு விட்டான். கேவலம் நினைத்த நேரத்தில் கதவைச் சாத்தி விட்டு எல்லோரும் வெளியே கிளம்பினோம் என்பது கூடக் கிடையாது. மைல் நீளத்துக்கு நடந்து, கொல்லைக் கதவை இழுத்துப் பூட்டி, வழிதோறும் சரி பார்த்து, வாசல் வருகிற போதே அலைந்த களைப்பு அப்பிக் கொள்ளும். மறுபடியும் தான் திறப்பதென்றால் வழியேறப் பதினாறு பூங்கதவுகள்.

கூட்டுக் குடும்ப வாழ்வெல்லாம் அப்பாவின் தலைமுறையோடு விடைபெற்று, இப்போது நாலே பேர். ஒரு மனைவி, ஒரு மகள், ஒரு அப்பா மற்றும் அவன்.

தயவுசெய்து ஒப்புக் கொள்ளுங்கள் அப்பா. புதிதாக ஒரு ஃப்ளாட். மேலாகப் பத்து லட்சம். வங்கியில் போட்டால் வட்டியே பத்தாயிரம். பிறகு உலகத்தை இருபத்தோரு இன்ச் வண்ணத் திரையில்,

பா. ராகவன்

அண்டை வீட்டார் பொறாமையுடன் பார்க்கலாம். ஆசையாக ஐஸ் வாட்டர் அருந்தலாம். கட்டிலில் படுக்கலாம். தவிரவும் இயந்திரம் துணி துவைக்கும். மின்சாரம் சமையல் செய்யும். சாப்பிட்ட தட்டை மட்டும் நாம் கழுவினால் போதும்.

தேவையில்லை. அதற்கும் ஆள் போட்டு விடலாம் என்று அவன் மனைவி சொன்னாள்.

பழம்பெருமை பேசுவதில் அப்பாவுக்கு உடன்பாடில்லை. உலக மாற்றமும் அவர் அறியாததல்ல. வீடு அவனுக்குத்தான். அவன் என்னவும் பண்ணிக் கொள்ள உரிமை இல்லாமலில்லை. அவன் இஷ்டம் தான் அவர் திருப்தியும். ஆனாலும் அவர் காலம் வரை பொறுத்திருக்கலாமல்லவா? கிழவனின் சின்ன விருப்பம். பிறந்த வீட்டில் இருந்து, இறக்கிற அற்ப சந்தோஷம். தவறில்லையே?

ஒரு தவறும் இல்லைதான். ஆனாலும் பத்து லட்சம்! பணத்துக்கான சாத்தியங்கள் தெரியும்போதே விதம்விதமான செலவுகளுக்கான பாதைகளும் புலப்படத்தானே செய்கின்றன? அடுத்த வருஷம் பத்தாவது முடிக்கிற மகன். ஒளிமயமான அவனது எதிர்காலம். மேலும் நீண்ட நாட்களாகக் காத்திருக்கிற மனைவியின் ஆபரண கோரிக்கைகள். தனக்கே கூட ஒரு ஸ்கூட்டர் இருந்தால், போய் வர சவுகர்யம்.

மனித மனம் எத்தனை விசித்திரமானது! வெறித்தனமாய் எதையேனும் பற்றிவிட்டால் உறவுகளும் உணர்வுகளும் கூட ஒரு பொருட்டில்லாமல் ஆகி விடுகிறது. ரசாயன மாறுதல்களில் குதித்துக் கும்மாளம் இடுகிற மனம். காத்திருக்கும் பணம். கண் சிமிட்டும் வாழ்க்கைத் தரம். வசதிகள். சுகம். அதுதான் விஷயம்.

போதிய இடைவெளிகளில் மீண்டும் மீண்டும் அப்பாவிடம் பேசிய போது, ஒரு வாகான தருணத்தில் சரி, உன்னிஷ்டம் என்று சொல்லி விட்டார்.

தேவர்கள் பூமாரி பொழியாமல், பில்டர் வந்து வெற்றிலைத் தட்டில் அச்சாரம் வைத்துக் கொடுத்து விட்டு, எதற்கும் இருக்கட்டும் என்று அப்பாவை ஒருதரம் விழுந்து வணங்கி விட்டுப் போனார்.

ஒரு வாரத்தில் சாமான் செட்டுகளை காலி பண்ணி, தாற்காலிக வாடகை வீட்டுக்குப் போக வேண்டும். அதையும் பில்டரே ஏற்பாடு செய்திருந்தார். ஆட்டோவில் பத்து நிமிஷ தூரம்.

அவன், ஆபீஸுக்கு லீவ் போட்டு விட்டு மனைவியுடன் வீட்டை ஒழிக்க ஆரம்பித்தான். வந்தது பிரச்னை.

**உ**பயோகப் பொருட்கள் ரொம்பவும் குறைச்சல். இரண்டு கோணிப் பைகளில் சமையலறையைத் திணித்து, பீரோவுக்குள் ஹாலை அடைத்து, சைக்கிள் கேரியரில் மிஞ்சியதை வைத்தால் தீர்ந்தது விஷயம்.

''அந்தக் கறுப்பு பீரோவை என்ன பண்ணறது?'' என்று அவன் மனைவி கேட்டாள்.

கறுப்பு பீரோ, மரத்தால் ஆனது. உண்மையில் அது பீரோ அல்ல. அசாதாரணமான உயரமுள்ள ஒரு பழங்காலப் பெட்டி. ஏழெட்டு இழுவை அறைகள் கொண்ட மினியேச்சர் குகை. சரியான கனம். இழுப்பது கூட சிரமம். அதன் அருகே யாரும் போனதில்லை. உள்ளே என்னென்ன இருக்கக்கூடும் என்று யோசித்துப் பார்க்கவும் சந்தர்ப்பம் வாய்த்ததில்லை.

அது அப்பாவின் சொத்து. எப்போதாவது குடைய உட்கார்ந்தாரென்றால் நாலைந்து எலிகள் சீறிப் பாயும். அவர் கண்டுகொள்ள மாட்டார். தன் காரியத்தை முடித்து விட்டு, எழுந்து போய் விடுவார். அவனது அடுத்த இரு தினங்கள், கறுப்பு பீரோவிலிருந்து தப்பி வந்த எலிகளை வேட்டையாடுவதில் கழியும். மனைவியின் முணுமுணுப்பை ஒரு முத்தத்தில் சரி செய்வானே தவிர, அப்பாவிடம் அந்த பீரோவைக் குடைய வேண்டாம் என்றோ, தூக்கிப் போட்டு விடலாம் என்றோ சொன்னதில்லை. உள்ளே, அம்மாவின் ஞாபகார்த்தங்கள் ஏதும் இருக்கலாம். பழைய துணிகள், புத்தகங்கள், பெருமாள் படம் ஏதாவது. பெரிய குழந்தைகளின் சின்ன சந்தோஷங்கள். அதைக் கலைப்பதை அவன் எப்போதும் விரும்பியதில்லை.

ஆனால், புதிய ஃப்ளாட்டிலும் எலி பீரோவா? கடவுளே! என்றாள் அவன் மனைவி.

யோசிக்க வேண்டிய விஷயம்தான். வீட்டில் இதுகாறும் எலிகள் செய்திருக்கிற லீலைகள் இவ்வளவு அவ்வளவு அல்ல. எலிப்பொறியில் வைக்க மசால் வடை வாங்கிய காசில் சின்னதாக ஒரு டீக்கடை வைத்திருக்கலாம். தவிரவும் அவளுக்குத் தன் முதலிரவுப் புடவை நாசமான துக்கம் இன்னமும் நெஞ்சு வரை நிற்கிறது.

**வே**று வழியில்லை. அவன் தயங்கித்

தயங்கி அப்பாவிடம் போனான்.

எத்தனை வருடங்களாகி விட்டன, அவருடன் இப்படி உட்கார்ந்து பேசி? உடன் அமர்ந்து சாப்பிட்டு? அலுவலகம் அவனைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறது. இந்த ஃப்ளாட் ப்ராஜெக்ட் நல்லபடியாக முடியட்டும். ஒரு நடை குடும்பத்துடன் திருப்பதி போய் வர வேண்டும். ஒரு போன் அடித்துச் சொன்னால் வாடகைக் கார் வாசலுக்கு வந்து விடும். அங்கே க்யூவில் கூட நிற்க வேண்டாம். சுலபம். சுப்ரபாத சேவை. இனி பணத்துக்குத்தான் கவலை இல்லையே?

அவர் முன்பு போல் ஏதாவது மறுபடி எழுத முயற்சி செய்யலாமே? சிவாஜி, பிரசண்ட விகடனிலெல்லாம் கதை எழுதியவர், இப்போது நினைத்தால் எழுத முடியாதா என்ன? மேலும் அது உற்சாகமான பொழுதுபோக்கு. பழைய, பிரசுரமானவை எல்லாம் இருக்கிறதோ என்னமோ? எடுத்துப் பார்த்தால் உற்சாகம் வருமே?

அப்பாவின் முகம் வெகு நாட்களுக்குப் பிறகு ஒரு குழந்தையுடையது போலக் குதூகலமானதைக் கண்டான்.

"அத்தனை லேசில் காணாமல் அடிச்சுடுவேனா என்ன?" என்று துள்ளி எழுந்து கறுப்பு பீரோ அருகில் சென்று அமர்ந்தார். முகத்தில் உடுத்திக் கொண்ட ஆர்வத்தைக் கலைக்காமல் அவனும் எழுந்து போய் அருகில் உட்கார்ந்தான்.

கரகரவென்ற சப்தத்துடன் டிராயர் திறக்கப்பட்டதும் துள்ளிக் குதித்து ஓர் எலி வெளியே பாய்ந்தது. அவன் அலறிப் பின்வாங்கினான்.

"எலிக்குப் போய் ஏன் பயப்படறே? ஒண்ணும் பண்ணாது. இன்னிக்குத்தான் அதுக்கு ஆகஸ்டு பதினஞ்சு" என்று அப்பா சிரித்தார்.

"நாசமாக்கிடுமேப்பா?"

"நல்லதா எது இருக்கு இங்கே, புதுசா நாசமாக?"

"உன் கதைகள்?"

அப்பா சிரித்தார். "முப்பது வருஷத்தில், இன்னிக்குத்தான் உனக்கே உங்கப்பன் ஒரு எழுத்தாளன்ங்கற ஞாபகம் வந்திருக்கு. அதெல்லாம் பத்திரமா இருந்து இனிமே யாருக்காக எக்ஸிபிஷன் வைக்கப் போறேன்? பிரசுரம் ஆனதும் ஆகாததுமா இந்தப் பெட்டி நிறைய சுமார் ஆயிரம் பக்கம் எழுதினது இருக்கும். எல்லாத்தையும் எலிகள் படிச்சிருக்கும்."

அவனுக்குச் சங்கடமாக இருந்தது. அவன் பிள்ளையார் பிடிக்க வந்திருப்பவன்.

"வேற ஒண்ணுமே இல்லையா இதில்?"

"இருக்கும். உங்கம்மாவோட கூரைப் புடைவை. என்னோட காசியாத்திரை வேஷ்டி, உடைஞ்ச பேனா, மாத்திரைச் சீட்டு, டைரி, புத்தகங்கள், எலிப் புழுக்கை."

"எடுத்து க்ளீன் பண்ணி ஒழுங்கா வைக்கலாமில்லையா? புதுசாக ஒரு பீரோ வாங்கி..."

ஒருகணம் அவர் அவனை உற்றுப் பார்த்தார்.

"கிருஷ்ணா, நான் உன்னைத் தப்பு சொல்லலை. ஆனால் ஒண்ணு புரிஞ்சுக்கணும்னு எதிர்பார்க்கறேன். வயசான வாளுக்கு சில அல்ப சந்தோஷங்கள் உண்டு. புழங்கின வீடு, பரீட்சை எழுதின பேனா, படுத்துண்ட திண்ணை, பழகின பெட்டி இந்த மாதிரி. எதுவும் பெரிய விஷயம் இல்லைதான். ஆனாலும் ஞாபகங்கள் இல்லையா? இது உங்கம்மா ஆசைப்பட்டு வாங்கின பெட்டி. குளிருக்குக் கம்பளி மாதிரி என் தனிமைக்கு என் சென்டிமென்ட்ஸ். நான் சொல்றது அல்ப விஷயமா தெரியலாம். உனக்கு என் வயசானால் இது அல்ப விஷயமா தெரியாது."

அவன் அதிர்ந்து இருந்தான். அப்பா இப்படிப் பேசக்கூடியவர் என்று இதுநாள் வரை அவன் எண்ணியிருக்கவில்லை. சம்மதமோ, நிராகரிப்போ, சந்தோஷமோ, சோகமோ – ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு வித மௌனம் வைத்திருப்பார். தருணங்களுக்கேற்பப் பொருள் தரும் வீரியம் மிக்க, பிரத்தியேக மௌனங்கள். நல்லது. அவர் காயப்பட்டிருக்கிறார். இத்துடன் விட்டு



***"டாக்டர், எனக்கு ஞாபக மறதி அதிகமாயிடுச்சு!"***

***"அதை ஏன்யா என்கிட்டே வந்து சொல்ற!"***

***– சீர்காழி வி. கௌரி***



''துறைமுகத்துக்கு இங்கிலீஷில் எப்படிடா சொல்றது?''

'' 'ஹார்பர்!' எதுக்குப்பா கேட்கறே?''

''துறைமுக சேர்மன் பதவி கிடைச்சிருக்கு எனக்கு... அதைப் பற்றி ஏதாவது தெரிஞ்சு வச்சுக்கவேணாமா?''

– உ. ராஜாஜி

விடுவதுதான் சரி. புதிய ஃப்ளாட்டாக இருந்தால் என்ன? புதிய அப்பாவையா வாங்கி வைக்கப் போகிறேன்? டபிள் பெட்ரூமில் ஒன்று அப்பாவுக்கு. அதில் ஒரு மூலை அவரது கறுப்பு பீரோவுக்கு. பத்து லட்சம் வரப் போகிறது. எலிகளைப் பிடிக்க ஒரு பூனை வளர்க்கலாம். பூனைக்குப் பால்தர ஒரு பசு மாடு வாங்கலாம். மாட்டைக் கட்டி மேய்க்க ஓர் ஆள் போடலாம். தீர்வா இல்லை? மனம், மனம் வேண்டும். அதுதான் விஷயம்.

'உக்கும்'' என்று நொடித்து விட்டுப் போனாள் அவன் மனைவி.

அது. அவன் முற்றிலும் எதிர்பாராதது. ஆபீஸ் விட்டு வந்த போது, அவன் கட்டி வைத்துப் போன மூட்டைகளின் அருகே புதியதொரு மூட்டை நின்றிருந்தது.

"என்ன பார்க்கறே? என்னோடதுதான்!" என்று கண் சிமிட்டினார் அப்பா.

''யோசித்துப் பார்த்தேன். புது வீடு. அரதப் பழசாக அது மட்டும் துருத்திண்டு தெரியும். நீ கேட்டது தப்பில்லை. மோர் ஓவர், எலிகள் பிரச்னை. அதான், அந்தக் கறுப்பு பீரோவுக்குள்ளே என் ஓல்ட் சென்டிமென்ட்ஸைப் போட்டுப் பூட்டி நானூத்தம்பது ரூபாய்க்கு நானே சொல்லி விட்டு வந்துட்டேன். கூறைப் புடைவை, வேஷ்டியை உன் பெண்டாட்டி பீரோவில் எடுத்து வெச்சுட்டா. இதெல்லாம் நான் படிச்சுக் கிழிச்சதும் எழுதிக் கிழிச்சதும் தான். வேணும்னா வெச்சுக்கலாம், பரணையில் ஒரு ஓரமா. அல்லது...''

அவன் பதறி நிறுத்தினான். என்ன பேசுவது? அப்பாவின் பெருந்தன்மைக்கு முன்னால் எத்தனை சிறுத்து, அவன் லில்லிபுட் ஆகி விட்டான்?

"சீ, எதுக்கு அழறே? என் பிள்ளையை விடவா எனக்கு அந்தப் பொட்டி ஒசத்தி?''

வெளிச்சமும் காற்றோட்டமுமான புதிய ஃப்ளாட். பளிங்குத் தரையில் மூன்று மாதம் முன்பு வரை முகம் தெரிந்து கொண்டிருந்தது. பார்த்துப் பார்த்துத் துடைத்து வைத்த அவன் மனைவிக்கும் இப்போதெல்லாம் அலுப்பு வந்து, பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று விட்டு விடுகிறாள். நிகழ்ச்சிகள் போரடித்ததால் புதிய கலர் டீவி ஒரு வாரமாக மூடியே கிடக்கிறது. வசதிகள் பெருகி என்ன பயன்? இருந்து அனுபவிக்க வேண்டிய அப்பா இப்போது இல்லை. தமது சென்டிமென்ட்களை முன்னால் அனுப்பி விட்டுப் பின்னாலேயே தானும் போய் விட்டார். வயதான காலத்தில் அவரை இன்னும் நிறைவாக, இன்னும் மகிழ்வாக வைத்திருக்கலாம் என்று அவன் நினைத்தான். எதையும் தாமதமாக யோசிப்பதே இந்தத் தலைமுறையின் வழக்கமாகி விட்டது.

"கொஞ்சம் இங்கே வரீங்களா?"

நினைவு கலைந்து, எழுந்து உள்ளே போனான். அப்பா இருந்த அறை. ஞாபகார்த்தமாக அவர் போட்டோ கூட ஒன்று இல்லை. அழைத்துப் போய் எப்போதாவது எடுத்திருக்கலாம். தோன்றவில்லை.

"என்னமோ சப்தம் கேட்கலை?"

''என்னது?'' என்றான் அண்ணாந்து பார்த்தவாறு.

''கவனிச்சிக் கேளுங்கோ. சரசரன்னு கேட்கலை?"

அவன் பார்வை பரணில் இருந்த அப்பாவின் மூட்டை மேல் விழுந்தது. கவனித்தான். சப்தம்தான் கேட்கிறது.

ஒரு கணம்தான். உடனே புரிந்து விட்டது.

"நகர்றது பாருங்கோ."

"உம்!"

''ஒண்ணுதானா? ரெண்டு மூணு இருக்குமா?"

"எத்தனை இருந்தால் என்ன? இருந்துட்டுப் போகட்டும் விடு."

அவன் ஏதும் பேசும்முன் அவசரமாக வெளியே வந்தான். முதுகுக்குப் பின்னால் அவன் குறும்பாகச் சிரித்துக் கொண்டிருக்கக்கூடும்.

**வா**ழ்வின் ஒவ்வொரு காலகட்டத்தையும் பின்னோக்கிப் பார்க்கும்போது இரண்டு விஷயங்கள் புலப்படுகின்றன. வாழ்வின் எந்த இடத்தில் நமது கல்வி, படிப்பு, அனுபவம் எல்லாம் முடிந்து விட்டதோ அப்போது நாம் வேறு திசையில் நடப்பதற்கான சூழ்நிலைகள் உருவாகின்றன. சூழ்நிலை என்று சொல்வதற்குப் பதில் கட்டாயங்கள் ஏற்படுகின்றன என்று கூற வேண்டும்.



வெளியூருக்குப் போகிறோம் என்று தீர்மானிக்கிறோம். இங்கிருப்பது சரியில்லை - இங்கு எல்லாம் கற்றாகி விட்டது - என்ற நிலையில், சூழ்நிலையே நம்மை இருக்குமிடத்தில் இருந்து வெளியே தள்ளுமாறு உருவாகிறது. அடுத்த நிலை எப்படி இருக்குமோ என்கிற சஞ்சலம் ஏற்படுகிறது. சஞ்சலத்தையும் மீறி நாம் செயல்பட வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. வெளியே வந்து பல பாதைகள் செல்லும் ஒரு சதுக்கத்தில் நிற்கிறோமென்றால், ஒரு பாதை தவிர மற்றவை எல்லாம் முட்களாலோ அல்லது பாதை பழுது பார்க்கப்படுவதாலோ அடைக்கப்பட்டிருக்கின்றன. எதிரே ஒரே பாதைதான்- அது வழியேதான் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம். நம்மை மீறி யாரோ எதுவோ செய்வது போன்ற நிலை. நாம் நடத்தப்படுவது போன்ற சூழ்நிலை. அதைத்தான் 'விதி' நம்மை வழி நடத்திச் செல்கிறது என்கிறார்கள்; நாம் செய்த கர்ம வினைகள் நம்மை வழி நடத்திச் செல்கின்றன என்கிறார்கள்.

பிரபஞ்சத்தின் ஓர் உண்மையை ஜே. கிருஷ்ணமூர்த்திக்கு அவரது குரு உபதேசிக்கிறார். "கடவுளுடைய திட்டம்; இப் பிரபஞ்சம் உயர்நிலையை நோக்கிச் செல்லும் பரிணாம வளர்ச்சிதான்" என்று. நாமும் தெரிந்தோ தெரியாமலோ அதையே சொல்கிறோம். நமக்கும் அந்தத் தெளிவு சில சமயம் ஏற்படுகிறது. "வாழ்க்கை ஒரு தேவனாகும் முயற்சி" என்று கூறுகிறோம். எல்லாம் ஒரு ஒழுங்கிலேதான் நடைபெறுகின்றன.

ஜேம்ஸ் ஆலன் போன்ற தத்துவஞானிகள் "மனிதன்தான் அவனுடைய விதியை நிர்ணயிக்கின்ற சிருஷ்டிகர்த்தா" என்று கூறுகிறார்கள். அதாவது "நமது எண்ணங்கள்தான் நமது வாழ்வையும், சூழ்நிலையையும் உருவாக்குகின்றன" என்று. நாம்தான் தீர்மானிக்கிறோம்; விதி செயல்படவில்லை; நமது எண்ணங்கள்தான் நம்மை அங்கே கொண்டு வந்து நிறுத்தி இருக்கின்றன. இப்படி ஒரு சிந்தனை.

# புதிய திசைகள்!



## விதி

**நம்** செயலையும் சூழ்நிலையையும் நம் எண்ணங்கள் தீர்மானிக்கின்றனவா அல்லது ஏதோ ஒரு சக்தி - விதி - தீர்மானிக்கிறதா? மேனாட்டினர்

இதை 64 டாலர் கேள்வி (மிகப் பெரிய கேள்வி) என்பார்கள். இங்கேதான் நாம் தெளிவு பெற சில அரிய விஷயங்களை நம் முன்னோர்கள் நம் முன் வைக்கிறார்கள்.

நம்மை மீறிய ஒரு சக்தி செயல்படுகிறது; நம்மை வழி நடத்துகிறது என்பதைத் தெரிந்து கொள்வதற்குக் கூட நமக்கு அந்தச் சக்தியின் அருள், கருணை வேண்டும் என்று "அவனருளாலே அவன்தான் வணங்கி" என்று சொல்லி இருக்கிறார்கள்.

ஏன் சில புத்திசாலிகள், கெட்டிக்காரர்கள், நல்லவர்கள் இப்படி நடந்து கொள்கிறார்கள் - சில சமயம் இப்படி மாட்டிக் கொள்கிறார்கள் என்று நமக்கு வியப்பு ஏற்படுகிறது. "கேடு வரும் பின்னே, மதி கெட்டு வரும் முன்னே" என்றொரு வாசகம் இருக்கிறது. எது நமக்கு நேர வேண்டுமோ அதற்கேற்ப நம் மனமே முதலில் கெட்டுப் போய் விடுகிறது! எப்படி?!




ஒரு இக்கட்டான வாழ்வின் கால கட்டத்தில் மனிதன் செய்வதறியாது தன்னை மறக்கிறான். அங்கே 'துவைதம்' எனப்படும் உலகின் இரட்டைத் தன்மை இல்லை - அதாவது நன்மை தீமை, லாப நஷ்டம், நல்லது கெட்டது என்ற எதுவுமே இல்லை. பரிணாம வளர்ச்சிக்கு எது ஏற்றதோ அதில்தான் நாம் செல்கிறோம்; அல்லது நாம் அழைத்துச் செல்லப் படுகிறோம். அங்கே 'நாம்' என்ற மனிதன் தானாக செல்வதுமில்லை; அங்கே 'பிறர்' என்ற மனிதர் நம்மை அழைத்துச் செல்வதுமில்லை. 'நானு'ம் இல்லை. 'பிறரும்' இல்லை. 'ஏகம்'தான் இருக்கிறது. ஒன்றே ஒன்று. மூலம் எல்லாம் தோன்றுவதற்கு முன் இருந்த மூலம்; உற்பத்தி ஸ்தானம்.

வேறொரு வார்த்தையில் அதைப் பிரபஞ்சலயம் என்று கூறலாம். இந்த உலகமே - இந்த பிரபஞ்சமே ஒரு ஒழுங்கான ஓட்டத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறது. அந்த ஓட்டத்தின் தன்மையில், அதன் அர்த்தத்தில் நாமும் கலந்து விடுகிறோம். அருணகிரிநாதர் இதை மிக அழகாக 'மனோலயம்தானே தரும்' என்கிறார். மனம் ஒரு லயத்தில், ஒரு ஒழுங்கில் தன்னை மறந்து செயல்படுகிறது. அப்போது மனோலயம் என்கிற ஒழுங்கு பிரபஞ்ச லயத்திலே, அதன் பரிணாம வளர்ச்சியிலே ஒன்றி விடுகிறது.

"ஏன் இந்த சிந்தனை எல்லாம்?" என்று நீங்கள் கேட்கக் கூடும். நாம் வாழும் உலகம் இரட்டைத் தன்மை கொண்டது. பொருள்- சக்தி, ஒளி - இருள், நன்மை-தீமை, விருப்பு - வெறுப்பு, பிறப்பு- இறப்பு, நேர் மின்சாரம் - எதிர் மின்சாரம், ஆண் - பெண் என்ற இரட்டைத் தன்மையினால்தான் இவ்வுலகம் ஆக்கப் பட்டிருக்கிறது. அந்த இரட்டைத் தன்மையின் ஒரு அங்கம்தான் 'காரண காரியம்' என்பதும். நமக்கு சில சம்பவங்கள் - நம்மை மீறிய சம்பவங்கள் ஏற்படுகின்றன. இவை நடந்த காரியங்கள். மனமானது இதன் காரணத்தை அறிய முற்படுகிறது. காரணத்தை அறிந்து அதைக் கட்டுப்படுத்தி விட்டால் காரியம் நிகழாது. கெடுதலைத் தவிர்க்கலாம். அதனால்தான் இந்தக் காரண காரிய உலகில் நாம் காரணத்தைத் தேடுகிறோம். எல்லாவற்றையும் நம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர வேண்டுமென்கிற ஆர்வத்தில், வாழ்வில் அர்த்தத்தைத் தேடுகிறோம்; ஏன் வந்தோம் இங்கே என்கிற காரணத்தைத் தேடுகிறோம். என்ன காரணத்திற்காக வந்தோம் என்று தெரிந்தால்தான், வாழ்வைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்ள முடியும்.

எனவே நான் மீண்டும் என் வாழ்க்கைப் பயணத்தை வேறு திசையில் - புதிய திசையில் துவங்க இறங்கினேன். நான் தேர்ந்தெடுத்த புதிய துறை பெட்ரோலிய எண்ணெய் எடுக்கும் தொழில் ஆகும். எனது நண்பர் சங்கர்

ரமணி அதில் இருந்தார். ஸ்டாக் மார்க்கெட்டில் இருந்த நிறுவனத்தை வாங்கி சொந்தமாகத் தொழில் செய்து கொண்டிருந்தார். அவர் படித்த படிப்பெல்லாம் இந்தியாவில் படித்த படிப்புதான். எனினும் அங்கு வெற்றிகரமாக முன்னேறிக் கொண்டிருந்தார். அவரது நிறுவனம் ஸ்டாக் மார்க்கெட்டில் இருப் பதைப் பார்த்து ஆனந்தித்து கனடாவில் இருந்த அவரை போனில் கூப்பிட்டுப் பாராட்டினேன். அடுத்த சில நாளில், விமானத்தில் எங்கள் வீட்டுக்கே வந்து விட்டார் அவர்.

தொழில் செய்யக் கூடிய எல்லாத் துறைகளையும் பார்த்தபோது, இந்த பெட்ரோலிய எண்ணெய்த் துறை 'ஓகோ' என்று போய்க் கொண்டிருந்தது, புலப் பட்டது. எண்ணெய் வளம் கொண்ட அரேபிய நாட்டு அரசர்கள் ஒன்று சேர்ந்து விலையை ஏற்றியதால், எண்ணெய் விலை கிடு கிடென்று ஏறியது. இதனால் எண்ணெய் எடுக்கும் தொழிலில் ஒரு புதிய முயற்சி எங்கும் தோன்றி இருந்தது.

நான் இருப்பதோ அமெரிக்காவின் வடகோடியில் - விஸ்கான்சின் மாநிலத்தில். எண்ணெய் எடுத்த இடங்களோ பெரும்பாலும் டெக்ஸாஸ், லூசியானா என்ற தென்மாநிலங்களில். 1300 மைல் தொலைவு.

தற்செயலாக 'டைம்' பத்திரிகை வெளியிடும் 'பணம்' என்ற பத்திரிகையைப் பார்த்தேன். அதில் எண்ணெய் எடுப்பது சம்பந்தமான தொழில் பயிற்சி - ஆரம்ப பயிற்சி - லாபயெட் என்ற நகரில் அளிக்கப்படுவதாகவும் அந்தப் படிப்புக்கு தொழில் வாய்ப்பு நிறைய இருப்பதாகவும் செய்தி வந்திருந்தது. கூப்பிட்டுக் கேட்டேன். இன்னும் ஒன்பது மாதத்திற்கு வகுப்பிலே இடமில்லை என்று சொல்லி விட்டார்கள்! நான் தளரவில்லை. மீண்டும் கூப்பிட்டேன். அதன் தலைவர் ''வாருங்கள், பார்க்கலாம்!'' என்றார் கடைசியில். நிச்சயமில்லாத நிலை. தெரியாத ஊர்.



"நான் மூன்று தடவை மந்திரியா இருந்திருக்கிறேன். போன தடவை மந்திரியா இருந்தபோது ஊழல் செய்ததா சில பேர் சொல்லிக்கிட்டுத் திரியறாங்க."

''போகட்டும் விடுங்க. அவங்களுக்குத் தெரிஞ்சது அவ்வளவுதான்.''

— என்.வி. ரமணி

எனது புத்தம் புதிய விலை உயர்ந்த காரை எடுத்துக் கொண்டேன். காரின் பின்புறத்தில் தூங்குவதற்கான (Sleeping Bag) ஒரு மிருதுவான ஜமுக்காளப் பையை எடுத்துக் கொண்டேன். சமையலுக்கான சில பாத்திரங்கள், மனைவியிடம் சொல்லிக் கொண்டேன். கையில் கொஞ்சம் பணம். வழி பார்த்து செல்வதற்கு நெடுஞ்சாலை 'மேப்'. அவ்வளவுதான்! பயணம். புதிய திசையை நோக்கி. வாழ்க்கைப் பயணம்! இரண்டு நாள் காரில் பயணம். அந்த ஊருக்குப் போய்ச் சேர்ந்தபோது இருட்டி விட்டது. இரவு மணி ஒன்பது. எங்கு கேட்டாலும் ஓட்டலில் இடமில்லை என்ற செய்திதான். ஒரு ஹோட்டலில் அதன் நிர்வாகி சொன்னார். "ஒரே ஒரு அறை இருக்கிறது; மாடியில். ஆனால் கிழே இரவு பூராவும் நடனம், இசை 'டிரம்' என்று ஒரே சத்தம் இருக்கும். உன்னால் தூங்க முடியுமென்றால் எடுத்துக் கொள்!" என்றார். வேறு வழி? எடுத்துக் கொண்டேன். 1300 மைல்கள். கார் ஓட்டிய களைப்பு. படுத்ததுதான் தெரியும்.

நமது ஊர் I.T.I போன்ற நிறுவனத்தினரால் தரப்படும் பத்து வாரப் பயிற்சி. பாடம் என்பது மிகக் கொஞ்சம். எல்லாமே நேரடிப் பயிற்சி. ஒரு பெரிய 130 அடி உயரமுள்ள 'ரிக்' எனப்படும் எண்ணெய்க்காக பூமியைத் துளைக்கும், துரப்பண இயந்திரம்தான் பயிற்சிக்கூடம்.

அமெரிக்கர்களை மிகவும் பாராட்ட வேண்டும். இங்கே கர்னல் டிரே என்பவர் பூமிக்கடியில் உப்புப் பாளை இருக்கிறதா என்று துரப்பணம் போட்டபோது பெட்ரோலிய எண்ணெய் வந்தது. கொஞ்சங் கொஞ்சமாக பெட்ரோலிய எண்ணெயின் உபயோகத்தைக் கண்டுபிடித்தார்கள். இன்று

எண்ணெய் எடுக்கும் தொழில் நுட்பத்தில் அமெரிக்கர்கள் செய்திருக்கும் சாதனை மிகப் பெரியது. அவர்கள் எதிலும் சும்மா இருக்க மாட்டார்கள். மேலே, மேலே என்று போய்க் கொண்டிருப்பவர்கள். முன்னிலும் மேம்பட்டதாக, மேம்பட்டதாக என்று அவர்கள் எதையுமே சிந்திப்பவர்கள், ஆராய்பவர்கள், செயல்படுபவர்கள். அதுதான் அவர்களை உயர்த்தியிருக்கிறது.

எங்கள் கும்பலில் ஓரிருவர் பட்டம் பெற்றவர்கள். மற்றவர்கள் பத்தாவது, எட்டாவது, ஆறாவதுதான். நான் மட்டுமே மேல் படிப்பு படித்தவன். யாரும் இதை வித்தியாசமாக எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் இந்தியர்கள் தங்கள் அந்தஸ்தைப் பற்றிய அதிகம் நினைவு கொண்டவர்கள் – தற்பெருமை கொண்டவர்கள் – என்று விஷயம் தெரிந்த அமெரிக்கர்கள் சொல்வார்கள். இதேபோலத்தான் யூதர்களையும் சொல்வார்கள். அதே போல' இந்தப் பயிற்சிக்கூடத்தில் அங்கு பழகுவதிலும், பாடம் படிப்பதிலும் இந்த மனோபாவம் என்னிடமும் இருந்தது, சில நாள், சுய பச்சாதாபமும் ஏற்பட்டது என் மேல். எல்லாம் இரண்டு மூன்று நாட்கள்தான். அதன் பிறகு வண்டி "ஜே ஜே" என்று ஓடத் துவங்கியது. "ஒரு புதிய துறையின் அடிப்படை'களை எல்லாம் நாம் கற்றுக் கொண்டால் பின்னால் யாரும் நம்மை அசைக்க முடியாதல்லவா?" என்ற எண்ணம்தான் ஓடிக் கொண்டிருந்தது. அது மகிழ்ச்சி தந்தது. வாழ்வில் இதுவரை, இப்படி, எதையும் சமாளிப்பவனாகவே தான் இருந்து வந்திருக்கிறேன். இதைப் பெருமையாக நானே எண்ணிக் கொண்டேன்.

ஒருநாள் வேறுவிதமான ஒரு பயிற்சி. எண்ணெய் எடுக்கும் யந்திரக் கோபுரத்தின் மீது ஏறி அங்கே இருக்கும் சிவப்பு மின் விளக்கின் 'பல்பை'க் கழற்றி விட்டுப் புதிய ஒன்றை அங்கே இருக வேண்டும். எண்ணெய்த் துரப்பண கோபுரமோ 120 அடி உயரம். அதில் ஏற ஒரு அடி அகலத்தில் கம்பிகளாலான படிகள். ஏறுவதற்குக் கைப்பிடிகள் ஏதும் கிடையாது. மேலே இருக்கும் படிகளைத்தான் பிடித்துக் கொள்ள வேண்டும். நானோ, கூரை ஏறி கோழி பிடிக்கத் தெரியாதவன்! அதாவது பனிக்காலத்தில் எங்கள் வீட்டுக் கூரை சுமந்து கிடக்கும் பனித் திரள்களையே கூரை மேலேறித் தள்ளியவனல்ல. இப்போது அந்தரத்தில், வானை நோக்கி வைக்கப் பட்டிருக்கும் ஏணியில் ஏற வேண்டும். ஏறிய பின் இரண்டு கைகளும் பிடிப்பை விட்டு விட்டு பல்பை எடுத்து மாற்ற வேண்டும். ஏணியில் இடுப்பு சாய்ந்திருப்பது ஒன்று தான் ஆதாரம்.

ஏறவே எனக்கு 20 நிமிடம் ஆயிற்று. கீழே பார்த்தால் அதல பாதாளம். காலை அடுத்தப் படியில் எடுத்து வைக்கும்போது, பயத்தினால் உறைந்து போயிற்று! ஆனால் கீழே இருந்தவர்களோ நேரம் எடுத்துக் கொள்கிறேன், மெதுவாக ஏறுகிறேன் என்று என்னைத் திட்டிக் கொண்டிருந்தார்கள்.




பயிற்சி முடிந்து பட்டயம் கொடுத்தார்கள். பத்திரிகையில் ஒரு விளம்பரம் வந்தது. ஒரு பெரிய உள்ளூர் எண்ணெய்த் தொழிலில் ஈடுபட்டிருந்த ஒரு நிறுவனத்திற்கு அதன் ஆராய்ச்சிப் பிரிவில் தலைமை ஏற்க ஆள் தேவை என்ற விளம்பரம். விண்ணப்பித்தேன். அதன் தலைவர் முன்னாள் பேராசிரியர், ஒரு அருமையான எண்ணெய் சம்பந்தமான ரசாயனத் தொழிலை வேகமாக வளர்த்திருந்தார்.

இந்தத் தொழிலைத் தெரிந்து கொள்வதற்காக அதன் ஆரம்பப் பயிற்சியை நான் எடுத்துக் கொண்டிருக்கிறேன் என்கிற விஷயம் அவர் கண்ணில் பட்டது. "இது நல்லது" என்றார். சேர்மன், பிரசிடெண்ட் என்ற நிலைக்கு அடுத்த நிலையில் 48 ஆயிரம் டாலர் சம்பளத்தில் நான் நியமிக்கப்பட்டேன்.

(தொடரும்)

## ஜூலை 22 முதல் 28 வரை

**மேஷம் :** (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

எல்லா கிரகங்களும் உங்களுக்கு சப்போர்ட் பண்றப்போ என்னங்க கவலை? மனகல துணிச்சலும் நம்பிக்கையும் பிறக்கும். இது போதாதா! பொருளாதாரப் பிரச்னை இருக்காது. வீட்டுல விருந்து கேளிக் கைன்னு சந்தோஷம் கொப்புளிக்கும். மத்தவங்க பாராட்டற மாதிரியான செயல்களைச் செய் வீங்க. ரியல் எஸ்டேட் மாதிரியான விஷயங் களும் உங்களுக்குச் சாதகம்தான். அரசியல்வா திங்க மட்டும் இந்த வாரம் சில முக்கியமான தீர்மானங்களை எடுக்க வேண்டியிருக்கும். ஆபீஸ் போறவங்க மேலதிகாரிகள் கிட்ட பணி வா நடந்துக்கறது நல்லது.

**ரிஷபம் :** (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

உங்க திறமை, முக வசீகரம், பேச்சாற்றல், துணிவு எல்லாமே இந்த வாரம் துலக்கி வெச்ச வெண்கலப் பானை மாதிரி பளிச்சினு தெரியும். பெரியவங்க ஆதரவு உங்க பக்கம்னா, எதிரிங்க மூச்சுக் காட்ட முடியுமா? கால்கட்டுப் போடற வயசில இருக்கறவங்களுக்கு அதுக்கான வேலை கள் ஆரம்பமாகும். பெண்களுக்கு இந்த வாரம் ஷாப்பிங் யோகம் அமோகமா இருக்கு. பிள்ளைங்களால பெத்தவங்களுக்குப் பெருமை கூடும். இருந்தாக்கூட நீங்க ரொம்பவும் ஜாக் கிரதையா இல்லேன்னா குடும்பத்துல தேவை யில்லாத மனஸ்தாபம் வர சான்ஸ் இருக்கு. பயணம் போறவங்க ஜாக்கிரதையா இல்லேன்னா, எதையாவது திருட்டுக் கொடுக்க வேண்டியிருக்கும்.

**மிதுனம் :** (மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)

இந்த வாரம் பணம் தாராளமாப் புழங்கும்; குடும்பத்துல சுப காரியங்கள் நடக்கும்; உங்க மதிப்பும் கௌரவமும் உயரும்; நீங்க போட்டிருக்கிற திட்டங்களெல்லாம் வெற்றி பெறும்; கொடுக்கல், வாங்கல், ஸ்பெகுலேஷன்னு எல்லாத்துலயும் ஆதாயமே கிடைக்கும். கூடப் பிறந்தவங்க, பிரண்ட்ஸ்ங்க எல்லாமே உங்க ளுக்கு உதவி செய்வாங்க. இப்படி எல்லாமே உங்களுக்குச் சாதகம்தாங்க. கவிஞர்கள்லேர்ந்து, வியாபாரிகள் வரை அத்தனை துறைகள்ல இருக் கறவங்களுக்குமே ஜோரான வாரம் இது.

**கடகம் :** (புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)

குருவோட பார்வையால உங்க புத்திசாலித்தனம் பளிச்சினு வெளிப் படும். எடுக்கற முயற்சிகள் நிறைவேறும். பண விஷயத்திலும் பிரச்னை இருக்காது. கல்யாண ப்ராப்தி ஏற்படும். வெளிநாட்டுலேர்ந்து நல்ல சேதி சிலருக்கு வரும்னா, சிலருக்கு வெளிநாடு போறதுக்கான சான்ஸ் வரும். பெண்கள் நெனச் சதை சாதிச்சிடுவாங்க! இருந்தாலும் குடும்பத் துல சின்னச் சின்னப் பிரச்னைகள் வந்து போகும். வீண் செலவுக்கும் மனஸ்தாபத்துக்கும் பிரயோஜனம் உண்டுன்னாலும் ஜாக்கிரதையா இருங்க.

**சிம்மம் :** (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

உங்களுக்கு எதிரிங்க உண்டுன்னாலும் அவங்களை எதிர்த்துச் சமாளிக்கிற துணிச் சல் ஏகத்துக்கு வந்து சேரும். உத்தியோகஸ்தர் களுக்குப் பாராட்டு கிடைக்கும். போலீஸ், மிலிட் டரியில இருக்கறவங்களுக்கு மெடல் மாதிரி ஏதாவது கிடைக்கும். கவனமா செயல்பட்டா வீடுநிலம், ரியல் எஸ்டேட் விஷயங்கள்ல லாபம் கிடைக்கும். குடும்பத்துல செலவுகள் அதிகமா கும். பயப்படாதீங்க, எல்லாம் சுப காரியங்களுக் கான செலவுகள்தான்! புது ஆட்கள் கிட்ட கவனமா பழகுங்க. தெரிஞ்சவங்களா இருந்தாக் கூட வீண் விவாதத்துல இறங்கிடாதீங்க. கொடுக்கல் வாங்கல், ஸ்பெகுலேஷனுக்கு இந்த வாரம் தோதுப்படாது.

**கன்னி :** (உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)

முக்கியமான செயல் திட்டங்கள், ரொம்ப நாளா நிறைவேறாத ஆசை ஏதும் இருந்தா இந்த வாரம் ஜாம் ஜாம்னு நிறைவேறிடும். சிந்தனை யாளர்களுக்கு இது உற்சாகமான வாரம். தொழில் அதிபர்களுக்கு வளர்ச்சி நிச்சயம். மத்த வங்களோட ஆதரவால உங்களுக்கு ஆதாயமும் கிடைக்கும். எதிர்பாராத வகைல சாதனை ஏதும் நிகழ்த்திக் காட்டி அசத்துவீங்க. உத்யோகஸ்தர் களுக்குப் பதவியுயர்வும் புதிய பொறுப்புகளும் வந்து சேரும். இளைஞர் - இளைஞிகளுக்கு டும் டும் ஏற்பாடுகளும் நடக்கும். வெளி தேசத்தி லேர்ந்தும் நல்ல சேதி வந்து குஷிப்படுத்தும்.

# நடக்குமென்பார்,

**மீன ராசிக்காரரான குழந்தை எழுத்தாளர் ரேவதி இந்த வாரம் 'முருகா!'ன்னு இருக்கணுமாம்.**

# நடக்கும்!

**துலாம்** : (சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)

இதுவரை தள்ளிப் போய்க்கிட்டே வந்தது பாருங்க ஒரு விஷயம்! அதுக்கு இந்த வாரம் ஒரு தீர்வு கிடைச்சுடுங்க. அதுவும் உங்களுக்குச் சாதகமா! ஆனாலும் ஸ்பெகுலேஷன் மாதிரியான விஷயங்கள் உங்களுக்குக் கை குடுக்காது. மனசுல சின்னச் சின்ன குழப்பங்கள் வர்றதுக்குச் சான்ஸ் இருக்கு. உங்க நண்பர்கள் உங்களுக்கு உதவ மாட்டாங்கன்றது மட்டுமில்லே, சிலர் உங்களுக்கு எதிராவும் திரும்பலாம். அதனால யாருகிட்டயும் எதையும் வெளிப்படையாப் பேசாம இருக்கறதுதான் நல்லது. புரமோஷன் விஷயத்தில சிலருக்கு ஏமாற்றம் வரலாம். புதிய முயற்சி ஏதும் இருந்தா அதை இந்த வாரம் தொடங்காதீங்க.

**விருச்சிகம்** : (விசாகம் 4 - ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)

அஞ்சுல குருவும் ஆறுல சனியும் உங்களுக்கு அனுகூலமா இருக்கறதால உங்களோட புத்திக் கூர்மையும் செயல்திறனும் மின்னல் மாதிரி பளிச்சிடும். மறு பக்கம் எட்டுல செவ்வாய் இருக்கறதால, மனசுல சஞ்சலம், எடுத்த காரியத்துல தாமதம், அலைச்சல் எல்லாமே ஏற்படும். இருந்தாக்கூட குருவின் பார்வை உங்களுக்கு சப்போர்ட் பண்றதால எது வந்தாலும் சமாளிச்சிடுவீங்க. முக்கியமானவங்களோட ஆதரவு சமயத்துல கைகொடுக்கும். குடும்பத்துல சில பிரச்னைகள், சலசலப்புகள் வந்து போவதைத் தடுக்க முடியாது. எதுலயும் ஜாக்கிரதையா செயல்பட்டீங்கன்னா சில திடீர் மாற்றங்களுக்கு சான்ஸ் இருக்கு.

**தனுசு** : (மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)

கேதுவும் புதனும் உங்களுக்கு அனுகூலமா இருக்கறதால உங்க செல்வாக்கும் மதிப்பும் உயரும். இதுவரைக்கும் இருந்துக்கிட்டிருந்த எதிர்ப்புகளெல்லாம் குறையும். காண்ட்ராக்டர், கமிஷன் ஏஜெண்டுகளிலேர்ந்து கதாசிரியர்கள் வரைக்கும் வளர்ச்சிக்கான பாதைகளே தெரியும். வெளிநாட்டுலேர்ந்து நல்ல சேதியும் கூடவே லாபமும் வரும். நண்பர்கள் மட்டுமில்லாம புதுசாப் பழக ஆரம்பிச்சவங்க கூட உங்களுக்கு ஒத்தாசையா இருப்பாங்க. ஆனாலும் ஐந்தில் சனி சஞ்சரிக்கறதால மனசுல ஏதோ ஒரு குழப்பமும் சஞ்சலமும் தோன்றவே செய்யும்.

**மகரம்** : (உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)

செவ்வாயும் சுக்கிரனும் உங்க பக்கம் இருக்கறதால உங்களோட திட்டங்களெல்லாம் நிறைவேறுவதற்கான சான்ஸ் கைகூடி வரும். எதிர்ப்புங்க இருந்தா குறையும்; இல்லேன்னா அதைச் சமாளிக்கிற துணிச்சல் வரும். கோர்ட், கேஸ், போட்டி, பந்தயம் எதுவானாலும் இந்த வாரம் ஒரு நல்ல திருப்பத்தை உணருவீங்க. இயந்திரம் சம்பந்தப்பட்ட தொழில் செய்பவர்களுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் ஜோரான வாரம். பொருளாதார விஷயத்துல எல்லோருமே எச்சரிக்கையா இருக்கறது நல்லது. மனைவியின் உடல் நலத்துல அக்கறை காட்டுங்க.

**கும்பம்** : (அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)

எடுத்த காரியத்திலெல்லாம் ஜெயிக்கறது மாத்திரமில்லீங்க; மத்தவங்க உங்களை ஓஹோன்னு பாராட்டும்படியாவும் நடந்துக்குவீங்க. பணப் பிரச்னை எதுவும் இந்த வாரம் இருக்காது. கொடுக்கல் வாங்கல் சமாசாரங்களும் உங்களுக்குச் சாதகமாவே இருக்கும். குடும்பத்தில் சந்தோஷம் பொங்கும். ஆனாக்கூட சந்தோஷ மூடுல உங்க லைஃப் பார்ட்னர் கிட்ட ரொம்பவும் ஆர்கியூ பண்ணிடாதீங்க. அதால பிரச்னைங்க வந்தாலும் வரும்! குடும்பத்துல கல்யாணப் பேச்சுக்கு நிறைய சான்ஸ் இருக்கு. சிலருக்குக் கோயில் குளம்னு போற வாய்ப்பும் இருக்கு.



**மீனம்** : (பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

சுக்கிரனும் ராகுவும் தவிர, மத்த கிரகங்களோட பார்வை இந்த வாரம் உங்களுக்கு இல்லீங்க. இதால செலவுங்க ஜாஸ்தியாகும்; கடன் கூட வாங்க வேண்டியிருக்கும். 'இல்லானை இல்லாளும் வேண்டாள்' இல்லீங்களா! அதனால குடும்பத்துல குழப்பம், மனஸ்தாபம் எல்லாமே வரும். பக்கத்து வீட்டுக்காரங்க கூட உங்க கூட சண்டை போடறதுக்கு சான்ஸ் இருக்கு. இந்த நிலைல நீங்க எந்தக் காரியத்துல ஈடுபட்டாலும் எப்படி அது சரியா வரும்? எல்லாத்தையும் இந்த வாரம் ஏறக்கட்டிட்டு 'முருகா!'ன்னு இருக்கறது தான் நல்லது. வெகிக்கிள் ஓட்டினாக் கூட ஜாக்கிரதையா இருங்க.

அக்னி சர்மா பக்கம்

மறுபடியும் ஐ.ஏ.எஸ். மலைச்சாமி, பரபரப்பேற்படுத்தியிருக்கிறார். இந்த முறை மாநில தேர்தல் ஆணையர் பதவி நீட்டிப்பு மறுக்கப்பட்டு, இவருக்குப் பதிலாக ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ் அதிகாரி சிவசுப்ரமணியம் அப்பதவிக்கு நியமிக்கப் பட்டிருக்கிறார்.

மலைச்சாமிக்கும், மாநில அரசுக்கும் சில காலமாகவே உரசல் இருந்து வந்தது தெரிந்ததே. "மாநில அரசுடனான நெடுநாளைய உரசலின் கிளைமாக்ஸ்தான் இந்தப் பதவி நீட்டிப்பு மறுப்பா?" என்று அவரைக் கேட்டோம்.



• மலைச்சாமி

"மாநில தேர்தல் ஆணையம் என்பது அரசியல் அமைப்பின்பாற்பட்ட ஒரு அமைப்பு. இது சுதந்தரமாக, சுய ஆட்சித் தன்மையுடன் நேர்மையான, முறையான வகையில் தேர்தல்களை நடத்திட வேண்டும். தமிழகத்தின் அனைத்துக் கட்சிகளுக்கும், பொதுமக்களுக்கும் பாரபட்சமின்றி அந்த அமைப்பு நடந்து கொள்ள வேண்டும். இப்படி நடக்க வேண்டுமானால் சுதந்தரமாய் செயல்பட வேண்டுமானால், அந்தப் பதவியில் இருப்பவரை இரண்டாண்டுக்கு ஒரு முறை மாற்றி நியமித்தால், எப்படி இதைச் செய்ய முடியும்? இரண்டாண்டு முடிந்தவுடன், அடுத்த இரண்டாண்டுக்கு ஆளும் அரசாங்கத்தை எதிர்பார்த்து, கைகட்டிக் கொண்டல்லவா இருக்க வேண்டும்? இப்படிப்பட்ட ஒரு சட்டம் தேர்தல் ஆணையத்தின் கௌரவத்தைத் தரைமட்டமாக்கக் கூடியது. எந்த மாநிலத்திலுமே இது போல, இரண்டாண்டுக்கு ஒருமுறை என்பது இல்லாத ஒன்று. தமிழகத்தைப் பொறுத்தவரை, மாநிலத் தேர்தல் ஆணையராக நியமிக்கப்படுகிறவர் ஆறு ஆண்டுகள் தொடர்ந்து பதவி வகிக்கலாம் அல்லது 62 வயது வரை இருக்கலாம். அதே நேரத்தில் இரண்டாண்டுக்கு ஒரு தடவை நியமன உத்தரவு வழங்கும் அதிகாரத்தை அரசு வைத்திருக்கிறது.

# "அரசியலிலா?



"என்னைப் பொறுத்தவரை, இன்னும் ஓராண்டு வரை பணிபுரியும் வயதும், தகுதியும் இருந்தும் கூட நியமன உத்தரவு வழங்கப்படாமல், இன்னொருவரை நியமித்திருப்பது, எனக்குத் தனிப்பட்ட முறையில் இழைக்கப்பட்ட அநீதி என்பதைவிட, அந்தப் பதவிக்குச் செய்யப்பட்ட அவமதிப்பாகக் கருதுகிறேன்! இரண்டாண்டுக்கு ஒருமுறை தனக்கு வேண்டியவர்களை நியமித்துக் கொள்ளலாம் என்ற அதிகாரம் அரசுக்கு இருக்கும் வரை உள்ளாட்சித் தேர்தல்களில் எதிர்பார்க்கும் நேர்மையும் முறையும் இனி நடக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை."

"இந்த சட்டம் முந்தைய அரசுக் காலத்தில் போடப்பட்டதுதானே?"

"எந்த அரசு போட்டாலும், இது தேர்தல் ஆணையாளரைக் கொத்தடிமையாக்கும் சட்டம்தான். இதை மாற்றக் கோரி, முந்தைய அரசிடமும் சரி, இந்த அரசிடமும் சரி போராடியிருக்கிறேன். இது சம்பந்தமாக சட்டத்திருத்தம் தேவை என்று முன்மொழிவுகளும், கடிதங்களும் எழுதியிருக்கிறேன். நான் பதவி வகித்த காலத்தில், எனக்குச் சரியெனப்பட்டதை நான் செய்தேன். இப்போது பதவி நீட்டிப்பு வழங்காததற்கு அது கூட ஒரு காரணமாய் இருக்கலாம்!"

> **"இது தேர்தல் ஆணையாளரை கொத்தடிமையாக்கும் சட்டம்தான். இதை மாற்றக் கோரி, முந்தைய அரசிடமும் சரி, இந்த அரசிடமும் சரி போராடியிருக்கிறேன். இப்போது பதவி நீட்டிப்பு வழங்காததற்கு அது கூட ஒரு காரணமாய் இருக்கலாம்!"**

"இந்த விஷயத்தில் கடைசி தினம் வரை சஸ்பென்ஸ் வைக்கப்பட்டதன் பின்னணி என்ன?"

"உண்மையான பின்னணி எனக்குத் தெரியவில்லை. ஒருவேளை, முன்கூட்டியே ஆணை கிடைத்திருந்தால், சட்டப்படி நீதிமன்றத்தை அணுகி, அரசின் முயற்சியை முறியடித்து விடுவேனோ என்று அச்சப்பட்டிருக்கலாம்."

"அடுத்து உங்கள் திட்டம் என்ன? அ.தி.மு.க.வில் சேரப்போவதாய் கூறப்படுகிறதே?"

"உடனடியாய் திட்டம் ஏதுமில்லை. என்னுடைய பொது நிர்வாகம் சம்பந்தப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரை வேலை ரொம்ப நாளாய் தள்ளிப் போய்க் கொண்டே இருக்கிறது. அதை விரைவில் முடிக்க வேண்டும். தவிர இப்போதே, பல பொதுநல அமைப்புகளில் இருந்து கொண்டிருக்கிறேன். உடல் நலமும், உள்ள நலமும் நன்றாகவே இருக்கிறது. 25 வயது இளைஞரைப் போல துடிப்பு இருக்கிறது. இந்தப் பரந்து, விரிந்த உலகில் நிறைய பணியாற்றலாம் என்ற உணர்வு நிறையவே இருக்கிறது. காலத்தையும், சந்தர்ப்பத்தையும் பயன்படுத்துவேன். ஆனால், அரசியல் பக்கம் என்னை வரச் சொல்கிறீர்களே! ஐயையோ!"

சந்திப்பு : **மௌலி**

# னா? ஐயையோ!"

# அடுத்தவருக்குக் குடை பிடிக்கும் கலைஞர்!

ஒரு கல்யாண ரிஸப்ஷனுக்குப் போயிருந்தேன். பெரிய மண்டபம். நிறைய பட்டுப் புடைவை, இருபது, இருபத்தஞ்சு சுடிதார், ரெண்டு ஜீன்ஸ், ஏழெட்டு வேஷ்டி, மிச்சமெல்லாம் பேன்ட்-ஷர்ட்.

வாழ்க்கைல இருக்கற கஷ்டங்களையெல்லாம் மறந்து, மக்கள் என்ன உற்சாகமா பேசறாங்க! அலுக்காம, சலிக்காம அரசியல்லேருந்து ஆபீஸ் விஷயம் வரைக்கும் ஏக காலத்துல நூறு விதக் குரல்கள் காதுல விழறதை நுணுக்கமா எப்பவாச்சும் கவனிச்சி கேட்டிருக்கீங்களா? கொஞ்ச நேரம் பேச்சு கேட்கும். கவனிச்சிட்டே இருந்தா மொழி கரைஞ்சு போய், வெறும் சப்த அலையா மாறிடும். அந்த Turning point ரொம்பப் பிரமாதமா இருக்கும். ஒரு கட்டத்துல சப்தமே ஒரு நூதனமான ம்யூஸிக் போலவும் கேட்கும். சட்டுனு கல்யாணம் முடிஞ்சி எல்லாரும் வீட்டுக்குப் போனப்புறம் அந்த காலி மண்டபத்துல ஒரு ரெண்டு நிமிஷம் தனியா நின்னு பாருங்க. அப்பவும் அமானுஷ்யமா அந்த சப்தம் கேட்கும்! ரொம்ப ஜோரா இருக்கும்.

பெரும்பாலும் கல்யாண ரிஸப்ஷன்கள்ல கச்சேரி வெச்சா யாரும் கேட்கறதில்லை. குறிப்பா கர்நாட்டிக் ம்யூஸிக். பாடகர், அவர் பாட்டுக்குப் பாடுவார். வயலினிஸ்ட் தனியா ஒரு ட்ராக்ல போயிட்டிருப்பார். யாராவது ரெண்டு ஸீனியர் ஸிட்டிஸன்ஸ், ''நன்னு பாலிம்ப பாடுங்க; நாதலோலுடை பாடுங்க''ன்னு சீட்டு குடுத்து விட்டுட்டு, ''முழங்கால்ல மூணு நாளா வலி''ன்னு பேசிட்டிருப்பாங்க. பாடகர் அந்தப் பாட்டைப் பாடறாரான்னு கூடக் கவலையில்லை. சீட்டு குடுக்கறதோட சாப்டர் க்ளோஸ்.

But, நான் போன ரிஸப்ஷன் கொஞ்ச வேற மாதிரி. ஒரு வயலின் ஒரு மிருதங்கம்னு குறைந்த பட்ச பக்கவாத்தியங்களோட மேடைல உட்கார்ந்திருந்தவர், விஜய் சிவா. (கே.பி. மாதிரி டைரக்டர்ஸ் ஏதாவது ம்யூஸிகல் சப்ஜெக்ட்ஸ் எடுத்தா இவரை ஹீரோவாக்கிடலாம்.)

அதிபயங்கரப் பக்குவம் வந்தாலே ஒழிய கல்யாண ரிஸப்ஷன் களேபரத்துல உட்கார்ந்து பாட முடியாது. ரொம்பப் பிரமாதமா பாடிட்டிருக்கறப்ப, அப்பப்டா பத்து பேர், சாப்பிட எழுந்து போவாங்க. குழந்தை ஒண்ணு மெனக்கெட்டு முன்னால வந்து, 'வே...'ன்னு உச்சஸ்தாயில சுருதி பிடிக்கும். பொதுவா இந்த மாதிரி ரிஸப்ஷன்ல பாடறவங்க கண்ணை மூடிட்டுத்தான் பாடுவாங்க.

ஆனா, அன்னைக்கு விஜய் சிவா கண்ணைத் திறந்துட்டுப் பாடினது மட்டுமில்லை; வரிக்கு வரி தானே ரசிச்சி அனுபவிச்சி, முகத்துல ஒரு ஸ்மைலோட, ஒவ்வொரு முகத்தையும் பார்த்துப் பார்த்து பாடிட்டிருந்தார். எனக்கு ரொம்ப ஆச்சர்யம். ஒரு முகச்சுளிப்பு? சலிப்பு? ம்ஹூம்!

ஒரு டீ குடிக்கறதைக்கூட கலையழகோட ரசிச்சி, அதிலேயே மூழ்கி, கரைஞ்சு போய்க் குடிக்கறதைப் பத்தின ஜென் தத்துவத்தை ரஜனீஷ் அடிக்கடி சொல்லுவார்; எழுதுவார். டீ குடிக்கிறப்போது, க்ளாஸ்மேல கூட கவனம் போகக் கூடாதுன்னு. விஜய் சிவா கச்சேரி, அன்னிக்கு எனக்கு அதைத்தான் ஞாபகப்படுத்தியது.

பாரதின்னு எனக்கொரு ஃப்ரெண்ட். அவங்க ஒரு சமாசாரம் சொன்னாங்க. அவங்க குடியிருக்கற ஃப்ளாட்டுக்கு எதிரே ஒரு குடித்தனம். புருஷன், பெண்டாட்டி, குழந்தைகள் ப்ளஸ் அந்தாளோட அம்மா.

Made for each other ஜோடின்னா அவங்க ரெண்டு பேரைத்தான் சொல்லணும்னாங்க பாரதி. அவ்ளோ அன்பாம் ஒருத்தர் மேல் ஒருத்தருக்கு. கல்யாணம் ஆகி, கிட்டத்தட்ட பதினஞ்சு வருஷமாகியும் இன்னும் வெட்டிங்டேவை தீபாவளி மாதிரி கொண்டாடறாங்களாம். சொந்தக்காரங்களுக்கெல்லாம் ட்ரெஸ் வாங்கிக் குடுத்து யாராச்சும் வெட்டிங்டே

கொண்டாடிப் பார்த்திருக்கீங்களா? இங்கே நடக்குது! இது வரைக்கும் ஒருநாள் கூட அவங்க சண்டை போட்டுப் பார்த்ததே இல்லைன்னாங்க பாரதி.

"But ஒரு நம்ப முடியாத விஷயம் தெரியுமா சுமி? அந்த ஒய்ஃபுக்கும் அவங்க மாமியாருக்கும் பேச்சு வார்த்தையே கிடையாது. ஒரு தெரு நாயை நடத்தறதை விடவும் கேவலமாகத்தான் அந்த வயசான கிழவியை இவங்க நடத்துவாங்க! ஊருக்கெல்லாம் அன்பா இருக்கற ஒரு லேடி, மாமியார்கிட்ட மட்டும் அந்த அன்புல அரை பர்ஸன்ட் ஏன் காட்ட முடியலை? இன்ஃபாக்ட், அந்தக் கிழவி ஒரு அப்பிராணி. ஒரு வார்த்தை தப்பா பேச



மாட்டாங்க. மருமகள் ஆபீஸ் போயிட்டு வரதுக்குள்ள சமையல் முடிச்சிட்டு, வர்றவளுக்கு காப்பி போட்டு ரெடியா வெச்சிருப்பாங்க..."

நான் கேட்டேன், "அவங்க ஹஸ்பெண்ட் ஒண்ணும் கேக்கறதில்லையா?"

ம்ஹூம்! தலையிடவே மாட்டாராம்!

"சாகற வயசுல அந்தக் கிழவிக்கு ஒரு சின்ன சந்தோஷம் கூடத் தராம இவங்க ஊரைக் கூட்டி வெட்டிங் டே ஸெலிப்ரேட் பண்ணி என்ன பிரயோஜனம்? அந்த ஆள் எவ்வளோ நல்லவனா இருந்தாலும் நான் அவனை வெறுக்கறேன்"- பொருமித் தீத்துட்டாங்க பாரதி.

கன்னித்தீவும் காவிரிப் பிரச்னையும் முடியறதுக்குள்ளவாவது பாரதி சொன்ன அந்தக் கிழவிக்கு ஒரு விடிவு பிறக்கப் பிரார்த்தனை செய்யறேன். வேற வழி?

**த**ன் குடையை அடுத்தவங்களுக்குப் பிடிக்கற ஒரு கவிஞரை ரீஸன்டா கண்டு பிடிச்சேன்: அப்துல் ரகுமான்.

நாட்டுல இருக்கற பல மொழிக் கவிஞர்களோட சிறந்த கவிதைகளைத் தேடிப் பிடிச்சி, மொழி பெயர்த்து, அங்கங்க நயம் சொல்லி, தமிழ் வாசகனுக்கு அறிமுகப் படுத்தி, கவிதையை எப்படி ரசிக்கறதுன்னு சொல்லித் தரார் அப்துல் ரகுமான்.

ரகுமானோட 'அவளுக்கு நிலா என்று பெயர்' புஸ்தகத்துல என்னைக் கவர்ந்த ஒரு உருதுக் கவிதையின் ஒரு பகுதி:

ஒரு வேதனை இருந்தது
அமைதியாக அதைப் புகைத்தேன்
ஒரு சிகரெட்டைப் போல்.
சில பாடல்களை உதிர்த்தேன்
சிகரெட்டின் சாம்பலைப் போல்

..............................

..............................

சிகரெட் எரிந்து முடிந்தது
என் காதலின் மணத்தை
நீ கொஞ்சம் உள்ளிழுத்தாய்
மீதி காற்றில் கலந்தது.
இதோ துண்டு! தூர எறிந்துவிடு.
என் காதல் நெருப்பு
உன் விரல்களைச் சுடாமலிருக்க!

(அம்ரிதா ப்ரீதம்)

**கா**ர்ப்பரேஷன் ஆசாமிங்க எப்படி வேலை செய்யறாங்கங்கறதப் பத்தி ஒரு ஜோக்.

ரோடு ஓரமா ஒருத்தன் குழி வெட்டிட்டே போனான். பின்னாலேயே ஒருத்தன் மண்ணைப் போட்டு அந்தக் குழிகளை மூடிட்டே போனான்.

"என்ன பைத்தியக்காரத்தனம்?"னு ஒருத்தன் கேட்டானாம். அதுக்கு அந்த ஆளுங்களோட பதில்:

"எங்களுக்கு மரம் நடும் வேலை குடுத்தாங்க. நான் குழிவெட்டணும். இன்னொருத்தன் நடணும். இவன் மூடணும். ஆனா, நடற வேலை செய்யறவன் இன்னிக்கு லீவ்."

— சுமி



படம்: யோகா

# வாழ்க மணமக்கள்!

**மணமகன்: விச்வநாதன்**

**கல்கி நிறுவனத்தின் தலைமை நிர்வாக அதிகாரி வி. கோபாலனின் மகன்.**

**மணமகள்: உமா மகேசுவரி**

**கும்பகோணம் கே. முத்துசுவாமியின் மகள்**

விச்வநாதன் – உமா மகேசுவரி திருமணம் 15.7.98 அன்று சென்னை மீனாக்ஷி திருமண மண்டபத்தில் கோலாகலமாக நடந்தது. மணவிழாவுக்கும் மாலை வரவேற்புக்கும் ஏராளமான பிரமுகர்களும் நண்பர்களும் கல்கி அன்பர்களும் வந்திருந்து வாழ்த்தி மகிழ்ந்தனர். வரவேற்பில் விஜய் சிவா இன்னிசை விருந்து வழங்கினார்.

### 'இளைப்பா'றுதல்

அண்மையில் 'தாஜ்'ஜில் நடந்த 'ஹீரா நந்தானிக்'காரர்களின் வீட்டு திருமண ரிஸப்ஷனில் தாக்கரே காணப்பட்டார்- பத்திரிகையாளர்களிடம் விளையாட்டாக, "அம்மா பெருத்துக் கொண்டே போகிறார்; வாஜ்பேயி இளைத்துக் கொண்டே வருகிறாரே" என கிண்டலடித்தார். அது சரி... இவரும் இளைப்பாறச் சென்றவர்தானே? அதை எல்லாம் நினைவில் வைத்துக் கொள்ள எங்கே நேரமிருக்கப் போகிறது? ஜோஷி பதவியில் இருக்கிறார்... இறங்கிவிடுவார்... இறக்கப்படுவார்... இறங்க மாட்டார்... இறக்கப்பட மாட்டார்..." இப்படி விதவிதமாக அறிவிப்புகள் செய்து கொண்டிருப்பதற்கே நேரம் சரியா இருக்கிறது. இந்தக் களேபரத்தில் எங்கேயாவது தன் "குரு" பதவி ஆட்டம் கண்டு விடப் போகிறதே என்று, நாள் நட்சத்திரமெல்லாம் பார்த்து, "குரு பூர்ணிமா" அன்று, மீண்டும் 'ஆக்டிவ் பாலிடிக்ஸு'க்குத் திரும்பி விட்டார்!

### கூரிய(ர்) மதி!

போஸ்டல் ஸ்ட்ரைக்கால் கூரியர் சர்வீஸுகளுக்குப் பொற்காலம். மக்களுக்கு கஷ்டகாலம் என்பது எல்லோரும் அறிந்ததுதான். ஆனால் அதையும் சாதகமாக்கிக் கொள்ள மும்பைக்காரரால்தான் முடியும்- குஜராத்தி திருமணங்களில் 'கொடுக்கல்-வாங்கல்' படு கறாரான பிஸினஸாக நடக்கும். பெண்ணைப் பெற்ற மேத்தா என்ற குஜராத்தி, சம்பந்தியிடம் போஸ்டல் ஸ்ட்ரைக்கைக் காரணம் காட்டி, சீர் வரிசையில் சிலவற்றைக் குறைத்திருக்கிறார். எப்படி? "சாதாரண போஸ்டில் இன்விடேஷன்களை அனுப்பியிருந்தால் ஆகியிருக்கும் செலவு சொற்பம்தான்! இப்போது கூரியரில் அனுப்புவதால், லோக்கலுக்கு ஐந்திலிருந்து பத்து மடங்கும், வெளியூர்களுக்குப் பத்திலிருந்து இருபது மடங்குமாக எக்கச்சக்க செலவு..." என்று ஒரு போடு போட்டிருக்கிறார்! வெற்றியும் பெற்றிருக்கிறார்.

### பார்க்கவா? 'கேக்'கவா?

நாடகங்களுக்கு மக்களை ஈர்க்க என்னென்னவோ யுக்திகளைக் கையாளுகிறார்கள்; லேட்டஸ்ட் இதோ- 'மப்தார்' என்ற குஜராத்தி நாடகத்தைப் பார்க்க, சவான் ஆடிட்டோரியம் வந்தவர்களுக்கு 'ovenpick' ஜெயின் கேக் கம்பெனிக்காரர்கள், ஆளுக்கொரு eggless cake வழங்கியுள்ளனர். டிக்கெட்டுகளுக்கு லக்கி-டிப் வேறு! குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படுபவருக்கு ஒரு பெரிய ஃபேமிலி சைஸ் கேக்! (நாடகத்தின் முடிவில்தான்) இது முதல் நாள் முதல் ஷோவுக்கு மட்டுமல்லாமல் இனியும் தொடருமாம்! பிரிதொரு நாடகத்தின் இடையில், வர இருக்கும் வேறொரு நாடகத்தின் ட்ரெயிலரை 15 நிமிடங்களுக்கு நடித்துக் காட்டுகிறார்களாம். ஹூம்! பப்ளிசிடி ஸ்டண்டுக்கு மும்பை சிடி தான்!



# காந்தி வேதம்

### 'குண்டு' பிரச்னைகள்

போக்ரன் பித்தம் இன்னும் தெளிந்தபாடில்லை; அபிராம் சிங் என்ற மும்பை பி.ஜே.பி.க்காரர் "ஹம் ஹை ஹிந்தியன்"



என்று, போக்ரன் புகழ் பாடுமுகமாக ஒரு ம்யூசிக் வீடியோ போட்டுவிட்டார்; கோபினாத் முண்டே வெளியிடப் போகிறார். இது போதாதென்று, எதில் யார் வெற்றி பெற்றாலும்... பரீட்சையில் தேறுவதிலிருந்து, இமய மலை ட்ரெக்கிங் வரை... எல்லாமே போக்ரன் சாதனைகள்தான்! அண்மையில் ''எக்ஸ்ப்ளோஸிவ் ஸேல்– முதலில் போக்ரனில்! இப்போது தாதர் டிடியில். அபரிமிதமான புடைவைகள், ஸல்வார் கமீஸ்''கள்'' என்ற விளம்பரம் எல்லோரையும் ஸ்தம்பிக்க வைத்தது! குண்டு வெடிப்புக்கும் மகளிர் உடைகளுக்கும் என்ன சம்பந்தம்? கொஞ்சம் தள்ளி, ''உடல் இளைக்க வேண்டுமா? எங்கள் 'ஜிம்'மை நாடுங்கள்'' என்ற விளம்பரம்; இங்கே போக்ரனை நுழைத்திருந்தாலும் பொருத்தமாயிருக்கும் என்று கிண்டலடிக்கும் கூட்டத்துக்குக் கேட்கவா வேண்டும்?

## போக்ரன் தைரியம்

கைர்நார் தம் வாழ்க்கை வரலாறை எழுதியிருக்கிறார். புனாவைச் சார்ந்த 'புஷ்பா ப்ரகாஷன்' புத்தகக் கம்பெனியின் டைரக்டரான சோனாவானி, இதை வெளியிட ஆர்வம் காட்டியிருக்கிறார். மராத்தியில் 3000, ஆங்கிலத்தில் 5000 காப்பிகளுக்குமான ஆர்டர்கள் 'புக்' ஆகியிருக்கிறதாம். தாக்கரே, சரத்பவார் போன்றவர்களை கைர்நார் நார் நாராகக் கிழித்திருப்பார் என்பது தெரிந்த விஷயம்தான்! ஆனால் இவர்கள் ஒரு வார்த்தையைக் கூட 'எடிட்' செய்யவில்லையாம்! ஆங்கில மொழி பெயர்ப்பு தயாரானதும், பிரிண்டிங் துவக்கப்பட்டு, ஆகஸ்ட் மத்தியில் வெளியீட்டு விழா நடக்குமாம்! புத்தகத்தை பால்தாக்கரே கையால்தான் வெளியிட வேண்டும் என்று கைர்நார் சொல்லியிருக்கிறாராம்! இதையல்லவா 'போக்ரன் தைரியம்' என்று சொல்ல வேண்டும்?

## காந்தீய வ(ா)தம்!

தேசப்பிதாவை விமர்சித்து மற்றுமொரு நாடகம்! ''காந்தி Vs காந்தி'' பிரபலமானதிலிருந்தே, இந்த வகை நாடகங்களுக்கு வரவேற்பு அதிகமாகிவிட்டது! அதுவாவது வீட்டுப் பிதாவுக்கும் நாட்டுப் பிதாவுக்குமிடையே எழுந்த போராட்டம்; இது காந்தியைக் கொன்ற கோட்ஸேவையும் அவன் கொள்கைகளையும் நியாயப்படுத்தும் முயற்சி! ''மீ நாதுராம் கோட்ஸே போல் தோய்'' முதன் முதலாகச் சென்ற வெள்ளியன்று சிவாஜி மந்திரில் அரங்கேறியபோது, தவிப்புடன் அமர்ந்திருந்த பிரதீப் தல்வியும் (எழுதியவர்) வினய் ஆப்தேவும் (இயக்கியவர்) பார்வையாளர்களிடமிருந்து கிடைத்த அமோக வரவேற்பிற்குப்பின், நிமிர்ந்து உட்கார்ந்திருக்கின்றனர். காந்தியைக் கோட்ஸே கொலை செய்யவில்லை, 'வதம்' செய்தான் என்கிறார்கள்; இது கோட்ஸேயின் மீதான 'ஒயிட் பேப்பரா'ம்! ஆம்! நாடகத்திலுள்ள கனல் கக்கும் வசனங்கள், தீப்பற்ற வைக்கும் என எதிர்பார்க்கப் படுகிறது. பரவாயில்லை, காந்தீயத்தைக் கை கழுவி விட்டாலும், காந்தியை வைத்துக் கொண்டு பிழைக்கக் கற்று விட்டனர்!

— ஜெயஸ்ரீ ராஜ்

# கரும்பு சுவைக்க சன்மானமும் உண்டு!

SHRIRAM GROUP COMPANIES
MADRAS

## ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும் சந்தா முதலீட்டுத் திட்டம்!

**ஸ்ரீராம் டிரஸ்டில் ரூ. 10,000 முதலீடு செய்யுங்கள்.
5 ஆண்டுகளில் ரூ. 20,000 (இரு மடங்கு)
பெற்றுக் கொள்ளுங்கள்.**

*அத்துடன்*

**● 4 இலக்கிய பொக்கிஷங்களை அன்பளிப்பாகப் பெறுங்கள் ●**



1. 'கல்கி' வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. 'கல்கி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்கு பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் 'அமுதசுரபி' இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. 'அமுதசுரபி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.



*ரூ. 10,000 (ரூ. பத்தாயிரம்) 'ஸ்ரீராம் டிரஸ்ட்' பெயருக்கு செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி :*

'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ-7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு,
சென்னை - 600 102. தொலைபேசி எண் : 628 6869, 628 7879

---

1. முழுப்பெயர் : திரு/திருமதி/செல்வி.................................................
   முகவரி :..................................................................
..........................................................................
..........................................................................

2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர் :
   முழுப்பெயர் :..............................................................
3. வாரிசுதாரர் :..............................................................
4. கல்கி, அமுதசுரபி இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி :.......................
..........................................................................
..........................................................................

CHEQUE/D.D. No. Dt. ON

Rs. ........................................ அன்புள்ள

இடம் ........................................

தேதி ........................................ முதலீட்டாளர் கையொப்பம்

**சினி அவுட்டோர் மசாலா:**



• ப்ரீதா



• பார்த்திபன்

# ப்ரீதாவின் வீர சபதம்!

சில மாதங்களாக சினிமா சிற்பிகளின் பொற்பாதங்கள் படாமல் வறண்டு கிடந்த பொள்ளாச்சி, கோபி, உடுமலை லொகேஷன்களில் தூறல் விழ ஆரம்பித்திருப்பதாகத் தகவல் வந்தது. உடனே நமக்காகப் பறந்து சென்று செய்தி சேகரிக்கப் 'பறவை இனம்' ஏதுமில்லாத காரணத்தால் நாமே பஸ் பிடித்துப் போனோம்.



●● பொள்ளாச்சியில் 'சின்ன துரை' ஷூட்டிங். டைரக்ஷன் ஆபாவாணன் இல்லை. ஆனாலும் யூனிட்டில் 33 சதவீதத்துக்கும் மேல் ஆபா கட்சிக்காரர்கள் தான் கண்ணில் பட்டார்கள். கேமரா, க்ரேன் போல டெக்னீஷியன்களையுமா வாடகைக்கு விடத் தொடங்கி விட்


• சரத்குமார்

டார்கள்?

இல்லை சாரே. 'சின்ன துரை'யின் அப்பா (அதாவது டைரக்டர்) சந்திரா, ஆபாவாணனின் அஸிஸ்டெண்டாக இருந்தவர். ("அப்ரன்டீஸ் என்று சொல்லுங்கள்!" - சந்திரா.) ஆகவே அங்கு பழகிய டெக்னீஷியன்களை இங்கு அழைத்து வந்திருக்கிறார்.

சந்திராவுக்கு இது முதல் படம் என்று எல்லாரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். தப்பு. முன்னதாக 'கண்டக்டர் மாப்ளே' என்றொரு படத்தை முக்காலே மூணு வீசம் முடித்து வைத்திருக்கிறார். Yet to be released.

"அந்தப் படத்தில் நான் கையாண்ட சிக்கனத்தைப் பார்த்துத்தான் இந்தப் படத்தைக் கொடுத்தார் கே. பி. பிலிம்ஸ் பாலு" என்றார் சந்திரா.

இரண்டு படமும் ரிலீஸாகி வெற்றி பெற கூட்டுப் பிரார்த்தனை செய்வோமாக.

●● 'செத்துப் போய் விட்டு', ஷாட் ஓ.கே. ஆனதும் எழுந்து வந்தார் சித்தாரா. டிபிகல் பண்ணையாரம்மா கெட்-அப். சின்னதுரையில் சரத்துக்கு மனைவியாம். அப்போ... ஹீரோவுக்கு மனைவி என்றால்... "சித், நீங்கள் மீண்டும் ஹீரோயினா? அப்ப இந்தப் படத்துல ரோஜா?" என்றோம் சீண்டும் விதத்தில்.

வந்ததே கோபம், மூக்கு, கண், காது எல்லாத்துக்கும் மேலே.

"ஹும்! போய் ரோஜாவையே கேட்டுக்கங்க."

●● பத்திரிகையாளர்களைப் பார்த்தால் தலைதெறிக்க ஓடுகிறார் சரத்குமார். நாம், அவர் பொள்ளாச்சியில் தங்கியிருந்த நாட்களில் பலமுறை முயன்றும் நழுவலோ நழுவல்.


• சித்தாரா

உடனிருந்த ஒரு 'தான வாத்தியார்' ரகசியமாகச் சொன்னார் :

"அண்ணன் ரொம்ப 'டென்ஸன்'ல இருக்காருங்க. தேர்தல் தோல்வி ஒரு பக்கம். நக்மா விவகாரம் ஒரு பக்கம். இதைப் பத்திரிகைக்காரங்க எழுதித் தள்ளிட்டே இருந்ததுல, கிடைக்க வேண்டிய மேல் சபை சீட் வரைக்கும் இல்லாம ஆயிடுச்சி. 'அம்மா'வாண்ட இருக்க சொல்ல ரொம்ப நல்லா வெச்சிருந்தாங்க. இங்க வந்து எல்லா வகையிலும் டேமேஜ் அதிகமா இருக்குது'ன்னு ஃபீல் பண்றாரு. இன்னமே, அரசியல் பக்கம் அதிகம் ஆர்வம் காட்டிக்காம, ஒரு, ரெண்டு ஹிட்டு குடுத்து ரசிகர்களைத் தக்கவெக்கணும்னு முடிவு பண்ணியிருக்காப்பல."

நல்ல முடிவு. சிறப்பான முடிவு. பேட்டி

தராவிட்டாலும் வாழ்க பல்லாண்டு.

●● தாடி வைத்த இந்த முகத்தை எங்கேயோ பார்த்திருக்கோமே என்று சி. பிய்த்துக் கொண்டு, அட, பி. வாசு! என்று கிட்டே போன போது "உஷ்!" என்று மிரட்டாத குறை. அதாவது தான் பேச வேண்டாம்; தன் படம் பேசும் என்பதாக அர்த்தம். (படம் - காக்கைச் சிறகினிலே.)

அவர் பேசாததால் படத்தில் சம்பந்தப் பட்ட (அதாவது, நடிக்கிற) இன்னொரு டைரக்டரைப் பிடித்தோம். படு குஷியாக இருந்தார். தாம் நடிக்கிற படங்களில் 'குறுக்கிடு லொள்ளு தாங்கலை' என்று யாரும் இனி புலம்பப் போவதில்லை என்ப தால் வந்த குஷி. பின்னே, சொர்ணமுகி அவர் குறுக்கிட்டதனாலும்தானே ஹிட் ஆயிற்று? (புரிந்திருக்கும், பார்த்திபன்)

"இப்ப டைரக்ஷனுக்குக் கொஞ்சம் கெட்ட நேரம். நடிப்புக்கு நல்ல நேரம்னு சொல்லலாம். வரிசையா நான் நடித்த



• பொள்ளாச்சி படப்பிடிப்பில்

படங்கள் நல்லா ஓடினதால, நிறைய வாய்ப்புகள் இப்போ. இப்போதைக்கு டைரக்ஷன் (விஷப்) பரீட்சை பண்றதா இல்லை. நல்லா கான்ஸன்டிரேட் பண்ணி நடிக்கணும். திடீர்னு ஒருநாள் யாரும் எதிர்பார்க்காம இருக்கறப்ப டைரக்ட் பண்ண வருவேன். போஸ்டர்ல தெரிஞ் சுப்பீங்க!" என்றார் வழக்கமான சஸ்பென் ஸுடன்.

அது சரி. அப்படி போஸ்டரில் தெரிந்து கொண்ட கருப்பண்ணசாமியும் சோத்துக் கட்சியும் என்ன ஆச்சு?

"ஷாட் ரெடியாப்பா... இந்தா வரேன்"

அடுத்த செகண்ட் ஆளைக் காணோம்!

●● சினிமா ஒரு லவ்லி ஃபீல்டு என்று சான்றிதழ் தந்தார் ப்ரீதா மஞ்சுளா அல்லது ப்ரீதா விஜயகுமார். இடம் - உடுமலை. படம் - அதே காக்கைச் சிறகினிலே.

படத்தில் ப்ரீதா காக்கையாக நடிக் கிறாரா, சிறகாக நடிக்கிறாரா தெரிய வில்லை. பார்த்திபனுக்கு ஜோடி.



ஒருபோதும் கிசு கிசுக்களில் சிக்க மாட்டேன் என்று வீரசபதம் செய் யும் ப்ரீதா, எடுத்த எடுப் பில் பார்த் திபன், விஜய் காந்த், சத்யராஜ், சூர்யா என்று பெரிய விண்மீன்களோடு இணை வது பற்றி ரொம்ப நாணத் துடன் பெருமைப்படுகிறார்.

"அண்ணனோட நீ நடிச்ச படம் (தர்மா) சூப்பர். ஜோடிப் பொருத்தம் பிர மாதம்னு விஜய்காந்த் விசிறி கள் தினம் மலைமலையா லெட்டர் போடறாங்க." என்று குதூகலிக்கிறார்.

மற்றபடி கலைக் குடும்பம், அம்மாவின் அட்வைஸ் என்று வழக்கமான மாவரைத் தாலும் சட்டென்று ஒரு ஸ்பார்க் உதிர்ந்தது ப்ரீதாவிடமிருந்து.

"தமிழ் இண்டஸ்ட்ரீக்கு தமிழ் நடிகை கள்தான் தேவை. இங்க பார்த்தீங்கன்னா, எல்லாரும் வெளி மாநில நடிகைகள். ஏன் இப்படி? நான் ஒரு தமிழ்ப் பொண்ணு. என் ப்ளேஸ் இதுதான். விடப் போறதில்லை!"

யாரங்கே, இவ்விடத்துக்குப் பொருத்த மான ஒரு கமெண்ட் வேண்டும். கூப்பிடுங்கள் பி.எஸ். வீரப்பாவை!

— ரோகிணி

# குறையொன்றுமில்லை

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாசார்யார்

எல்லாமே யக்ஞத்தின் பொருட்டு என்று நாம் சமர்ப்பித்தாலும் அத்தனையும் பன்மடங்கு விருத்தி பண்ணி நமக்குத் திருப்பிக் கொடுத்து விடுகிறான் பகவான்.

யக்ஞத்தை யார் பண்ணுகிறார்களோ அவர்களுக்கே திருப்பிக் கொடுத்து விடுகிறான்.

ஆகையினாலே பரமாத்மாவினிடத்தில் சர்வமும் நாம் அர்ப்பணிக்கிறோமா என்றுதான் அவன் பார்க்கிறான். 'என்னைச் சேர்ந்த அத்தனையும் உன் பொருட்டு' என்று அர்ப்பணம் பண்ண வேண்டும்.

வேதத்திலே பாருங்கள்... நாஸ்திக வாதம்! அதிலே இருப்பது மாதிரி நாஸ்திக வாதம் வேறு எங்கேயும் கிடையாது. அதில் எத்தனை இடத்தில் நாஸ்திக வாதம் வருகிறது என்று பார்த்தால் 1330 இடங்களில் நாஸ்திக வாதம் வருகிறது!

வேதம் பண்ணுகிற மாதிரி நாஸ்திக வாதம் வேறு ஒருத்தரும் பண்ண முடியாது!

புதிது புதிதாகக் கேள்விகள் எழுகின்றன இந்தக் காலத்தில்... இந்தக் கேள்விகளெல்லாமே ஏற்கெனவே கேட்கப்பட்டவையா என்று பார்த்தோமானால், அவை எல்லாமே வேதத்தில் கேட்கப்பட்டவைதான். புதிதாக யாராலும் கற்பிக்க முடியாது.

அடியேன் கேட்ட வரையில் 1330 கேள்விகளுள் ஒரு 350 விஷயங்கள்தான் இன்றைக்கு நாஸ்திக வாதமாக வெளியிலே வந்திருக்கிறது. மீதியெல்லாம் இன்னும் வரவில்லை! ஆனால் வேதத்தில் கேட்கப்பட்டு ஏற்கெனவே இருக்கிறது!

68



ஒருத்தர் ஹோமம் பண்ணுகிறார்... 'ப்ருத்வியை ஸ்வாஹா...' என்று...

அங்கேயிருந்து வேத புருஷன் அவரிடத்திலே வந்து, "இது மாதிரி ஸ்வாஹா ஸ்வாஹா என்று பண்ணிக் கொண்டிருக்கியே... கொஞ்சம் நெய்யை எடுத்து அக்னியிலே வார்த்துவிட்டால் ஆயிற்றா? இது விஷ்ணுவுக்குத்தான், எனக்கில்லை.. என்று உத்தேசத் தியாகத்தோடு சமர்ப்பிக்கின் றீரே... இது விஷ்ணுவுக்குப் போகுமா?" என்று கேட்கிறான்.

வேத புருஷன் கேட்கிறான் இப்படி!

"சர்வ வியாபியாய், எங்கும் வியாபித்திருக்கிறபடியான, உலகளந்தவனான, அவனுக்கு ஒரே ஒரு உத்திரிணி நெய்யைச் சேர்த்துவிட்டு 'அவனுக்குத்தான்; எனக்கில்லை' என்றால் அது போதுமா?! உனக்கு எவ்வளவு நெய் வேண்டியிருக்கிறது? ஒரு வருஷத்துக்கு உனக்கே எவ்வளவு நெய் வேண்டியதாயிருக்கும்?! எங்கும் பரந்து விரிந்திருக்கூடிய எம்பெருமானுக்கு ஒரு உத்திரிணி நெய்யைச் சேர்த்துவிட்டு, 'இது அவனுக்கு' என்கிறீரே! அவ னுக்கு இது போதுமா என்பது உமக்குத் தெரியுமா?"

அவர் பாவம்! – ஹோமம் பண்ணுகிறவர். அவர் என்ன சொல்கிறார்... "இது பெரியோர்கள் அனுஷ்டானம். சாக்ஷாத் வேதமே! நீ வந்து கேட்கிறாய்... அதனால் சொல்கிறேன். அந்த ஆசாரத்தை அப்படியே கடைப்பிடிக்கிறேனேயொழிய 'இது போதும் போதாது' என்பதெல்லாம் எனக்குத் தெரியாது."

உடனே வேத புருஷன் திரும்பவும் கேட்கிறான்.

"போதுமா போதாதா என்பதெல்லாம் தெரியாது... ஆனால் காலையிலிருந்து இரவு வரை விடாமல் இதைப் பண்ணிக் கொண்டேயிருக்கிறாயே? இது என்ன வீணான காரியம்! சரி, இன்னொன்று கேட்கிறேன் – இது மாதிரி சேர்க்கிறாயே, அக்னியிலேயே எந்த தேவதையை உத்தேசித்துச் சேர்க்கிறாயோ அந்த தேவதையிடத்திலே அது போய்ச் சேருகிறதா என்பதாவது தெரியுமா?"

"அதுவும் தெரியாது!"

"போதுமா என்பதும் தெரியாது; போய்ச் சேருகிறதா என்பதும் தெரியாது... இருக்கிறவர்களை சிரமப்படுத்திக் கொண்டு, எல்லோரையும் கூட்டமாகக் கூட்டி இது என்ன காரியம்? – ராத்திரி பகலாக ஹோமம்



## அருள்வாக்கு

**மனஸை நிற்கப் பண்ணுவதற்குப் பூர்வாங்கமாக, அதை நாலா திசையிலும் வெறி நாய் மாதிரி ஓடிக் கொண்டிருக்காமல் முதலில் கட்டுப் படுத்த வேண்டும். இதற்கு அவர வரும் ஸ்வதர்மப்படி கர்மா செய்து கொண்டே இருக்க வேண்டும். நமக்கென்று ஆசை, த்வேஷம் இல்லாமல், லோகோபகாரமாக நமக்கென்று வாய்த்திருக்கிற கர்மாவை அவரவரும் பண்ணிக் கொண்டிருப்பது சித்த சுத்தியைத் தரும் என்பதால் ஆசார்யாள் கர்மாநுஷ்டானங்களை நம் எல்லோருக்கும் விதித்திருக்கிறார். 'கர்மா' என்பது ஓரளவுக்கு மனஸை மறந்து செய்கிற கார்யம். வேலையிலேயே நம் குறி இருப்பதால் சித்தம் தறிகெட்டு ஓடிக் கொண்டிருக்க விடாமல் பண்ணுகிறோம். இம்மாதிரி மனஸை மறந்து (ignore பண்ணி) கார்யம் பண்ணுவதோடு, அதை நல்லதிலேயே பழக்கி, முழுக்கி, ஒருமுகப்படுத்த வேண்டும். மனஸுக்கு ஐகாக்ரியம் (ஒருமுகப்படுதல்) ஏற்பட ஏற்படத்தான் அது அடங்கி, அப்படியே ஆத்மாவில் கரைந்துவிட வழி உண்டாகும். இதற்காகத்தான் அத்தனை நல்லதும் சேர்ந்ததான, ஸகல கல்யாண குண நிலயமான, ஸகுண மூர்த்தியிடம் பக்தி உபாஸனை செய்ய வேண்டும். மனஸ் அப்படியே ஆனந்தத்தில் ரொம்பி அந்த மூர்த்தியிடம் ஒருமுகப்**

பண்ணிக் கொண்டு! அதனால்தான் நான் சொல்கிறேன்... அதோ கிருஷ்ணா நதி ஏகமாக ஓடுகிறது. ஒரு குடம் ஜலத்தை எடுத்துக் கொண்டு வந்து இந்த நெருப்பிலே கொட்டி அணைத்துவிட்டு, மூட்டையைக் கட்டிக் கொண்டு மெட்ராஸுக்குப் போய்ச் சேரு...! இங்கே என்ன காரியம்...!"

– இப்படி அந்த வேத புருஷன் சொன்னால்... அடியேனைப் பார்த்துச் சொல்வதாகவே வைத்துக் கொள்வோம்... உடனே அடியேனும் குடத்தைத் தூக்கிக் கொண்டு கிருஷ்ணாவிலே இறங்கி ஜலத்தை மொண்டு, நீள ஹோம குண்டத்திலே கொட்டப் போகிறபோது... வேத புருஷன் கையைப் பிடித்துக் கொண்டு விடுவான்!

"இப்படி ஒரு அஞ்ஞானியாக இருப்பாயா...? யக்ஞம் இல்லாவிட்டால் நமக்கு வாழ்வு ஏது? யக்ஞத்தோடு சம்பந்தம் இருப்பதால்தானே சமஸ்த ஜீவராசிகளுக்கும் வாழ்வு... யக்ஞமே இல்லாமல் போய் விட்டால் இந்த உலகம் அழியும்" என்கிறான் வேதம்!

"நான் கேட்டேன் என்பதற்காக அக்னியை அணைக்க வந்து விட்டாயே... அந்தத் தத்துவத்தைச் சொல்கிறேன் கேள்...

"யக்ஞம் என்றால் என்னவென்று நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய்...? இந்த உத்திரிணி நெய் சமர்ப்பிக்கிறாயே, இவ்வளவுதான் அந்த தெய்வத்துக்குப் போகிறது என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா? அது தப்பு! அந்த தேவதைக்கு எவ்வளவு இருந்தால் போதுமோ அவ்வளவாக அது மாறிச் செல்கிறது... அதுதான் யக்ஞத்திலே இருக்கிற பெருமை." – இதுதான் யக்ஞ புருஷனின் விளக்கம்.

இப்போது இன்னொரு கேள்வி இங்கே வருகிறது. 'அந்த தேவதைக்கு எவ்வளவு இருந்தால் போதும் என்பதை முதலிலேயே சொல்லிவிட்டால் நாமே சேர்த்துவிடலாமே அக்னியிலே?' என்று கேட்கத் தோன்றும்.

ஆனால் அவ்வாறு எவ்வளவு இருந்தால் போதும் என்பதைச் சொல்ல முடியாது. அது அக்னிக்குத்தான் தெரியும். நாராயணனுக்கு - விஷ்ணுவுக்கு – எவ்வளவு சமர்ப்பிக்க வேண்டும் என்பது நமக்குத் தெரியுமா...! அக்னி பகவான்தான் நாம் கொடுப்பதைப் பன்மடங்கு பெரிதாக்கி அங்கே கொண்டு சேர்ப்பிக்கிறான்.

அக்னியிலே சேர்ப்பிப்பது பன்மடங்கு விருத்தியாகும் என்று சொல்லும்போது அது நமக்கு எப்படி நிரூபணமாகும்? பன்மடங்கு விருத்தியாகிறதா என்பது நம் கண்ணுக்குத் தெரியவில்லையே! எப்படி அதை நம்புவதாம்?!



**பட்டு நின்று விட்டால் அப்புறம் கண்ட கண்டபடி ஓடாது. அந்த இஷ்டமூர்த்தி ஒன்றிடமே பதிந்து நிற்கும். பிறகு அந்த மூர்த்தியின் அனுக்ர ஹத்தால், இப்படிப் பிரிந்திருந்து அதன் குணங் களை அநுபவிப்பது என்றில்லாமல், அதற்கும் மேலே போய், அதிலேயே கரைந்து நிர்குணமான ப்ரஹ்மமாக ஆகிவிடலாம்.**

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

இதற்கு மகான்கள் - வேத பாஷ்யாதி காரிகள் நமக்கு விளக்கம் சொல்லிக் காட்டு கிறார்கள்.

ஒரு விவசாயி நிலத்தைப் பயிரிடுகிறார். அந்த நிலத்தில் ஆறு மரக்கால் நெல்லை விதைத்து, நாத்து விட்டு, நடவு நட்டு, அதை மூன்று - நான்கு மாத காலம் சம்ரக்ஷித்து அறுவடை பண்ணுகிறார். அறுவடை பண்ணி களத்திலே கட்டை அடித்து, நெல்லைக் குவித்து அளந்து பார்த்தால் 30 - 32 கலம் வருகிறது.

ஆறு மரக்கால் நெல்லை பூமியிலே தியாகம் பண்ணினார். கிடைத்தது எவ் வளவு? 32 கலம்! பன்மடங்கு விருத்தி அடைந்து நெல் வர்ஷிக்கிறது!

நன்றாக கவனிக்க வேண்டும். ஆறு மரக் கால் பூமியிலே போட்டாரே அதே ஆறு மரக்கால்தான் திரும்பி வரும் என்றால் விவ சாயம் என்கிற காரியம் உலகத்திலே நடக் குமா?! போட்டதுதான் வரும் என்று இருந்து விட்டால் விவசாயம் என்கிற காரியத்தை யாராவது பண்ணுவார்களா? பலமடங்கு விருத்தியாகி வருவதால் அல்லவோ விவ சாயம் என்பது நடக்கிறது?

ஆகையினாலே, யக்ஞமானது ரொம்ப உயர்ந்த கர்மா.

இந்த விளக்கத்தைக் கேட்டுக் கொண் டிருப்பவர் ரொம்பவும் கெட்டிக்காரர்! "நான் ஒன்று கேட்டால் நீர் ஒன்று சொல் கிறீரே! பரீட்சையிலே உபநிஷத் சொல்லச் சொன்னால் புருஷ சூக்தம் சொன்னானாம். - அந்த மாதிரியிருக்கிறது இது! அக்னியிலே போட்டது பல மடங்கு விருத்தி அடை கிறதா இல்லையா என்று கேள்வி கேட்டால், பூமியிலே போட்டது விருத்தி அடைகிறது என்று பதில் சொல்லுகிறீர்கள்... இது பொருந் துமா?" என்று கேட்கிறார்.

இதற்கும் நல்லதொரு பதில் இருக்கிறது... ஒரு வாரம் பொறுத்திருங்கள்; சொல்கிறேன்.

(தொடரும்)

## காஜோல் மாதம்

**சீன் டீ.வியில் அவர் வாரம், இவர் வாரம் என்று இரவு திரைப் படங்களை ஒளிபரப்புகிறார்கள் அல்லவா? அந்த ஜுரம் சானல் 'வி'க்கும் தொற்றிக் கொண்டு விட் டது. போன மாதம் சானல் வி 'அமீர் கான்' மாதம், என்று அமீர்கான் பேட்டி, சினிமா, பாடல் காட்சிகள் என்று நிறைய ஒளிபரப்பினார்கள். பலத்த வரவேற்பு. ஆகவே ஜூலை மாதம், 'காஜோல்' மாதமாய் அறி விக்கப்பட்டுள்ளது. இந்த மாதம் திகட்டத் திகட்ட காஜோல்தான்!**

**— சி.எம்.**



# வாழவெறும்

கோவில் உள்பிராகாரத்தில் அவனைப் பார்த்ததில் மனம் திடுக்கிட்டது. அவனே தானா? மீண்டும் ஒருமுறை உறுதி செய்வதற்காகப் பார்ப்பதற்குள் மறைந்து விட்டான். சேச்சே! அவனாக இருக்காது. அவன் தான் வடக்கே எங்கேயோ போய் விட்டானே!

உதடுகளில் ஓடிவந்து கொண்டிருந்த சஷ்டி கவசம் உறைந்து போனது. சங்கரின் ஞாபகம் வந்தது. நல்ல பையன்தான். ஆனால், ஏன் வெறுத்தேன்?

எங்கள் பிளாட்ஸின் மாடிப் பகுதியில் குடியிருந்தான். வாட்டசாட்டமான உயரம். நல்ல நிறம். அதிர்ந்து பேசாத குரல். புன்னகை மாறாத முகம். வாலிக்கு ஏதோ வரபலம் உண்டாமே, எதிரே போரிடுகிறவனின் பாதி பலம் வாலிக்கே கிடைத்து விடுமாம். சங்கருக்கும் கூட அப்படித்தான். எதிராளி எவ்வளவு கோபத்தில் இருந்தாலும் இவன் முகம் பார்த்த மாத்திரத்தில் பாதிக் கோபம் இறங்கிப் போகும். எனவேதான் ராமன் ஒளிந்திருந்து அம்பு எய்த மாதிரி நானும் அவன் முகம் பார்க்காமல் அமிலம் கொட்டினேன். மறைந்திருந்து அம்பெய்து மாதிலத்திலிருந்தே இடம் பெயர்த்தேன்.

அதெல்லாம் என்ன ஆணவத்தில், என்ன பிடிவாதத்தில் என்று இப்போது நினைத்தாலும் கூசியது.

ஈஸ்வரா என்று முனகிக் கொண்டேன்.

அடுத்த சுற்று வரும்போது அவன் மீண்டும் கண்ணில் பட்டான். சங்கர் இல்லை. லேசாக அவன் ஜாடையில் யாரோ ஒருவன். அதானே! சங்கர் இங்கே எப்படி?

அவன் கடந்து போனான். சும்மா போகவில்லை. சங்கரைப் பற்றியும் அவனைச் சுற்றிய நினைவுகளையும் கிளறி விட்டுப் போனான். கவனம் திருப்ப முயன்றும் மனம் ஒருமைப்பட மறுத்தது. புதைக்க நினைத்து மறக்க முடிவு செய்திருந்த பழைய விஷயங்கள் தண்ணீரில் மூழ்கடிக்கப்பட்டிருந்த பந்து போல் ஜிவ்வென்று மேலெழும்பின.

அப்படியே நரசிம்மர் தூணடியில் அமர்ந்தேன்.

"**சா**ர்! நீங்களும் என் வயசுதான் என்பதால் என் மனநிலையைப் புரிந்து கொள்வீர்கள் என்று நம்புகிறேன். உங்க கம்பெனில வேலை பார்க்கற சங்கர் எங்க காலனிலதான் குடியிருக்கான். அவனால எங்க வீட்ல குழப்பம். அவன் நல்லவனா, கெட்டவனா, திறமைசாலியாங்கறதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. அவன் என்ன செய்தான் என்பதையும் போஸ்ட் மார்ட்டம் செய்து நாற்றம் கிளப்ப விரும்பவில்லை. இன்றைய நிலைமை, ஒன்று அவன் இந்த ஊரில் இருக்கக் கூடாது. அல்லது நான் என் குடும்பத்தோடு ஊரை விட்டுப் போகணும். என் குடும்பத்தின் அத்தனை பேரும் வெளியே அலைந்து கஷ்டப்படுவதை விட அவன் தனி ஆள் – அவனை மாற்றி விடுங்கள். உங்கள் கம்பெனிக்கு இந்தியா முழுக்கக் கிளைகள் உள்ளன.

இதை நீங்க செய்தா ஓர் ஏழைக் குடும்பத்தின் மான மரியாதையைக் காப்பாற்றிய புண்ணியம் கிடைக்கும். அதை விட்டு அவனைக் கண்டிக்கறது மாதிரியான எந்த ஸ்டெப்பும் விவகாரத்துக்குப் புதுப் பரிமாணம் கொடுத்து குடும்பத்தோட நான் செத்துப் போகிற நிலைமைக்கு..."

கைகூப்பியபடி குரல் கலங்க நான் நடித்த நடிப்பு கைமேல் பலன் தந்தது.

வடக்கே எங்கோ ஓர் ஊருக்கு சங்கர் மாற்றி அடிக்கப்பட்டான். ஜானகியை மட்டும் அந்த நாட்களில் அத்தை வீட்டுக்கு அனுப்பி விட்டிருந்ததால் மேற்படி விவகாரங்கள் அவளுக்குத் தெரியாமல் பார்த்துக்

பெ. நாயகி



கொள்ள முடிந்தது. அவளைப் பொறுத்த வரை சங்கர் பாதிப் பக்கங்கள் காணாமல் போன ஒரு கையெழுத்துப் பிரதி. கதை மாதிரி.

ஜானகி கொஞ்சநாள் அழுதாள். கொஞ்ச நாள் அமைதி பூண்டாள். சண்டை பிடிக்க வில்லை. அவளுக்கு அதெல்லாம் தெரியாது. அப்பா அப்பா என்று என்னையே வளைய வந்து வளர்ந்தவள். அம்மா என்பவள் கூட அவளைப் பொறுத்தவரை அந்த வீட்டி லேயே இருந்த இன்னொரு ஜீவன். அவ்வளவுதான். எல்லாமே அப்பாதான். எனக்குப் பிடித்த எழுத்தாளர்தான் அவளுக்குப் பிடிக்கும். எனக்குப் பிடித்த நடிக நடிகையர் தான் அவளுக்கும் பிடிக்கும். இவ்வளவு ஏன், 'சே! இந்த பூகோளம் தாம்மா என்னுடைய பள்ளி நாட்களிலேயே எனக்குப் பிடிக்காத ஒரே சப்ஜெக்ட்' என்று நான் ஒருமுறை கமென்ட் அடிக்க, அவள் அதுவரை பூகோளத்தில் எடுத்துக் கொண்டிருந்த மார்க்குகள் சட்டென்று பாதியாய்க் குறைந்தன. 'அப்பாவின் பெண் பாகம்தான் நீ, உனக்கென்று இடன்டிடியே கிடையாதா' என்கிற சகோதரர்களின் கேலியை அவள் பொருட்படுத்தியதே இல்லை.

பழைய சில சம்பவங்களும் மனத்திரையில் ஓடத் துவங்க, ஒரு பக்கம் பெருமிதம் பூரிப்பு தந்தாலும் இனம் புரியாத குற்ற உணர்வும் உறுத்தியது. கண்களில் நீர் முட்டிக் கொண்டு வந்தது.

பகவானே! ஒருவேளை அந்த அளவு அவள் என்னோடு ஒட்டி ஐக்கியமானது தான், அவளுடைய நியாயமான காதல் உணர்வை என்னால் ஜீரணிக்க முடியாமல் போனதற்குக் காரணமா?

எவ்வளவுதான் அப்பா அப்பா என்று பாசத்துடன் வளைய வந்தாலும் இன்னொரு ஆடவன் பற்றிய கிளர்ச்சிகள் அவளுக்குள் எப்படி ஆரம்பித்தன? அதுதான் இயற்கையா? கடவுளே! எங்கள் ஒற்றுமையைப் பொறுக்காமல் நீ நடத்திய விளையாட்டு தானே அது?

சங்கரைப் பற்றிக் கூட வீட்டில் அறி



''தனக்கு ஜாதகத்துல எல்லாம் துளிக்கூட நம்பிக்கையே கிடையாது'ன்னு அவர் சொல்லிட்டுப் போனா, அதுக்கு நீ ஏன் இவ்வளவு ஆச்சர்யப்படறே?''

''உங்களுக்குத் தெரியாதா? அவர் ஒரு பிரபல ஜோசியருங்க!''

– யமுனா ரெங்கநாதன்

மூகப்படலம் நடத்தியது நான்தான். ஜானகியின் அம்மாவிடமும் தம்பிகளிடமும் அவர்களுக்குப் பொறுப்பு வரவேண்டியது பற்றிய அறிவுரைகளின்போது சங்கரை நான்தான் மேற்கோள் காட்டிப் பேசினேன். 'இவ்வளவு சின்ன வயசுல அப்பா இல்லாம, தானே ஸ்காலர்ஷிப்ல படிச்சு பெரிய கம்பெனில வேலையும் வாங்கி செட்டில் ஆகியிருக்கான். ஒரு சினிமா, பீச்சுனு சுத்தறானா? தானுண்டு கடவுள் பக்தி உண்டு மேலே மேலே முன்னேறணும்ங்கற முயற்சி உண்டுன்னு இருக்கான். எவ்வளவு நல்ல பையன்! அம்மாவும் ரெண்டு தங்கைகளும் ஊரில் இருக்காங்களாம். பெரிய தங்கை கல்யாண ஏற்பாடுகள் செஞ்சிட்டிருக்கானாம். அதுக்கப்புறம் அம்மாவையும் கடைசித் தங்கையையும் இங்கே அழைச்சிட்டு வந்து போறானாம்...''

ஜானகி மனத்தில், நான் சொன்ன எந்த வார்த்தை கற்பனை வளர்த்தது என்று தெரியவில்லை. அப்பாவுக்கு சங்கரைப் பிடித்திருந்தால் தனக்கும் பிடிக்க வேண்டும் என்கிற சூத்திரத்தில் வளர்ந்ததால் பாதிப்படைந்தாளோ!

எப்போது பார்த்தார்களோ! எங்கே சந்தித்தார்களோ! என்ன பேசிக் கொண்டார்களோ!

ஒரு நாள் ஜானகியின் புத்தகத்தில் அவனுடைய புகைப்படம் கண்ணில் பட, ஆடித்தீர்த்தேன். சொல் அம்புகளால் குத்திக் குத்திக் குருதி குடித்தேன்.

அப்பாவுக்கு பூகோளம் பிடிக்காத சூத்திரம், சங்கர் விஷயத்தில் வேலை செய்யத் தாமதமானது என்பதுதான் இறை விளையாட்டின் பெரும்புதிர்.

முதன் முறையாக ஜானகி என்னை ஏறிட்டுப் பார்த்து "ஏம்ப்பா! அவர் நல்லவர். அவரை மாதிரி ஆம்பளைப்பசங்க ரொம்ப அரிதுன்னு நீங்கதானே சொன்னீங்க?'' என்று எதிர்க் கேள்வி கேட்ட போதுதான் இந்த அதர்ம யுத்தத்தில் என் பக்கம் மிகவும் பலவீனம் என்பது புரிந்தது. நேர்மையான காரணங்களுடன் எதிராளி நின்றால் நேர் யுத்தம் புரிவது கடினம். மறைந்திருந்தது அம்பெய்து விடுவதுதான் நல்லது என்று முடிவு செய்ய வேண்டி வந்தது.

கோவிலில் கூட்டம் குறைய, கிளம்பினேன். ஜானகியின் ஞாபகம் அளவுக்கதிகமாகப் பீறிட, அவளை உடனே பார்க்க வேண்டும் என்று தோன்றியது.

இரவு பஸ்ஸிலேயே கிளம்பி விட முடிவு செய்து சொல்ல, மனைவி ஆச்சர்யப்பட்டாள்.

"என்ன திடீர்னு? ரெண்டு நாள் பொறுங்களேன். ஏதாவது பலகாரம் ஜானகிக்குப் பிடிச்சதா செஞ்சு தர்றேன். வெறுங்கையோடவா போவீங்க?" என்றாள்.

"ஏதாவது கடையில் வாங்கித் தந்துக்கறேன். எனக்கு அவளை உடனே பார்க்கணும்."

கிளம்பி விட்டேன். இரவு முழுதும் பஸ்ஸிலும் தூக்கமில்லை.

ஜானகிக்கு வரன் பார்க்க ஆரம்பித்த போது அவள் ஒன்றுமே சொல்லவில்லை. 'அப்பாவை அவமானப்படுத்த மாட்டாய் என்று நினைக்கிறேன்' என்ற ஒரே வாக்கியம் அவளைக் கட்டி வைத்தது. ஆனால் ரமேஷ் வந்து பார்த்துவிட்டுப் போன பிறகு ஒப்புக்காக அவளுடைய அபிப்பிராயம் கேட்ட போது 'இவர் வேண்டாம்னு படுதுப்பா' என்றாள். எனக்குள் அப்போதும் பீறிட்டு எழுந்தது எந்த வகையான ஆணவம் என்று தெரியவில்லை. 'ஏன் இன்னும் அவன் நினைப்பாவே இருக்கோ?' என்று விஷம் கக்கினேன். அந்த விநாடியில் அவள் முகத்தில் விரிந்த உணர்ச்சிகளை விவரிக்க என்னிடம் வார்த்தைகள் இல்லை. அப்படியே அடங்கிப் போனாள்.

ரமேஷுடன் திருமணம் நடந்தது. மதுரைக்கு அனுப்பி வைத்தாகியது. அப்பா என்று கண்ணீர் மல்க நின்றவளின் கைகளைப் பிடித்து முத்தமிட்டபடி "ஜானகி! என்னுடைய சகலமும் நீ. உனக்கு நல்லது மட்டுமே செய்வேன் என்று நம்பு. போகிற இடத்தில் நல்ல பெயர் எடுத்து என்னைப்

பெருமைப்படுத்து!'' என்று வழியனுப்பினேன்.

இன்றுவரை புகுந்த இடத்திலிருந்து அவளைப் பற்றி ஒரு குறை வந்ததில்லை. 'ஜானகின்னா பெயருக்கு ஏற்ற மாதிரி இவ்வளவு நல்லா வளர்த்திருக்கீங்களே' என்றுதான் புகழாரங்கள். அந்த இடத்தின் ஒரு பெரியவர், இந்தக் காலத்தில் இப்படி ஒரு பெண்ணா! படிப்பு, அழகு இரண்டும் இருந்தும் இவ்வளவு அடக்கம்! ஒரு இம்பாஸிபிள் காம்பினேஷன் என்றார்.

அந்தப் பக்கத்தினர் புகழப் புகழத்தான் எனக்குள் புழுக்கம் வரத் தொடங்கியதோ. என் வார்த்தைகள், என் ஆசைகளுக்கு இவ்வளவு தூரம் முக்கியத்துவம் தந்து தன்னை மாற்றிக் கொள்கிற ஜானகிக்கு நான் ஒரே ஒரு முறை விட்டுத் தந்திருக்கக் கூடாதா என்கிற கேள்வி குமைச்சலாகக் கொல்லத் தொடங்கியது.

என்னதான் தவிர்க்க முயன்றாலும் ரமேஷையும் சங்கரையும் ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. நிச்சயம் சங்கருக்கு ரமேஷ் ஈடில்லைதான். லட்சணமும் குறைவுதான். வேலையிலும் சாமர்த்தியம் போதாது. பெரியவர்கள் விஷயத்திலும் அவனளவு பணிவு கிடையாது. புகை பிடிக்கும் வழக்கம் வேறு. ஜானகிக்கு சிகரெட் வாடையே ஆகாது. எப்படி சகித்துக் கொள்கிறாளோ. ஓரிருமுறை ஜானகியைக் கைநீட்டி அடித்ததாகக் கேள்விப்பட்ட போது சகஜம்தான் என்று சமாதானம் செய்து கொள்ள ரொம்பவே கஷ்டமாக இருந்தது.

எனக்கே இந்த மாதிரியான ஒப்புமை தவிர்க்க முடியவில்லை என்றால் ஜானகிக்கு இந்த உணர்வுகள் இல்லாமல் இருக்குமா? ஒவ்வொரு முறை மனம் நோகும் போதும் சங்கரை நினைப்பாளோ? தனிமையில், இரவுகளில் கண்ணீர் வடிப்பாளோ...

தப்பு செய்து விட்டேன், தப்பு செய்து விட்டேன் என்று மனம் அரற்றினாலும் திருத்திக் கொள்ள முடியாத தப்பு என்பதனால் பழையதை நினைப்பதே அர்த்தமற்ற செயல் என்று அறிவு சொல்லிக் கொடுக்க முயன்றது.

அறிவினால் புரிந்து கொள்பவைகளையும் மீறி மனத்தினால் உணர்வனவற்றை வெல்வது எவ்வளவு கடினம் என்று பட்டது.

**வா**சல் கோலம் வரவேற்றது. ஜானகிதான் கதவு திறந்தாள். அதிகாலையிலேயே குளித்திருக்கிறாள் என்பது கண்டு மனம் சந்தோஷப்பட்டது. "அவர் தூங்கறார்ப்பா. எழுப்பவா?'' என்று கேட்டாள். ''வேண்டாம்மா'' என்று தடுத்தேன்.

"என்னப்பா திடீர்னு? வீட்ல எல்லோரும் நல்லா இருக்காங்கல்ல?'' என்று பொறுப்புடன் விசாரித்தாள். "பஸ்லயா வந்தீங்க? ரொம்ப டயர்டா இருக்குமே! படுத்து ரெஸ்ட் எடுங்களேன்'' என்று வாஞ்சை காட்டினாள். அவளையே உற்றுப் பார்த்தபடி இருந்தேன். லேசாகப் பூசியிருந்தாள். சந்தோஷமாய்த்தான் இருக்கிறாள் போலும்.

"ஏதோ தோணித்து. கிளம்பி வந்திட்டேம்மா. வீட்ல அம்மா எதுவும் செய்து தந்து விடும் அளவு பொறுமை இல்லை எனக்கு. கடைலதான் வாங்கிட்டு வந்தேன்'' என்றபடி பையை நீட்டினேன்.

கொஞ்சம் குரல் தாழ்த்தி, "இப்படி என் முடிவு எல்லாமே திடீர் திடீர்னு அமைஞ்சிடறதுனாலே உனக்குப் பிடித்தவைகளை செய்து தரமுடியாமல் போயிடுது ஜானகி. எதும் நினைச்சுக்காதே...'' என்றேன் தரையைப் பார்த்தபடி.

ஜானகி பிடிவாதமாய் என்னை நேர்ப் பார்வை பார்த்தாள்.

"நான் எதுவுமே நினைக்கறதில்லைப்பா. எனக்கு அதுக்கெல்லாம் பக்குவம் போறாது. நீங்க எது செஞ்சாலும் என் நல்லதுக்குத்தான் இருக்கும்னு முழு நம்பிக்கை இருக்குப்பா'' என்றாள் என் தோளில் கைவைத்து மென்மையாக அழுத்தியபடி.

எனக்கு ஆறுதலாக இருந்தது.



"தலைவரோட மகனுக்கு மூணு வயசுதான் ஆவுதுன்னாலும் இப்பவே எதிர்காலத்திலே தலைவரா வர்றதுக்கான அடையாளம் தெரியுது...!"

"எப்படிச் சொல்றீங்க?"

"ஸ்கூலுக்குப் போகல்லியா'ன்னு கேட்டா, 'அதைப்பத்தி இன்னும் சிந்திக்கலே'ங்கிறான்!"

- எஸ். ராமச்சந்திரன்




• விழிப்புணர்வு சைக்கிள் பேரணியில்...



• ஆபாச சினிமா எதிர்ப்புப் பேரணி: கெயிட்டி தியேட்டர் அருகில்

குஜராத் மாநில இஞ்சினியரிங் கல்லூரி ஹாஸ்டல்களில், 1973ல் கட்டணத்தை அரசாங்கம் உயர்த்தியபோது, அதனை எதிர்த்து மாணவர் போராட்டம் ஆரம்பிக்கப்பட்டது. 'நவ நிர்மாண் போராட்டம்' என்ற பெயரில் இது மாநிலம் முழுவதும் பரவியது. முதலமைச்சர் சிம்மன் பாய் பட்டேல் ராஜினாமா செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அந்தப் போராட்டத்தை நடத்திய மாணவர்கள், ஏ.பி.வி.பி. எனப்படும் அகில இந்திய மாணவர் அமைப்பைச் சேர்ந்தவர்கள்.

அந்த மாணவர்கள் இயக்கம், குஜராத்தையடுத்து, பீகாரின் ஊழல் ஆட்சிக்கு எதிராகக் கிளர்ந்து எழுந்தது. லோக் நாயக் ஜெயப்பிரகாஷ் நாராயணின் தலைமையில் ஒன்று திரண்டது. இதுவே வெகு சீக்கிரம், இந்திராகாந்தி நெருக்கடி நிலையை அறிவிக்கவும் அடிகோலியது. பல்வேறு கட்சித் தலைவர்கள், தொண்டர்களுடன் ஏ.பி.வி.பி. அமைப்பைச் சேர்ந்த மாணவர்களும், ஆயிரக் கணக்கில் கைதாகி, சிறையில் சித்ரவதைக்கு ஆளானார்கள்.

1948ல் தேச நலனில் அக்கறை கொண்ட பல மாநிலங்களைச் சேர்ந்த மாணவர்களும் ஜெய்ப்பூரில் கூடி, ஏ.பி.வி.பி.யை உருவாக்கினார்கள். இப்போது இந்த அமைப்புக்குப் பொன்விழா. 1977ல் தேர்தலின்போது, ஜனதா கட்சியின் வெற்றிக்காக இவர்கள் வேலை செய்தார்கள். ஆனால் தேர்தலில் வென்று, ஜனதா கட்சி ஆட்சியைப் பிடித்தவுடன், உங்கள் அமைப்பை 'யுவ ஜனதா'வுடன் இணைத்து விடுங்கள் என்று ஜனதா தலைவர்கள் ஆலோசனை சொன்ன போது, ''ஸாரி! மாணவர்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்தி, தேசப் புனருத்தாரணம் செய்வதுதான் எங்கள் பிரதான கொள்கை; அரசியல் அல்ல'' என்று குட் பை சொல்லிவிட்டார் கள்.

ஆனாலும், 'காஷ்மீர் பிரச்னையை, முதன் முதலில் தேசத்தின் கவனத்துக்குக் கொண்டு வந்ததே நாங்கள்தான். 1990ல் காஷ்மீருக்கு வாருங்கள்' என்று அழைப்பு விடுத்தபோது, நாடெங்குமிருந்து பதினோராயிரத்து இருநூறு மாணவ, மாணவிகள் காஷ்மீர் நோக்கித் திரண்டனர். ஜம்முவில்

**தபால் ஸ்டிரைக் காரணமாக 'கொசுறுப் போட்டி' கூப்பன்கள் அனுப்புவதில் வாசகர்களுக்கு சிரமம் இருக்கும். எனவே கூப்பன் அனுப்பக் கடைசி தேதியை 20.7.98லிருந்து 27.7.98 என நீட்டித்திருக்கிறோம். ஓகேவா?**

**– ஆசிரியர்**

# விழிப்புணர்வுக்கு ஓர் இயக்கம்!




"ஸாரி! மாணவர்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்தி, தேசப் புனருத்தாரணம் செய்வது தான் எங்கள் பிரதான கொள்கை; அரசியல் அல்ல"



• சடகோபன்

நாங்கள் நடத்திய பேரணியில், அம்மாநில மாணவர்கள் உட்பட இருபத்தி ஐயாயிரம் பேர் கலந்து கொண்டனர்; ஸ்ரீ நகரில் தேசியக் கொடி ஏற்ற நாங்கள் சென்றபோது, கைது செய்யப்பட்டோம். மறுபடி டெல்லி வந்து, பிரதமர் வி.பி. சிங்கைச் சந்தித்து, "எங்களுக்குத் தடை விதித்து விட்டார்கள்; பிரதமரான நீங்களாவது அங்கு சென்று தேசியக் கொடி ஏற்றி, இந்தியர் அனைவரும் ஒன்று என்று உணர்த்த வேண்டும்" என்று வற்புறுத்தினோம். அவர் ஒரே வாரத்தில் தாம் செய்வதாய் வாக்குறுதி கொடுத்தாலும், அது காற்றோடு போனது" என்கிறார் ஏ.பி.வி.பி யின் தேசிய செயலாளர்களுள் ஒருவரான சடகோபன்.

"ஆந்திராவில், ஆசிரியர்கள் தனியே டியூஷன் சொல்லித் தருவதற்குத் தடை விதிக்கப்பட்டது எங்கள் முயற்சியால்தான். நாங்களாகவே, பீகாரில், பரீட்சையில் காப்பி அடிப்பதற்கு எதிரான இயக்கம் நடத்தி, காப்பி அடித்தவர்களை, கையும் களவுமாய்ப் பிடித்திருக்கிறோம். கர்நாடகாவில், சுயநிதிக் கல்லூரிகளின் கொட்டத்தைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்ததில் எங்களுக்குப் பெரும் பங்கு உண்டு. தமிழ்நாட்டில், சட்டப் பல்கலைக் கழகம் அமைக்கப்பட்டது எங்களின் வெகு நாளைய முயற்சிக்குக் கிடைத்த வெற்றி. இந்தியா முழுவதும், பி.ஈ., மருத்துவம் போன்ற தொழிற் கல்லூரிகளுக்கு நுழைவுத் தேர்வு நடக்கிறதே, இதுவும் எங்களுக்குக் கிடைத்த வெற்றி தான்!

"தமிழ்நாடு உட்பட பல மாநிலங்களிலும், லாபநோக்கின்றி, தொழிற்கல்லூரி நுழைவுத் தேர்வுக்கு நாங்கள் நடத்தும் பயிற்சி வகுப்புகளால் ஆண்டு தோறும் ஆயிரக் கணக்கான மாணவர்கள் பயன் பெறுகிறார்கள். நிறைய ரத்ததான முகாம்கள் நடத்துகிறோம்.

"தொழில் வளர்ச்சி, விவசாய வளர்ச்சி போன்றவற்றுக்காக, சிறப்பு வங்கிகள் இருக்கின்றன அல்லவா? அதுபோல, கல்வி வளர்ச்சிக்கு உதவுவதற்காக ஒரு வங்கி துவக்கப்பட வேண்டும் என்பது எங்கள் கோரிக்கை" என்கிறார் சடகோபன்.

— கௌதம்

# அதிசயமே அசந்துபோகும்

சிலருக்கு எலுமிச்சை, ஆரஞ்சு, குளிர்பானங்கள் போன்றவற்றில் அதிகம் காணப்படும் சிட்ரிக் அமிலம் அலர்ஜியாக இருக்கும். சிலருக்கு தூசியே அலர்ஜியை ஏற்படுத்தும். இன்னும் சிலருக்குக் குறிப்பிட்ட சோப்போ, டால்கம் பவுடரோ கூட அலர்ஜிக்குக் காரணமாக அமையலாம்.

தோல் அரிப்பு, அங்கங்கே வீங்கிப் போவது, சிவப்படைதல் இப்படிப் பல விதங்களில் உடல், அலர்ஜியை வெளிப்படுத்தும். ஆனால் எந்தப் பொருள் நம் உடலுக்கு ஒவ்வாதது என்பதைக் கண்டு பிடிப்பது சுலபமில்லை!

நம் உடலுக்குப் பிடிக்காத, அலர்ஜிக்குக் காரணமான பொருள் உடலுக்குள் நுழைந்தவுடன் திசுக்களில் கலந்து ரத்தத்தில் 'ஹிஸ்டமைன்' என்ற பொருளை வெளியேற்றுகிறது. இது ரத்தக் குழாய்களிலும் நுரையீரல்களிலும் செல்லும்போது உடலில் அலர்ஜி அறிகுறிகள் ஏற்படுகின்றன.

"எதனால் அலர்ஜி என்றே தெரியவில்லை!" என்று நாம் கையைப் பிசைந்து கொண்டு நின்றால், டாக்டராலும் இந்தப் பிரச்னையை சுலபத்தில் தீர்த்துவிட முடியாது. எது குற்றவாளி என்பதைக் கண்டு பிடித்தால்தானே அதைப் பயன்படுத்தாமல் இருக்கச் சொல்ல முடியும்? பொதுவாக எதெதெல்லாம் அலர்ஜியை உண்டாக்க வாய்ப்பு உண்டோ (இவற்றை அலெர்ஜென் என்பார்கள்) அவை அடங்கிய திரவத்தை ஒன்றன் பின் ஒன்றாக (ஒரே நாளில் அல்ல!) ஊசியின் மூலம் செலுத்தி, அதற்கு உடல் எப்படி ரியாக்ட் செய்கிறது என்பதைக் கணித்து விட்டுத்தான் டாக்டர்

**அட இதுல இவ்ளோ விஷயம் இருக்கா?**



# அதிசயம்!

ஒரு முடிவுக்கு வருவார்.

மகரந்தத்தூள், சில குறிப்பிட்ட மருந்து வகைகள், சில உணவு வகைகள் ஆகியவற்றின் காரணமாக அலர்ஜி ஏற்பட்டிருந்தால் RAST என்ற ரத்தப் பரிசோதனை மூலம் அதைக் கண்டு பிடித்து விடலாம். மேலே குறிப்பிட்ட தோல் சோதனை அளவுக்கு இது துல்லியமாக ரிசல்ட்டை வெளிப்படுத்துவதில்லை. ஆனால் எக்ஸிமா போன்ற சரும வியாதி ஒருவருக்கு இருக்குமேயானால் அதற்காக மருந்து உட்கொள்வார்கள் அல்லவா... அந்த மருந்துகளின் விளைவாக, தோலில் செய்யப்படும் அலர்ஜி டெஸ்ட் சரியான, தெளிவான முடிவுகளைத் தராது போகக்கூடும்.

சில சமயம் டாக்டர் சளியை டெஸ்ட் செய்துவரச் சொல்வதுண்டு. நுரையீரல் மற்றும் காற்றுக் குழாய்களில் உள்ள திரவங்களால் ஆனதுதான் சளி. மேற்கூறிய உடல் பகுதிகளை பாக்டீரியாக் கிருமிகள் தாக்கியிருந்தால், அந்தக் கிருமிகள் சளியிலும் வெளிவரும் வாய்ப்பு உண்டு. இவற்றை மைக்ராஸ்கோப் மூலமாக ஆராய்ந்தபின் டாக்டர் சிகிச்சையைத் தொடங்குவார்.

சளியை ஒருவித ஸ்பெஷல் 'ஜெல்'லில் வைத்திருப்பதன் மூலம் நோய்க் கிருமிகள் உண்டா என்பதை டாக்டரால் மேலும் துல்லியமாக அறிய முடியும்.

நாம் சுவாசிக்கும் காற்றில் உள்ள ஆக்ஸிஜனை உறிஞ்சிக் கொள்வதும், கரியமில வாயுவை வெளியேற்றுவதும்தான் நுரையீரலின் முக்கிய வேலை என்று நமக்குத் தெரியும். சுவாசம் தொடர்பாக ஏதாவது பிரச்னை உண்டானால், Respiratory function test செய்து கொள்ளச் சொல்லலாம். நுரையீரல்கள் எவ்வளவு திறமையாக வேலை செய்கின்றன என்பதைக் கண்டறியும் சோதனை இது. ஒரு கருவியில் இணைக்கப்பட்டுள்ள ட்யூபின் வழியாக முழு வேகத்துடன் மூச்சை விட வேண்டும். பிறகு இழுக்க வேண்டும். இப்படித் தொடர்ந்து செய்யும்போது கொஞ்சம் அசௌகரியமாகத்தான் இருக்கும். என்றாலும் இந்தக் கருவி நம் சுவாச மண்டலம் தொடர்பான பல விஷயங்களைப் பதிவு செய்யக் கூடியது. நுரையீரலின் கொள்ளளவு, நம்முடைய உள் சுவாசம், சுவாச வெளியேற்றம் ஆகியவற்றின் சக்தி போன்றவற்றைப் பதிவு செய்துவிடும்.

முக்கியமாக, நிமோனியாவைக் கண்டு பிடிக்க இந்தச் சோதனை உதவுகிறது.

மருத்துவமும் தொழில் நுட்பமும் விரிவடைந்து கொண்டே வரும் தற்போதைய சூழலில் புதுவித ஆராய்ச்சிகள், புதிய சோதனைகள் ஆகியவற்றுக்கு முடிவில்லை என்றாலும் இந்தத் தொடர் முடிவுக்கு வருகிறது.

இந்த உடல் நமக்கு இறைவன் அளித்திருக்கும் மாபெரும் வரம். மிக நேர்த்தியாக அமைந்துள்ள உடல் உறுப்புகளின் ஒன்றிணைந்த செயல்பாடுதான் உண்மையில் 'அதிசயமே அசந்து போகும் அதிசயம்'. இந்தச் செயல்பாடுகளில் ஏற்படும் சிக்கல்களைக் களைய டாக்டருக்கு உதவும் உபகரணங்கள்தான் மருத்துவ சோதனைகள்.

"நாற்பது வயசைத் தாண்டியாச்சா, ஒரு கம்ப்ளீட் செக்-அப் செய்துக்குங்க", "காலையிலே வெறும் வயிறோடுதான் இந்தச் சோதனையை செய்துக்கணும்" "ஈ.ஸி.ஜி. போதலே. ஒரு ஸ்ட்ரெஸ் டெஸ்ட் எடுத்துக்குங்க", என்பது போன்ற வாசகங்களைக் கேட்கும்போது, அவற்றின் பின்னணியை (மேலும்) உணர வைக்க இந்தத் தொடரால் முடிந்திருந்தால், சந்தோஷம். ●

— ஜி.எஸ்.எஸ்.

அடுத்த இதழில்...

# ஆர்யபட்டா

அமர்க்களமான

த்ரில்லர்

ஆரம்பிக்கிறார்



# சுஜாதா

அமரர் கல்கி நூற்றாண்டு விழா

சிறப்புச் சிறுகதைப் போட்டியில்

# 10,000

ரூபாய் முதல் பரிசு பெறும் சிறுகதை

● கல்லூரி மாணவ-மாணவியரின் கலக்கல் பக்கங்கள்

● பிரபலங்களின் மறுபாதி!

● 'வெற்றியின் விலாசம்!' – உபயோகமான இலவச இணைப்பு

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

# US 64

## பாதுகாப்பு, எளிதாக ரொக்கமாகும் வசதி மற்றும் கவர்ச்சிகரமான வருமானத்திற்கு நம்பகமானது.

### விசேஷ ஜுலை விலை ரூ. 14.00. ஜுலை 31 வரை மட்டுமே.

கடந்த 34 ஆண்டுகளாக யூ எஸ் 64 திட்டத்தில் மக்கள் தங்கள் நம்பிக்கையை வைத்தனர், அதனால் சிறந்த பலனையும் பெற்றனர். பாதுகாப்பு, எளிதாக ரொக்கமாக்கும் வசதி மற்றும் கவர்ச்சிகரமான ஆதாயங்கள் போன்ற நன்மைகளை அவர்கள் அனுபவித்துள்ளனர். அவர்களுடைய முதலீடு ஆண்டாண்டு வளருவதையும், அவர்கள் கண்டார்கள். இப்போது யூ எஸ் 64, 20% வருவாய் விநியோகத்தை மீண்டும் அறிவித்துள்ளது. விசேஷ ஜுலை வழங்கீடான யூனிட்டிற்கு ரூ.14.00 விலையில் யூ எஸ் 64 திட்டத்தில் முதலீடு செய்ய இதுவே ஒரு நல்ல வாய்ப்பு. மேற்கொண்டு விவரங்களுக்காக, உங்கள் அருகமைந்த யூடிஐ கிளை அலுவலகத்தை, முக்கிய பிரதிநிதியை அல்லது முகவரை அணுகவும்.

*20% வருவாய் விநியோகத்தை அறிவிக்கிறது.*

## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

*உங்கள் மேலான எதிர்காலத்திற்கு*

ம்யூச்சுவல் பண்ட் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் எல்லா முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்படுபவையாகும். NAV ஏற்ற தாழ்வுகள் ஷேர் மார்க்கெட்டில் நிலவும் காரணங்களுக்கேற்ப மேலேயோ கீழேயோ போகலாம். கடந்த கால சாதனை வருங்கால தீர்வுக்கான உத்தரவாதம் அல்ல. யூ எஸ் 64 என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே தவிர திட்டத்தின் தரத்தையோ வருங்கால வளர்ச்சி அல்லது லாபத்தையோ குறிப்பிடவில்லை. திட்டத்தின் குறிக்கோள்களை அடையும் உத்தரவாதத்தையும் அளிக்கவில்லை. முதலீடு செய்வதற்கு முன் ஆஃபர் டாகுமென்டை கவனமாக படிக்கவும்.

**மண்டல அலுவலகம்:** 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன் : 517101.

**கிளை அலுவலகங்கள் :** • **கோயம்புத்தூர்** போன் : 214973 • **சென்னை** போன் : 517101, 517190 • **மதுரை** போன் : 38186 • **திருச்சி** போன் : 760060

SISTA SAATCHI & SAATCHI - 066/98 C TAM A

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392/ 98 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka

